ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி - எட்டாம்பத்து

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

தீவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது

ஸ்ரீ ஸ்வாமியின்

ஷஷ்ட்யப்தபூர்த்தி நினைவுமாலையின்

பதினெட்டாவது மலராக வெளியிடப்பட்டது

— இரண்டாம் பதிப்பு —

சென்னை, ரத்தினம் பிரஸ் பிராஞ்சில் அச்சிடப்பட்டது

கிடைக்குமிடம் :

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

விலை 2—4—0

1953

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி—எட்டாம்பத்து

## ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுரையோடு கூடியது.

---

### முதல் திருவாய்மொழி—தேவிமாராவார்

உரையவதாரிகை.—கீழ்ச்சென்ற பதிகத்தில், திருவாறன்விளையென்னுந் திருப்பதி
யிலே சென்று அங்கு எம்பெருமான் பெரியபிராட்டியாரும் தானுமாகத் திருவாய்
மொழி கேட்கைக்கு விருப்பத்தோடிருக்கிற விருப்பிலே நாம் திருவாய்மொழி கேட்
பித்து மற்றுஞ்சில கைங்கரியங்களையும்பண்ணி யநுபவிப்போமென்று பாரித்தார்;
அது பாரிப்பளவிலே நின்றதத்தனை யொழிய நினைத்தபடி நிறைவேறப் பெற்றதில்லை.
அதனால் ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய சில திருக்குணங்களில் அதிசங்கை தோன்ற,
அதனை வெளியிடுவது இத்திருவாய்மொழி.

பிராட்டிமார் அருகே யெழுந்தருளியிருக்க, நித்யஸூரிகளு முண்டாயிருக்க,
நினைத்தபடி காரியஞ்செய்து தலைக்கட்டவல்ல சக்தியும் அவனுக்குண்டாயிருக்க, அடி
யார்கள் விரும்பினபடி திருமேனிகளைப் பரிக்ரஹித்துவந்து உதவுமியல்வினையுமிருக்க,
தமக்கும் அபிநிவேசத்தில் குறையில்லாதிருக்க, நினைத்த பரிமாற்றம் பெறாதொழியவே
ஆழ்வார்க்கு வெறுப்பு உண்டாயிற்று; அதனால், எம்பெருமானையே நோக்கி 'பிரானே!
நான் நினைத்திருப்பது மருள்கொல்? அடியார்களுக்கு நீ வசப்பட்டவனென்றும் எல்
லாப்பொருள்களும் நீ யிட்டவழக்கென்றும் இப்படிச் சில குணங்களை நான் உன்னிடத்
தில் இருப்பனவாகக் கொண்டிருந்தேன்; அக்கொள்கை உண்மையன்றோவென்று
இப்போது அதிசங்கிக்க நேர்கின்றது; நானொருவன் தோன்றி உனக்கு இவை பொய்
யாய்ப்போகின்றன போலும்!' என்று விண்ணப்பஞ்செய்கிறார். அசோகவனத்தில்
பிராட்டி "க்யாதঃ ப்ராஜ்ஞঃ க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவঃ, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசঃ
சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்" என்று பெருமாளுடைய குணங்களிலே அதிசங்கை பண்
ணினாற்போலுமிது. "கோவிந்தன் குணம்பாடி—ஆவிகாத்திருப்பேனே" என்கிற
படியே எம்பெருமானுடைய திருக்குணங்களைச் சிந்தனை செய்தே தரித்திருக்க வேண்
டியவர்கள் அவற்றில் அதிசங்கை பண்ணினால் பிறகு ஜீவித்திருக்க வழியில்லாமை
யாலே 'இங்ஙனே அதிசங்கை கொண்ட ஆழ்வாரை இனி நாம் இழக்க நேருமோ?'
என்று எம்பெருமான் அதிசங்கைபண்ணி 'ஆழ்வீர்! இப்படியும் நீர் அதிசங்கை
கொள்ளத்தகுமோ? நாம் உமக்கு ஒன்றும் செய்யவில்லையா? எவ்வளவு செய்திருக்
கிறோமென்பதை நீர் தாமே ஆலோசித்துப்பாரும்; இவ்வளவு செய்த நாம் மேற்
செய்யவேண்டியதையும் அடைவே செய்வோங்காணும்; வீணாக அதிசங்கை கொள்ள
வேண்டா' என்று சொல்லி ஸமாதானம்பண்ண, ஆழ்வாரும் தேறி நின்று அவற்றை
யநுஸந்தித்து இனியராகிறார்.

... ... ... ... *

3447 தேவிமாராவார்திருமகள்பூமி ஏவமற்றமரராட்செய்வார் *
மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம் *
பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணதோர் பவளவாய்மணியே! *
ஆவியேயமுதேயலைகடல்கடைந்தவப்பனே! காணுமாறருளாய்.

| | |
|---|---|
| தேவிமார் ஆவார் | (உன் அழகுக்கும் பெருமைக்கும் தகுதியான) தேவிகளாயிருப்பவர்கள் (யாவரென்னில்;) |
| திரு மகள் பூமி | ஸ்ரீதேவியும் பூதேவியுமாவர்; |
| மற்று | அதற்கு மேலே |
| ஏவ ஆட்செய்வார் | (நீ அந்த திவ்ய மஹிஷிகளோடுகூட) ஆஜ்ஞாபிக்க (அக்கட்டளையின்படி) அடிமை செய்பவர்கள் யாவரென்னில்) |
| அமரர் | நித்யஸூரிகள்; |
| ஆட்சி | உனது ஆளுகைக்கு உட்பட்ட பொருளோவென்னில்; |
| மேவிய மூன்று உலகம் அவை | பொருந்திய மூவுலகங்களுமாம்; |
| நின் உருவம் | உனக்கு அஸாதாரண ரூபங்களோ வென்னில், |
| வேண்டுவேண்டு உருவம் | இஷ்டப்படி பரிக்ரஹிக்கிற திவ்ய வுருவங்களாம்; (இப்படிகளை அடியேனுக்குக் காட்டிக்கொடுத்தளவே யன்றிக்கே) |
| பாவியேன் தன்னை அடுகின்ற | பாவியான என்னை முடிக்க வந்தது போன்றிருக்கின்ற |
| கமலம் கண்ணது | செந்தாமரைக் கண்களும் |
| ஓர் பவளம் வாய் | ஒப்பற்ற பவளம்போன்ற அதர சோபையுமுடைய |
| மணியே | பரஞ்சோதியானவனே! |
| ஆவியே | உயிரானவனே! |
| அமுதே | ஆராவமுதமே! |
| அலை கடல் கடைந்த அப்பனே | அலையெறிகின்ற கடலைக் கடைந்து அமுதமளித்த பிரானே! |
| காணும் ஆறு அருளாய் | (உன்னை நான்) கண்ணாரக் காணும் வகை அருளவேணும். |

* * *—பிரிவில் தரித்திருக்கவொண்ணுதபடி பரமபோக்யதை வாய்ந்திருக்கிற நீ உன்னை நான் காணும்படி அருள்புரியவேணுமென்கிறுர் இப்பாட்டில். தேவிமாராவார் திருமகள் பூமி=திருமகளும் மண்மகளும் எம்பெருமானுக்குத் தேவிமார் என்பது அனைவருமறிந்ததே; அதனை இங்குச் சொல்லுவதற்கு ப்ரயோஜனம் என்னெனில்; குற்றங்களைப் பொறுப்பித்துச் சீற்றத்தையாற்றுவித்துப் புருஷகாரஞ் செய்யக் கடமைப்பட்ட திவ்யமஹிஷிகள் அருகே யிருக்கச் செய்தேயும் நான் கிலேசப்பட வேண்டியிருக்கிறதே! இது தகுதியோவென்று காட்டுகிறபடி. ஏவ மற்றமரர் ஆட் செய்வார்='அமரர்கள் ஆட்செய்பவர்கள்' என்றால் போராதோ? 'ஏவ' என்றும் கூறவேணுமோ வென்னில்; ஆம், கூறவேணும்; ஆட்செய்தலாகிற கைங்கரியம் எப்படி உத்தேச்யமோ, அப்படியே ஏவிக்கொள்ளுகையும் உத்தேச்யமென்பது சாஸ்த்ரார்த்தம். *ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத* என்று இளையபெருமாள் கூறினது காண்க: ஏவிக்கொள்ள வேணுமென்றன்றே அவர் வேண்டினது. ஏவுகிறகாலத்தில் கம்பீரமான திருமிடற்றோசையுண்டாகுமாதலால் அதுகேட்க விரும்புகிறபடி. திருமகள் பூமியாகிற தேவிமாரும் தேவனுமான சேர்த்தியில் கிட்டி நின்று அடிமை செய்வார் நித்யஸூரிகள். இவர்களும் புருஷகார பூதர்களென்னுங் கருத்தினால் இங்குக் கூறப்படுகிறார்கள்; *வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து* (3069) என்பவாதலால். ஆக, தேவிமாரும் நித்யஸூரிகளுமாகிற புருஷகார பூதர்களிருக்கவும் நான் இழக்கலாமோ? என்பது உள்ளுறை.

புருஷகாரஞ் செய்யவல்லவர்கள் குறையற இருந்தாலும் காரியஞ் செய்யவேண்டியவனுக்கு ஐச்வர்யத்தில் குறையிருந்தால் பயனில்லையே; அக்குறையுமில்லை யென்கிறது மேவிய வுலகம் மூன்றவையாட்சி என்பதனால். மூவுலகங்களையுங் காப்பதற்காகத் தன் விருப்பத்தின்படியே அபரிமிதமான விக்ரஹங்களைப் பரிக்ரஹிக்கவல்லவன் என்கிறது வேண்டு வேண்டுருவம் நின்னுருவம் என்பதனால். ரக்ஷணத்திற்கு வேண்டிய [இன்றியமையாத] உருவம் என்றாவது, தன் திருவுள்ளத்திற்கு இசைந்த வுருவம் என்றாவது பொருள் காண்க. ஆக முன்னடிகளிற் சொன்ன பெருமைகளெல்லாம் பொருந்தியிருந்தும் தமக்கு இழவேயான வருத்தந்தோன்றப் பாவியேன் என்கிறுர். அப்பெருமானுடைய கமலக்கண்களும் பவளவாயும் வடிவுமே தமக்குத் தாரகமென்னுமிடம் தோற்றப் பின்னடிகள் அருளிச்செய்கிறுர்.

அலைகடல் கடைந்தவப்பனே ! காணுமாறருளாய்=உன்னை விரும்பாமல் பிரயோஜநாந்தரங்களையே விரும்புமவர்களுக்குங் காரியம் செய்யுமவனன்றோ நீ ; எனக்கு, தேவர்களுக்குப்போலே கடல் கடைய வேண்டா ; கமலக்கண்ணும் பவளவாயும் வடிவுமான அழகைக் காட்டினால் போதும்—என்றாராயிற்று. ... ... ... 1

3448 காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர * வினையேன்
பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ ! *
காணுமாறருளாய் காகுத்தா ! கண்ணா ! தொண்டனேன் கற்பகக்கனியே ! *
பேணுவாரமுதே ! பெரியதண்புனல் சூழ் பெருநிலமெடுத்தபேராளா ! 2

| | | | |
|---|---|---|---|
| காணும் ஆறு அருளாய் என்று என்றே | (உன்னை நான்) காணும் வகை செய்தருள வேணுமென்று பலகாலும் சொல்லிக் கொண்டே | அந்தோ | ஐயோ ! (இவ்வளவேயோ நான் பெற்ற பாக்கியம் !) |
| கலங்கி | (ஆசைப்பட்டபடி காணப்பெறாமையாலே) கலக்கங்கொண்டு | காகுத்தா | இராமனாய்த் தோன்றி எளியனானவனே ! |
| கண்ண நீர் அலமர | கண்ணீர் பரவாநிற்க, | கண்ணா | கண்ணனாய்த் தோன்றி எளியனானவனே ! |
| வினையேன் | (காணப்பெறாத) பாவத்தையுடையேனான நான் | தொண்டனேன் கற்பகம் கனியே | அடியேனுக்குக் கல்பவ்ருக்ஷ பலனாகத் தோன்றியிருப்பவனே ! |
| பேணும் ஆறு எல்லாம் பேணி | (தூதுவிடுகை மடலெடுக்கை முதலாக) எதுஎது செய்யலாமென்று நினைத்தேனோ அதுவெல்லாம் செய்தும் (கிடையாமையாலே) | பேணுவார் அமுதே | ஆசைப்பட்டவர்களுக்கு அமுதம் போன்றவனே ! |
| நின் பெயரே பிதற்றும் ஆறு எனக்கு அருள் | உனது திருநாமங்களையே பிதற்றிக்கொண்டிருக்கும்படியான விதுவேயன்றோ எனக்கு நீ செய்து கொடுத்தவருள் ; | பெரிய தண் புனல் சூழ் பெரு நிலம் எடுத்த பேராளா | விசாலமாய்க் குளிர்ந்த பிரளய வெள்ளத்திலே யழுந்தின மஹாபூமியை உயரவெடுத்த மஹாநுபாவனே ! |
| | | காணும் ஆறு அருளாய் | (உன்னைநான்) காணும்படி க்ருபை பண்ணவேணும். |

* * *—'காணுமாறருளாய்' என்று பிரார்த்தித்தவளவிலும் அருள்செய்யாவிடில் 'இவ்வருள் கிடக்கட்டும், நாம் நமது முயற்சியாலே காணப்பெறுவோம்' என்று நினைத்து ஸ்வப்ரவ்ருத்தியிலே ஊன்றுமவரல்லரே ஆழ்வார் ; எத்தனையுகமானாலும் அவனே காட்டக் காணவேணுமென்கிற விருப்பமொன்றே உடையாரன்றோ. *எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்* (694) என்றாற்போலே அத்தலையில் அருளையே பார்த்து 'காணுமாறருளாய், காணுமாறருளாய், காணுமாறருளாய்' என்றே இந்த வாக்கியத்தையே உருப்போடுமவரன்றோ. அப்படி உருப்போட்டும் காணப்பெறாதவாறே கலங்குவர் ; கலங்கின கலக்கம் உள்ளடங்காமல் கண்ணீராய்ப் பெருகும் ; ஆக இப்படி துடித்துக்கொண்டிருக்கின்றேனே : இவ்வருளையன்றோ என் திறத்தில் நீ செய்திருப்பது ; இதற்குமேல் ஒன்று செய்யத் திருவுள்ளமில்லையோ ? இவ்வளவேயோ என் திறத்தில்அருள் செய்யலாவது ? என்கிறார்.

வினையேன் என்கிறவிடத்து நம்பிள்ளையீடு காண்மின் ;—"இதுக்குமுன்பு இவ்வஸ்துவைக் காண ஆசைப்பட்டாரில் கலங்கிக் கண்ணநீர்பாய்ந்தறிவாரில்லைகிடீர் ; காணவேணுமென்கிற ஆசாலேசமுடையார்க்குத் தன்னைக்காட்டி அவர்கள் கண்ணநீரையும் துடைக்குமவனை ஆசைப்பட்டுக் கிடையாதே கண்ணுங் கண்ணீருமாம்படியான பாபத்தைப் பண்ணினேன்" என்று.

பேணுமாறெல்லாம் பேணி என்றதன் கருத்தாவது—ஆர்த்தியின் கனத்தாலே நான் எது எது செய்ய ஆசைப்பட்டேனோ அதையெல்லாஞ் செய்து முடித்தும் ; அதாவது

தூது விட்டும் அயோக்யதாநுஸந்தானம் பண்ணி அகன்றும், அவன் விரும்பாத நானும் என்னுடைமையும் வேண்டாவென்று வெறுத்தும், மடலெடுக்க முயன்றும், பலகால் ப்ரபத்திபண்ணியும் ஆக இவையெல்லாஞ் செய்தும் என்றபடி. இவ்வளவாக நான் செய்தும் பெற்ற பயன் உன்னுடைய திருநாமங்களையே பிதற்றுவது தவிர வேறொன்றில்லையே ! அந்தோ ! என்றார்.

என் பெயரையே பிதற்றுமாறு அருளினது அருளன்றோ ? ஸம்ஸாரிகளிற்காட்டில் இதுவன்றோ வைலக்ஷண்யம் ; இது செய்து கொடுத்தோமாகில் இன்னமும் என் செய்யச் சொல்லுகிறீர் ஆழ்வீர் ! என்று எம்பெருமான் திருவுள்ளமாக, காணுமாறருளாய் என்கிறார். ஸம்ஸாரிகளிற்காட்டில் விலக்ஷணன் என்னும்படியான இவ்வளவு பெறுவித்தால் போதுமோ ?

[காகுத்தா கண்ணா !] இராமபிரானும் கண்ணபிரானும் வந்து தோன்றிக் காட்சி தந்தாப்போலே தரவேணுமென்றன்றோ நான் வேண்டுவது. உன்னுடைய பரமபோக்யதையையும் பரமோபகாரசீலத்தையும் காட்டித்தந்த நீ தானே உன்னையுங் காட்டித்தரவேணுமென்றாராயிற்று. ... ... .... ... 2

3449 எடுத்தபேராளன்நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவனே ! * அசோதைக்
கடுத்தபேரின்பக்குலவிளங்களிறே! அடியனேன்பெரியவம்மானே ! *
கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டவெங்கடலே ! *
அடுத்ததோருருவாயின்றுநீவாராய் எங்ஙனந்தேறுவருமரே ! 3

| | |
|---|---|
| எடுத்த பேராளன் | நிதியெடுத்த மஹாநுபாவனென்று கொண்டாடப்படுகிற |
| நந்தகோபன் தன் | நந்தகோபனுடைய |
| இன் உயிர் சிறுவனே | இனிமையான உயிர்போன்ற திருக்குமாரனே ! |
| அசோதைக்கு அடுத்த பேர் இன்பம் | (தேவகிப்பிராட்டி வயிறெரிந்து கிடக்க) யசோதைப்பிராட்டியிடம் வந்துசேர்ந்த அளவிறந்த ஆனந்தவடிவனாகி |
| குலம் இளங் களிறே | அக்குலத்திற்கு யானைக்குட்டி போன்றவனே ! |
| அடியனேன் பெரிய அம்மானே | அடியேனுக்கு உன்பெருமைகளெல்லாம் காட்டின பிரானே ! |
| கடுத்த போர் அவுணன் உடல் | போர்புரிவதில் தினவு விஞ்சின இரணியாசுரனுடைய உடலை |
| இரு பிளவு ஆ | இரு துண்டாகும்படி |
| கை உகிர் ஆண்ட | திருக்கையிலுள்ள நகங்களைக் கொண்டு காரியஞ் செய்த |
| எம் கடலே | எம்போல்வார்க்குக் கடல்போன்றவனே ! |
| இன்று | நான் விரும்புமிக்காலத்தில் |
| அடுத்தது ஓர் உரு ஆய் | தகுதியானவொரு உருவைக் கொண்டவனாகி |
| நீ வாராய் | நீ வருகின்றிலையே ! (இப்படி நீ உபேக்ஷித்திருந்தாயாகில்) |
| உமர் | என்போன்றவர்களான (உம்மைச்சேர்ந்த) பக்தர்கள் |
| எங்ஙனம் தேறுவர் | (உன்னை ஸர்வரக்ஷகனென்று) எப்படி நம்புவர்கள் ? |

* * *—அடியவர்க்கு எளியவனென்று பேர்பெற்றிருக்கிற நீ இன்று வந்து உதவாதொழியில் நீ ஆச்ரிதரக்ஷகனென்னுமிடத்தை உன்னடியார்கள் எப்படி நம்ப முடியுமென்கிறார். இப்பாசுரத்திற்கு ஈற்றடி உயிரானது. உமர் எங்ஙனம் தேறுவர் ? என்பதற்கு இரண்டு படியாகப் பொருள் கூறுவர் ; தேறுகையாவது தரித்திருத்தலும் நம்பிக்கை கொள்ளுதலும். நீ முகங்காட்டாவிட்டால் உன்னுடையவர்கள் பிழைப்பர்களோ? (அல்லது) இதுவரை நீ செய்த செயல்களாக இதிஹாஸபுராணங்களில் எழுதப்பட்டுள்ள செய்கைகளை எப்படி நம்புவர்கள் ? என்று இரண்டுபடியாகவும் நிர்வாஹமுளது.

நந்தகோபனுக்கு எடுத்தபேராளனென்று விருதுசாத்துகிறாராழ்வார் ; நிதியெடுத்தவனென்றபடி. எம்பெருமான் நம்மனையிலே வந்து சேரவேணுமென்கிற

நினைவு கனவிலுமின்றி யிருக்கச் செய்தேயும் பரகதஸ்வீகாரமாகத் தானே வந்துநின்று ஸகலபோகங்களையும் பரிபூர்ணாநுபவமாகக் கொடுக்கப் பெற்று "நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே" (710) என்று தேவகிப் பிராட்டியும் வயிறெரியும்படியாக நேர்ந்ததனால் நிதியெடுத்த மஹாநுபாவனென்கை மிகவும் பொருந்தும். பிறவியே தொடங்கி ஏழையாயிருந்தவன் திடீரென்று ஒரு நாளில் கனத்த வாழ்வு பெற்றிருக்கக் கண்டால் 'இவன் நிதி கண்டெடுத்தான்' என்றன்றோ உலகஞ் சொல்லுவது. பேராளன் = பெருமை பொருந்தியவன். "ச்ருதிமபரே ஸ்ம்ருதிமபரே பாரதமபரே பஜந்து பவபீதா:. அஹமிஹ நந்தம் வந்தே யஸ்யாளிந்தே பரம்ப்ரஹ்ம." என்றார் ஒரு பக்த பண்டிதர்; பிறவிக்கடலைக் கடக்கவேண்டி எம்பெருமானையறிவதற்காக உபநிஷத்துக்களையும் ஸ்மிருதிகளையும் இதிஹாஸ புராணங்களையும் தஞ்சமாக அடைவார் அடைக; அவையொன்றுமெனக்கு வேண்டா; யாவனொரு நந்தகோபனுடைய மனைக் கடையிலே பரப்ரஹ்மம் விழுந்துகிடந்ததோ அந்த நந்தகோபனே யெனக்குத் தஞ்சம் —எனபது இந்த ச்லோகத்தின் கருத்து. இதனால் நந்தகோபாலன் பெருமை பேசப்பட்டதாயிற்று. *அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம் அசேஷபும்ஸாம் லப்யோஸி புண்யபுருஷை:* [ஸ்ரீவைகுண்டஸ்தவம்] என்று கூரத்தாழ்வானருளிச் செய்தபடியே ஒவ்வொருவருடைய உள்ளிலும் உறைந்து கிடக்கச் செய்தேயும் பாக்யஹீனர்களால் வெளிக்கண்டு அநுபவிக்கப்பெறாமல் சில பரமபாக்யசாலிகளுக்கே அநுபவிக்கலாம்படியிருக்கும் எம்பெருமான் நிதியாகவே பேசத்தகுந்தவன்; இந்த நிதியை நன்றாக வெடுத்து அநுபவிக்கப் பெற்றவன் நந்தகோபனேயாதலால் இவனை எடுத்த பேராளனென்றது மிகவும் பொருந்தும். அவனுடைய நற்சீவனே கண்ணுக்குத் தோற்றவொரு வடிவுகொண்டு திரிகிறதோ! என்னலாம்படி அமைந்தவனும் கண்ணபிரான்.

அசோதைக்கு அடுத்த பேரின்பம் = நந்தகோபன் நிதியெடுத்த மஹாநுபாவனானாலும் அதிகமாகப் பேரின்பமநுபவித்தது யசோதைப் பிராட்டியே யாவள். *அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்ட அசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே* [பெருமாள் திருமொழி] என்றபடி—ஸர்வநியாமகனை எம்பெருமானைத் தான் நியமித்துக் கட்டவுமடிக்கவும் பெற்றதே அவளுக்கு அடுத்த பேரின்பமென்க. அடுத்த—நினைவின்றியேயிருக்க, தானே வந்து கிட்டின என்றபடி. இங்கு ஈட்டில் அற்புதமானவொரு ஸ்ரீஸூக்தி காண்மின்; —"அந்தமில் பேரின்பத்தைச் சிற்றின்பமாக்கினான்" என்று. அதாவது, இந்நிலத்திலுண்டாகும் இன்பமெல்லாம் சிற்றின்பமென்றும் திருநாட்டிலுண்டாகும் இன்பமொன்றே பேரின்பமென்றும் இருந்த ப்ரஸித்தியை மாற்றி விட்டான் என்றபடி. பரமபதாநுபவத்திற் காட்டிலும் பதின் மடங்கு வீறுபெற்றதாம் யசோதைக்கு ஸ்ரீக்ருஷ்ணாநுபவானந்தம்.

குலவிளங்களிறு—இடைக்குலத்தில் தோன்றிய ஆனைக்கன்று. "வாரணம் பைய நின்றூர்வதுபோல்" என்றும் "வேழப்போதக மன்னவன்" என்றும் "காய்சின மாகளிறன்னான்" என்றுமுள்ள பாசுரங்களை நினைப்பது. யானையானது மிகவும் பலிஷ்டமான பிராணியாயிருக்கச் செய்தேயும் ஒரு கட்டுத்தறியிலே கட்டுண்டிருந்து வருந்துமாபோலே ஸர்வசக்தனான தான் அசக்தனைப் போலே கட்டுண்டிருந்ததற்குச் சேர குலவிளங்களிறே! என்றது. "ஆய்ச்சி உரலோடார்க்கத் தறியார்ந்த கருங்களிறே போலநின்று தடங்கண்கள் பனிமல்குந் தன்மையானை (1143)" என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் இங்குப் பொருத்தமாக நினைக்கத்தக்கது.

அடியனேன் பெரியவம்மானே! = இங்கு ஈடு;—"உன்னை மகனென்றிருப்பார்க்கோ உதவலாவது? முறையுணர்ந்திருப்பார்க்கு உதவலாகாதோ? நான் முறையிலே நின்றவாறே நீயும் முறையிலே நில்லாநின்றாய்; அடியனேனென்று நான் சொல்ல நீ ஈச்வரனாயிராநின்றாய்" என்பதாம். இதனால், 'நந்தகோபனாயும் யசோதையாயுமிருந்து இவனை நியமித்து அநுபவிக்கப்பெற்றிலோமே' என்கிற நிர்வேதமும் ஆழ்வார்க்கு உள்ளதாகத் தோன்றும்.

ஒரு சிறுக்கனுக்கு உதவினைப்போலேயாகிலும் அடியேனுக்கு உதவலாகாதோ என்னுங்கருத்துப்படப் பின்னடிகளருளிச் செய்கிறார். ப்ரஹ்லாதாழ்வானுக்காக, எங்கும் கண்டறியாத விலக்ஷணமான ஒரு திருவுருவத்தைப் பரிக்ரஹித்துக் கொண்டு வந்து விரோதியைக் கீண்டு அருள் செய்தாய்; அப்படி அடியேனுக்காகவும் ஒரு திருவுருவெடுத்து வரலாகாதோ? அன்று உதவின நீ இன்று உதவாததென்?

எங்ஙனம் தேறுவர் உமரே = இதற்கு இரண்டுபடியாகப் பொருள் காண்க; பிரானே! நீ வந்து தோன்ற மாட்டாயாகில் என்னைப் போன்றவர்கள் எப்படி ஜீவித்திருக்கமுடியும்? முடிந்துபோக வேண்டியதே. (அல்லது) ஆபத்காலங்களிலே அடியார்களுக்கு நீ உதவ வருமவன் என்பதை என்னைப்போன்றவர்கள் எப்படி நம்பியிருக்கமுடியும்? ஆபத்ஸகன், ப்ரணதார்த்திஹரன் இத்யாதி திருநாமங்களை மஹர்ஷிகளுக்குக் கைக்கூலி கொடுத்து எழுதுவித்துக்கொண்டான்போலும் என்று நினைக்கும்படியாய் விடாதோ? என்பதாக. நான் தரிக்கும்படிக்கும் உன்னிடத்தில் நான் அவிச்வாஸம் கொள்ளாதபடிக்கும் ஒருருவெடுத்து வரவேணுமென்கிறாராயிற்று. ... ... 3

3450 உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி உன்தனக்கன்பரானா
ரவர் * உகந்தமர்ந்தசெய்கையுன்மாயை அறிவொன்றுஞ்சங்கிப்பன்வினையேன் *
அமரதுபண்ணியகலிடம்புடைசூழ் அடுபடையவித்தவம்மானே! *
அமரர்தமமுதேயசுரர்கள்நஞ்சே என்னுடையாருயிரேயோ! 4

| | |
|---|---|
| அமர் அது பண்ணி | அப்படிப்பட்ட பாரதயுத்தத்தை நடத்தி, |
| அகல் இடம் புடை சூழ் | பூமிப்பரப்பெங்கும் நிறைந்திருந்த |
| அடு படை | கொலைத் தொழிலில் வல்ல சேனையை |
| அவித்த | தொலைத்த |
| அம்மானே | பெருமானே! |
| அமரர் தம் அமுதே | தேவர்களுக்கு அமுதம் போன்று உயிர்ப்பிச்சை யளிக்குமவனே! |
| அசுரர்கள் நஞ்சே | அசுரர்கட்கு விஷம் போன்றவனே! |
| என்னுடை ஆர் உயிரே ஓ | எனக்கு அருமையான உயிர் போன்றவனே! |
| உமர் உகந்து உகந்த உருவம் | உன்னடியார்கள் எப்போதும் விரும்பிய ரூபமே |
| நின் உருவம் ஆகி | நீ கொண்டருளும் ரூபமாகி, |
| உன் தனக்கு அன்பர் ஆனார் அவர் | உன்னுடைய அந்த பக்தர்கள் |
| உகந்து அமர்ந்த செய்கை | உகந்து ஈடுபடுகைக்கு இடமாக நீ செய்த செயல்கள் |
| உன் மாயை | உனது ஆச்சர்ய சேஷ்டிதங்கள் (என்று கொண்டிருக்கையாகிற) |
| அறிவு ஒன்றும் | இந்தவொரு அத்யவஸாயத்திலுங்கூட |
| வினையேன் சங்கிப்பன் | பாவியேன் (இவை பொய்யோவென்று) சங்கைகொள்ள வேண்டியவனாகிறேன். |

* * *—[உமருகந்துகந்தவுருவம்] பிரானே! நீ உன்னை அடியார்களுக்கு விதேயனாக ஆக்கிவைத்திருக்குமிருப்பு ஒன்று உண்டன்றோ; அதையே நான் சிந்தித்து ஆறியிருப்பது. இப்போது அந்தக் குணத்திலும் அதிசங்கை செல்லாநின்றமையால் தரிக்கமாட்டுகின்றிலேனே! என்செய்வேனென்கிறார். எம்பெருமான் அடியார்களுக்கு விதேயனாயிருக்குமிருப்பை விளங்கச் செய்யவல்ல சரிதைகளைப் பின்னடிகளில் பேசுகின்றார்; பூமிப்பரப்படங்கலும் நெளியும்படி மண்ணின் பாரமான சேனைகள் வந்து சூழ்ந்துகொள்ள, *மெச்சூது சங்கமிடத்தான் நல்வேயூதி, பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய், பத்தூர் பெறாதன்று பாரதங்கைசெய்த அத்தூதன்* (118) என்கிறபடியே ஆனைத்தொழில்கள் செய்து சேனைத்தொகையைச் சாடினவனே! தேவர்களுக்காக ஆஸுரப்ரக்ருதிகளோடே அம்பேற்றுப்பண்ணின வியாபாரங்களாலே அவர்களுக்குப் பரமபோக்யனானவனே! பிறப்பாலும் இயல்வாலும் அசுரர்களாயுள்ளவர்களுக்கு ப்ரதீகாரமில்லாத நஞ்சுபோன்றவனே! என்னுடைய ஸத்தைக்கு ஹேதுவானவனே! என்று பின்னடிகளில் ஏத்தி, முன்னடிகளில் தம்முடைய அதிசங்கையை விண்ணப்பஞ் செய்கிறார்.

உமர்—உன்னைச் சேர்ந்தவர்கள் என்றபடி. பக்தர்கள் என்றவாறு. அவர்கள் உகந்த வுருவத்தையே உனக்கு உருவமாகக்கொள்ளுகின்றாய்; அன்றியும், அப்படிப் பட்ட அன்பர்கள் மிகவுகந்து ஈடுபடும்படியான செயல்களையே உனது செயலாகக் கொள்ளுகின்றாய்—என்று நான் அறிந்திருப்பதுவே இதுவரையில் நான் தரித்திருப் பதற்கு ஹேதுவாயிருந்தது. இந்த அறிவுக்கும் நழுவுதல் நேரும்போலிருக்கின்றதே, பாவியேன் என்செய்வேன்! என்பது முன்னடிகளின் தாற்பரியம். உகந்துகந்த என்றது —மிகவுமுகந்த என்றபடி. அறிவொன்றும் சங்கிப்பன்=இந்தவொரு அறிவுக்கும் ஹாநி விளைந்திடுகிறதோவென்று அதிசங்கை கொள்ளா நின்றேனென்றபடி. இவ்வறிவு ஒன்றே என்னுடைய தரிப்புக்கு ஹேதுவாதலால் இவ்வறிவும் கலங்கிற்றாகில் பிறகு தரிக்க விரகில்லையேயென்பது உள்ளுறை. ... ... ... 4

3451 ஆருயிரேயோவகலிடமுழுதும் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த *
பேருயிரேயோபெரியநீர்படைத்து அங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த *
சீரியரேயோமனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந்தேவாவோ *
ஓருயிரேயோவுலகங்கட்கெல்லாம் உன்னைநானெங்குவந்துறுகோ. 5

| | |
|---|---|
| ஆர் உயிரே ஓ | அருமையான உயிராயிருப்பவனே! |
| அகல் இடம் முழுதும் படைத்து | விசாலமான உலகம் முழுவதையும் படைத்து |
| இடந்து | (ஒருகால்) பிரளயார்ணவத்தில் மங்கிப்போகாதபடி இடந்தெடுத்து |
| உண்டு | (ஒருகால் திருவயிற்றிலே வைத்து நோக்கி |
| உமிழ்ந்து | பிறகு வெளிப்படுத்தி |
| அளந்த | (ஒருகால்) மாவலிபக்கல் நீரேற்று அளந்துகொண்ட |
| பேர் உயிரே ஓ | ஸர்வஸ்மாத் பரனே! |
| பெரிய நீர் படைத்து | மஹாஜலமான ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து |
| அங்கு உறைந்து | அங்கே கண்வளர்ந்தருளி |
| அது கடைந்து | அதுபோன்றவொரு பாற்கடலைக் கடைந்து |
| (அது) அடைத்துஉடைத்த | அதுபோன்ற மற்றொரு கடலிலே ஸேதுபந்தம் பண்ணி தநுஷ்கோடியாலே அதனையுடைத்த |
| சீரியரே ஓ | பரபரனே! |
| மனிசர்க்கு தேவர்போல தேவர்க்கும் தேவா ஓ | மனிசர்க்கும் தேவர்க்கும் எவ்வளவு வாசியோ அவ்வளவு வாசி தேவர்க்கும் உனக்கும் போரும்படியாகவுள்ளவனே! |
| உலகங்கட்குஎல்லாம் ஓர் உயிரே ஓ | எல்லா வுலகங்களுக்கும் ஓர் உயிராயிருப்பவனே! |
| நான் உன்னை எங்கு வந்து உறுகோ | அடியேன் உன்னை எங்குவந்து கிட்டப்பெறுவேன்? |

* * *—[ஆருயிரேயோ] ஆழ்வீர்! பேறுபெறுமவர் நீரான பின்பு அதற்குரிய ஸாதநாநுஷ்டானமும் உம்முடைய தலையிலேயாக வேண்டாவோ? அஃது ஒன்று மின்றிக்கே "அறிவொன்றும் சங்கிப்பன்வினையேன்" என்றால் இதுவொரு வார்த்தை யோவென்று எம்பெருமான் திருவுள்ளமாக, நானொரு ஸாதநாநுஷ்டானம் பண்ணி வந்து காண்பதென்று ஒன்றுண்டோ வென்கிறாரிதில். ஆருயிரேயோ=உயிர் நீயாயிருக்க நான் என்ன ஸாதநாநுஷ்டானம் பண்ணி வந்து கிட்டுவேன்? சரீரத்தை ரக்ஷிப்பது எதுவோ அதுவன்றோ உயிர்; சரீரம் தான் தன்னை ரக்ஷித்துக்கொள்வதுண்டோ? கருதரிய வுயிர்க்கு உயிரான நீயிருக்க, சரீரபூதனான நான் ஒரு ஸாதனமனுஷ்டிக்க யோக்யதையுண்டோ? என்பது கருத்து.

"அகலிட முழுதும் படைத்திடந்து உண்டுமிழ்ந்தளந்த" என்றது—நீதானே படைத்த வுலகுக்கு நன்மைசெய்ய வேண்டிய காலங்களில் ஒவ்வொன்றும் நீயே யன்றோ செய்து போருகின்றாய் என்று எடுத்துக்காட்டுகிறபடி. பூமிப்பரப்படங்கலும் நீயே படைத்தாய்; படைக்கப்பட்டவது பிரளயத்திலே நோவுபட மஹாவராஹமாய் எடுத்துக்கொண்டேறினாய்; மற்றுமொருகால் திருவயிற்றிலே வைத்து நோக்கினாய்; உள்ளே கிடந்து களராகபடா வெளிநாடுகாண வுமிழ்ந்தாய்; மஹாபலி அபஹரித்துக்

கொண்டபோது எல்லை நடந்து மீட்டுக்கொண்டாய்; இங்ஙனே ஒவ்வொரு துர்தசையிலும் நீயேயுணர்ந்து நோக்கினையல்லையோ? என்று கருத்தை விரிக்க.

பெருயிரேயோ!=பெரியோனே! என்று வியாக்கியானம் காண்கிறது. 'பேரியரேயோ' என்று பாடமிருந்திருக்கலாமென்று சிலர் எழுதியுள்ளார்கள்; "பெரியரே யென்றது நீட்டலாய் பேரியரேயென்று பாடமாகில் ஸ்வரஸம்" என்றூர்கள்.

முதலடியிலே கூறின செயல்கள் ஸர்வஸாதாரணமாகச் செய்தவை; இரண்டாமடியில் கூறுவன—பிராட்டிக்காக விசேஷித்துச் செய்தவை. *விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்டவெம்பெருமானே!* என்றும் *பலேக்ரஹிர்ஹி கமலாலாபேந ஸர்வச் ச்ரம:* என்றும் சொல்லுகிறபடியே கடல்கடைந்ததும் பிராட்டிக்காக; கடலில் திருவணை கட்டினதும் பிராட்டிக்காக.

மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்குந் தேவாவோ=சோறும் தண்ணீரும் தாரகமான மனிதர்களுக்கும் அம்ருதமே தாரகமான தேவர்களுக்கும் எத்தனைவாசி போருமோ அத்தனைவாசி போருமாயிற்று அந்தத் தேவர்களுக்கும் எம்பெருமானுக்கும். தேவர்களை மநுஷ்ய கோடியிலே யெண்ணலாம்படி பரமவிலக்ஷணனானவனே! என்றபடி. ஒருயிரேயோ உலகங்கட்கெல்லாம்=ஸகல சேதநாசேதநங்களுக்கும் ஏகாத்மாவானவனே! ஆத்மா சரீரத்துக்கு ஹிதசிந்தை பண்ணுமதொழிய, சரீரம் தன்னைத்தானே ரக்ஷித்துக் கொள்வதென்பதுண்டோவென்கை. உன்னை நான் எங்குவந்து உறுகோ?=உன்னை நான் எந்த இடத்திலே வந்து கிட்டுவேனென்று கேட்கிறபடியன்று. "உன்னை நான் என்னுடைய யத்நத்தாலே எங்ஙனே ப்ராபிக்கும்படி யென்கிறூர்" என்பது ஆறுயிரப்படி. "உயிராயிருக்கிற வுன்னை சரீரபூதனான நான் என்ன ஸாதநானுஷ்டானத்தைப்பண்ணி வந்து கிட்டுவேன்? ஆத்மா சரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, சரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண வென்பதொன்றுண்டோ?" என்பது ஈடு. எங்கு என்றது எங்ஙனே யென்றபடி.

உறுகோ=உறுகு ஓ என்று பிரிக்க. உறு என்னும் பகுதியினடியாப் பிறந்த தன்மையொருமை யெதிர்கால வினைமுற்று உறுகு என்பது. இதில் கு விகுதி காலத்தையும் இடத்தையும் காட்டும். ஓகாரம் இரக்கப்பொருளில் வந்தது. ... 5

3452 எங்குவந்துறுகோவென்னையாள்வானே யேழுலகங்களும்நீயே *
அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே அவற்றவைகருமமும்நீயே *
பொங்கியபுறம்பால்பொருளுளவேலும் அவையுமோநீயின்னேயானல் *
மங்கியவருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே. 6

| | |
|---|---|
| என்னை ஆள்வானே | (இதுவரையில்) என்னை நிர்வஹித்துக்கொண்டு போருமவனே! |
| ஏழ் உலகங்களும் நீயே | ஸப்தலோகங்களும் நீயிட்ட வழக்கு; |
| அங்கு | அந்த லோகங்களில் |
| அவர்க்கு அமைத்த | (பலன்களைக் கோருகின்ற) அவரவர்களுக்கு ஆராதிக்கும்படி ஏற்படுத்தின |
| தெய்வமும் | தைவங்களும் |
| நீயே | உன் அவயவபூதங்கள்; |
| அவற்றவை கருமமும் நீயே | அத்தெய்வங்களைக் குறித்து ஆராதனையாகப் பண்ணும் காரியங்களும்நீயிட்டவழக்கு; |

| | |
|---|---|
| பொங்கிய புறம் பால் பொருள் உள ஏலும் | இவ்வுலகங்களிற் காட்டிலும் விஞ்சிப்புறம்புபட்டபொருள்கள் எவ்வளவிருந்தாலும்அவ்வளவும் |
| அவையும் நீ | அவையும் நீயிட்ட வழக்கு; |
| மங்கிய அரு ஆம் நேர்ப்பமும் நீயே | காரணவஸ்தையில் சுருங்கிக் கிடக்கிறஸூக்ஷ்ம சிதசித்வஸ்துக்களும் நீயிட்ட வழக்கு; |
| வான் புலன் இறந்ததும் நீயே | அவ்யக்தத்தையும் வியாபிக்கக் கூடியதாய் கண்முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படுந்தன்மையற்றதானஜீவஸமஷ்டியும் நீயிட்டவழக்கு; |
| இன்னே ஆனால் | இப்படியாமளவில், |

(உன்னை நான் எங்குவந்து உறுகோ? என்று கீழ்ப்பாட்டோடே அந்வயம்)

* * *—[எங்குவந்துறுகோ] இது கீழ்ப்பாட்டுக்கே விவரணமானது. ஸகல லோகங்களும், அவ்வுலகங்களிலுல் ஆராதிக்கப்படுகிற அக்நி இந்திரன் முதலிய தெய்வங்களும், அவற்றினுடைய க்ரியைகளும், உலகத்துக்குப் புறம்புள்ள பதார்த்தங்களும் எல்லாம் நீயிட்ட வழக்கு; ஆதலால் என்னுடைய முயற்சியிஞல் உன்னை நான் எங்ஙனே வந்தடையும்படி? இதற்கு முன்பு நிர்ஹேதுகமாக என்னை நீ விஷயீகரித்தாப்போலே இன்னமும் அந்த க்ருபையிஞலேயே விஷயீகரித்தருளாய் என்கிருர்.

எங்கு வந்து உறுகோ?=ஒருவன் மேருமலையினுச்சியில் நின்ருல் அவனை யொரு நொண்டி சென்று கிட்டுவதென்றுண்டோ? சென்று கிட்டுகைக் குறுப்பாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ஸாதனங்களை யனுஷ்டிக்கத் தமக்கு சக்தியில்லாமை தெரிவிக்கப்பட்டதாமிங்கு. என்னையாள்வானே!=ஆதிமுதல் என்னையாண்டது நீயேயன்றே. இதுவரை எனக்கு நேர்ந்த நிலைகள் எனது முயற்சியிஞலல்லவே; இவ்வளவும் வர நிறுத்தின நீ இனி என்கைபார்த்திருக்கவொண்ணுமோ? என்பது கருத்து. "ஏதாவதீம் கமயிது: பதவீம் தயாளோ: சேஷாத்வலேசநயநே க இவாதிபார:" என்ற தேசிக ஸ்ரீஸூக்தி இங்குக் காணத்தக்கது. ஏழுலகங்களும் நீயே='என்னையாள்வானே!' என்ற வளவேயோ? ஸகல லோகங்களுக்கும் ஆவன செய்பவன் நீயேயன்றே? அபிமுகனுன என்னோடு விமுகர்களான மற்றையாரோடு வாசியற எல்லாரையும் நிர்வஹிப்பது நீயேயன்றே என்றபடி.

'ஏழுலகங்களையும் நானு நிர்வஹிக்கிறேன்; ஒவ்வொருவரும் ஒவ்வொரு தெய்வத்தைப் பணிந்து அந்தந்த தெய்வத்திஞலன்றே ரக்ஷைபெறுவது' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அதற்குச் சொல்லுகிருர்—"அங்கவர்க்கமைத்த தெய்வமும் நீயே அவற்றவை கருமமும் நீயே" என்று. "வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி, அவையவைதோறு அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்ற திருவிருத்தப்பாசுரம் இங்கே நினைக்கத்தக்கது. "இறுக்குமிறையிறுத்துண்ண எவ்வுலகுக்குந் தன்மூர்த்தி நிறுத்திஞன் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே" (3135) என்று கீழே ஸுவ்யக்தமாகவுமருளிச்செய்தார். ஸகல தெய்வங்களும் நீயிட்டவழக்கு; அந்தத் தெய்வங்கள் செய்து போருகிற செயல்களும் உன்னுடைய அநுப்ரவேசத்திஞலாமவையேயன்றி அவை தாமே செய்யுமவையல்ல என்றபடி.

பொங்கிய புறம்பால் பொருளுளவேலும் அவையுமோ நீ='பொங்கிய' என்பதைப் புறம்பிலேயும் அந்வயிக்கலாம், பொருளிலேயும் அந்வயிக்கலாம். இந்த லோகங்களிற்காட்டில் விஞ்சிப் புறம்பான மஹதாதிஸமஸ்தபதார்த்தங்களும் நீ யிட்டவழக்கு. (அல்லது) அண்டத்துக்குப் புறம்பேயுள்ளதாய், "தசோத்தராண்யாவரணநி யாநிச" என்று ஆளவந்தாரருளிச்செய்தபடியே ஒன்றுக்கொன்று பத்துமடங்கு விஸ்த்ருதமானவையும் நீயிட்டவழக்கு. பொங்கிய=ஒன்றுக்கொன்று பத்துமடங்கு விஸ்த்ருதமான என்றபடி. ஈட்டுஸ்ரீஸூக்தி—"ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய் அண்டத்துக்குப் புறம்பாய் அதுக்குக் காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில் அவையும் உன்னதீனம்."

மங்கிய அருவாம் நேர்ப்பமும் நீயே=கார்யப் பொருளாய்க் காணப்படும் நிலைமையழிந்து காரணப்பொருளுக்குரிய ஸூக்ஷ்மாவஸ்தையை யடைந்திருக்கிற அவ்யக்தமும் நீயிட்ட வழக்கு என்றபடி. வான்புலனிறந்ததும் நீயே=வான் என்றது வியாபிக்கக்கூடியது என்றபடி. புலனிறந்தது என்றது இந்திரியங்களுக்கெட்டாமல் அதீந்த்ரியமானதென்றபடி. அவ்யக்தத்தையும் வியாபிக்கக்கூடியதாய் கண் முதலிய கரணங்களுக்கு எட்டாததாய்க் காரணமான ஜீவஸமஷ்டியும் நீயிட்ட வழக்கு என்றதாயிற்று. வான் என்பதனுல் சொல்லப்பட்ட வ்யாபகத்வம் ஸ்வரூபத்திஞலன்று, ஞானத்திஞல் என்று உணர்க. ஜீவாத்மாக்களுக்கு ஞானத்தால் விபுத்வமுள்ளதேயன்றி ஸ்வரூபத்திஞல்

விபுத்வமில்லையென்பது நூற்கொள்கை. வான் — பரமாகாசத்திலேயுள்ள, புலனிறந்ததும் அதீந்த்ரியமான முக்தாத்ம வர்க்கமும் என்றுரைப்பாருமுளர். அதுவுமொக்கும். ஆக, கார்யாவஸ்தையோடு காரணாவஸ்தையோடு முக்தாவஸ்தையோடு வாசியற உன்கை பார்த்திருக்கவேண்டின பின்பு நான் என் காரியத்திற்குக் கடவேனாக ப்ரஸக்தி யுண்டோ? என்றதாயிற்று. ... ... ... ... 6

3453 இறந்ததும்நீயேயெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயானால் *
சிறந்தநின்தன்மையதுவிதுவுதுவென்று அறிவொன்றுஞ்சங்கிப்பன்வினையேன் *
கறந்தபால்நெய்யேநெய்யினின்சுவையே கடலினுளமுதமே * அமுதிற்
பிறந்தவின்சுவையேசுவையதுபயனே பின்னைதோள்மணந்தபேராயா. 7

| | |
|---|---|
| கறந்த பால் | அப்போது கறந்தபால்போல் இனியனானவனே! |
| நெய்யே | அதில் ஸாரமான நெய்போன்றவனே! |
| நெய்யின் இன் சுவையே | நெய்யில் இனிமையான சுவை தானேவடிவெடுத்ததுபோன்றவனே! |
| கடலினுள் அமுதமே | கடலில் தோன்றிய அமுதம் போன்றவனே! |
| அமுதில் பிறந்த இன்சுவையே | அமுதிலுள்ள இனிமையான சுவைதானே வடிவெடுத்தவனே! |
| சுவை அது பயனே | அவ்வினிமையினா லுண்டாகும் ஆனந்தமே! |
| பின்னை தோள் மணந்த பேர் ஆயா | நப்பின்னைப்பிராட்டியை மணம் புணர்ந்த கோபாலக்ருஷ்ணனே! |

| | |
|---|---|
| இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீ | முக்காலங்களிலுள்ள பொருள்களும் நீயிட்டவழக்கு; |
| இன்னே ஆனால் | இப்படியான பின்பு |
| அது இது உது | தூரஸ்தமாயும் ஸமீபஸ்தமாயும் மத்யஸ்தமாயுமுள்ள ஸகல பதார்த்தங்களும் |
| சிறந்த நின் தன்மை | பரபரனான உன்னுடைய ஸ்வபாவங்கள் |
| என்ற அறிவு ஒன்றும் | என்கிற இவ்வறிவு தன்னிலும் |
| வினையேன் சங்கிப்பன் | பாவியேன் அதிசங்கை கொள்பவனாயிரா நின்றேன். |

எல்லாப் பொருள்களும் உனக்கு வடிவாய்க்கொண்டு சேஷமாய் நீயே அவற்றுக்கு ப்ரகாரியாய்—சேஷியாயிருக்கிறாயென்கிற அறிவு ஒன்று கொண்டு தரித்திருக்கிற நான் என் பாபத்தாலே அதிலும் அதிசங்கைபண்ண நேர்ந்துவிட்டதேயென்று நோகிறார். இறந்த காலத்திலுள்ளவையென்ன எதிர்காலத்திலுள்ளவையென்ன நிகழ்காலத்திலுள்ளவையென்ன ஆக முக்காலங்களிலுமுள்ள ஸகல பதார்த்தங்களும் நீயிட்டவழக்காகையாலே அவையெல்லாம் உனக்கு ப்ரகாரமாயிருக்கும்; அவற்றுக்கு நீ ப்ரகாரியாயிருப்பாய்; ஆகையாலே அவற்றுக்கு வந்தது உனக்கு வந்ததாக நினைத்திருப்பாய்—என்கிறவிந்த வுணர்வுகொண்டு தரித்திருந்த வெனக்கு இந்த வுணர்வையும் நெகிழப்பண்ணா நின்றது உன்னைக்கிட்டப்பெறாத விழவு என்றவாறு. சரீரத்திற்கு வரும் துக்கம் ஆத்மாவுக்கு ஆகிறாப்போலே எல்லாருடைய துக்கங்களும் சரீரியான வுன்னது என்கிற ஸம்பந்தஜ்ஞானமொன்றைக்கொண்டு ஜீவித்திருந்ததாகவும் இதற்கும் ஹாநிவரும்போல் அதிசங்கிப்பதாகவும் கூறுகின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம்—இந்த ஸம்பந்தத்தைக்கொண்டு என்னை நீ நோக்கியருளவே வேணுமென்கிற ப்ரார்த்தனையிலே முடிந்து நிற்குமத்தனை.

பின்னடிகளிரண்டும் எம்பெருமானுடைய பரமபோக்யதையைப் பேசுவன. இப்படிப்பட்ட போக்யதையையறிந்த நான் உன்னைவிட்டுத் தரிக்கவும் முடியவில்லையே யென்றவாறு. கறந்தபால்! என்பது தனிப்பட்ட விளி. கறந்தபோதே இயற்கையான ரஸத்தையுடைத்தான பால்போல் பரமபோக்யனே! என்றபடி. பாலின் ஸாரமான நெய்யே!, நெய்யினுடைய இனிய சுவைதானே வடிவெடுத்த தென்னலாம்படி யுள்ளவனே!, கடலிடைத் தோன்றிய அமுதமே!, அவ்வமுதத்தின் இனிமை

தானே வடிவெடுத்ததென்னலாம்படியுள்ளவனே! இனிமையை யனுபவிப்பதனு லுண்டாகும் ஸுகமே வடிவெடுத்தது போன்றுள்ளவனே! என்று இத்தனை சொல்லியும் த்ருப்தி பிறவாமையாலே பின்னைதோள் மணந்த பேராயா! என்று அவன் தன்னையே சொல்லித் தலைக்கட்டுகிறார். நப்பின்னைப்பிராட்டியும் நீயுமான சேர்த்திதானே ஸ்வயம் போக்யமன்றோ? இந்த போக்யதைக்கு ஒரு உவமையிட்டுக் கூறவேணுமோ? என்றவாறு. நப்பின்னையை மணந்ததுபோல என்னையும் மணக்க ப்ராப்தியில்லையோ வுனக்கு என்ற கருத்துங்கொள்ளலாம். ... ... ... ... 7

3454 மணந்தபேராயாமாயத்தால்முழுதும் வல்வினையேனையீர்கின்ற *
குணங்களையுடையாயசுரர்வன்கையர்கூற்றமே கொடியபுள்ளுயர்த்தாய் *
பணங்களாயிரமுமுடையபைந்நாகப்பள்ளியாய் பாற்கடல்சேர்ப்பா *
வணங்குமாறறியேன்மனமும்வாசகமும் செய்கையும்யானுநீதானே. 8

| | |
|---|---|
| மாயத்தால் மணந்த பேர் ஆயா | மிகுந்த ஆசையினால் நப்பின்னையை மணந்துகொண்ட பெருமைதங்கியகோபாலனே! |
| முழுதும் | உன்னுடைய ஒரு குணமும் தப்பாதபடி |
| வல்வினையேனை ஈர்கின்ற குணங்களை உடையாய் | பாவியேனை இருபிளவாக்குகின்றதிருக்குணங்களையுடையவனே! |
| வன்கையர் அசுரர் கூற்றமே | வன்மையை யுடையவர்களான அசுரர்களுக்கு யமன் போன்றவனே! |
| கொடிய புள் உயர்த்தாய் | அவ்வசுரர்களுக்குக் கொடுமை புரியுமியல்பினனான பெரிய திருவடியை த்வஜமாகக் கொண்டவனே! |
| ஆயிரம் பணங்களும்உடைய பை நாகம் பள்ளியாய் | ஆயிரம் படங்களையுடையபரந்த ஆதிசேஷனைப் படுக்கையாகக்கொண்டு |
| பால் கடல் சேர்ப்பா | திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருளுகிறவனே! |
| மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீதானே | மனோ வாக்காயங்களாகிற கரணங்களும் அவற்றையுடைய நானும் நீயிட்டவழக்காயிருக்க. |
| வணங்கும் ஆறு அறியேன் | சுதந்திரமாக வணங்கும் வழியறிகின்றிலேன். |

* * *—ஆழ்வீர்! உம்முடைய அபேக்ஷிதம் நாம் செய்யவேணுமாகில் அதற்கு உறுப்பாக ஓர் அஞ்ஜலியாவது பண்ணமாட்டீரோவென்ன; பிரானே! நானுகச் செய்வதென்று ஒரு செயலுண்டோ? மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீயிட்ட வழக்கான பின்பு என்னுலொரு செயலுண்டோ? நீ தானே என்னை வணங்குவித்துக் கொள்ளவேணுமே யல்லது நான் வணங்குவதாக ஒன்று அறியேன் என்கிறார்.

மாயத்தால் மணந்த பேராயா! என்று அந்வயிப்பது. மாயத்தால்—அபிநிவேசத்தினுல் என்றபடி. நப்பின்னைப்பிராட்டியை மணந்ததுதானே அநுபாஷிக்கப்படுகிறது. வல்வினையேனை முழுதும் ஈர்கின்ற குணங்களையுடையாய்=என்னையுங்கூட ஈடுபடுத்துகின்ற ஸௌசீல்ய ஸௌலப்யம் முதலான திருக்குணங்களையுடையவனே! என்றபடி. ஒவ்வொரு திருக்குணத்தையும் நினைத்து உருகி நைந்து குழைந்து கரைந்தொழிகின்றேனென்றவாறு. "மாயத்தால் முழுதும் மணந்த பேராயா!" என்று அந்வயித்து "ஆச்சர்ய சேஷ்டிதங்களாலே அகில பதார்த்தங்களையும் உகப்பிக்கும் பெருமையையுடைய க்ருஷ்ணனே!" என்றுரைப்பர் பன்னீராயிரவுரைகாரர்.

ஈர்கின்ற குணங்களையுடையாய்! என்கிற விளி இன்சுவைமிக்கது. ஆண்டாள் "குளிரருவி வேங்கடத்து என் கோவிந்தன் குணம்பாடி—ஆவி காத்திருப்பேன்" என்றாள். இவர் "ஈர்கின்ற குணங்களையுடையாய்!" என்றார். குணாநுஸந்தானம் சிலர் தரிக்கைக்கு ஹேதுவும் சிலர் தளருகைக்கு ஹேதுவுமாமென்றபடி. இங்கு நம்பிள்ளையீடு காண்மின்;—"சிலர் குணஜ்ஞானத்தாலே ஜீவித்திருக்க, அது பாதகமாம்படி

பாபத்தைப்பண்ணினேன் ;—அம்புபட்ட புண் மருந்திட்டு ஆற்றலாம்; குணத்தால் வந்த நோய்க்குப் பரிஹாரமில்லையே."

அசுரர்வன்கையர் கூற்றமே!=கண்பாராதே நலிகின்ற அஸுரர்களுக்கு யமனானவனே!. இது இங்கு எதற்காகச் சொல்லுகிறதென்னில்; ப்ரதிகூலர்களான அசுரர்களை அழிக்கிறாப்போலவே அநுகூலர்களான எங்களையுமழிக்கிறாய்; அவர்களை ஆயுதத்தாலே யழிக்கிறாய், எங்களைக் குணத்தாலே யழிக்கிறாய் என்கைக்குச் சொல்லுகிறது. கொடிய புள்ளுயர்த்தாய்!=*பண்கொண்ட புள்ளின் சிறகொலிபாவித்துத் திண்கொள்ளவோர்க்குங் கிடந்தென் செவிகளே* (2978) என்றிருக்குமெம்போலியரைச் சிலபோது வாழ்விப்பதுஞ் செய்பவனே! என்றபடி.

பணங்களாயிரமுமுடைய பைந்நாகப்பள்ளியாய்! தன்னுடைய சேர்த்தியாலே விகஸிதமான பணங்களையுடையனாய், தன்னையநுபவிப்பதனாலுண்டான மகிழ்ச்சிக்குப் போக்குவீடாகப் பல தலைகளையுமுடையனாய், தனக்கும் பிராட்டிமார்க்கும் நினைத்தபடி பரிமாறுகைக்கீடான பரப்பையுடையனாயிருக்கிற திருவனந்தாழ்வான் மேலே திருக்கண்வளர்ந்தருளுமவனே!. பாற்கடல் சேர்ப்பா!=பரமபதத்தை விட்டுத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்து என்னுடைய ரக்ஷணத்திற்கு முற்கோலியிருக்குமவனே!. வணங்குமாறு அறியேன்!=நானாக வணங்குவதென்றொரு விஷயமறிகின்றிலேன்; என்றவாறே, ஆழ்வீர், வணங்குமாறறியேன் என்னலாமோ? உமக்கு மனமொழி மெய்களுண்டு; அவற்றுக்கு ஆச்ரயமான நீருண்டு; வணங்குகைக்குத் தட்டு என்? என்று எம்பெருமான் கேட்பதாகக்கொண்டு மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீதானே என்கிறார். எனக்காயிருப்பதொரு நெஞ்சும் வாக்கும் செய்கையும், எனக்கா யிருப்பதொரு நானுமிருந்தாலன்றோ நான் வணங்கினேனாவது; இவையெல்லாம் நீயிட்ட வழக்காயன்றோ விருக்கிறது; வணங்கவேணுமென்னும் நினைவுண்டு; வணங்கும் விதமறிகின்றிலேனென்றாராயிற்று. ... ... ... .... 8

3455 யானுநீதானேயாவதோமெய்யே அருநரகவையும்நீயானால் *
வானுயரின்பமெய்திலென் மற்றைநரகமேயெய்திலெனெனினும் *
யானுநீதானாய்த்தெளிதோறும்நன்றுமஞ்சுமவன் நரகம்நானடைதல் *
வானுயரின்பம்மன்னிவீற்றிருந்தாய் அருளுநின்தாள்களையெனக்கே. 9

| | |
|---|---|
| யானும் நீதானே ஆவதுமெய்யே | (எல்லாமும் நீ யாகையாலே) யானும் நீதானே யென்கிறவிது உண்மையே; (இதில் ஒரு ஸந்தேஹமில்லை.) |
| அரு நரகு அவையும் நீ | என்றால் பொறுக்கமுடியாத ஸம்ஸாரத்திலுள்ளவையெல்லாம் நீயிட்ட வழக்கே; |
| ஆனால் | ஆனபின்பு |
| வான் உயர் இன்பம் எய்தில் என் | திருநாட்டிலே போய்ச் சிறந்த ஆனந்தத்தைப் பெற்றிருந்தாலென்ன? |
| மற்றை நரகமே எய்தில் என் | அதற்கு எதிர்த்தட்டான ஸம்ஸார நரகத்தை அடைந்தால்தானென்ன? |
| எனினும் | என்று இப்பொருளுண்டேயாகிலும், |
| யானும் நீ தான் ஆய் தெளிதொறும் | நான் உனக்கடியேனென்பதையுணரும்போதெல்லாம் |
| நரகம் நான் அடைதல் நன்றும் அஞ்சுவன் | ஸம்ஸார நரகவாழ்க்கைக்கு மிகவும் பயப்படாநின்றேன்; |
| வான் உயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய் | பரமபதப்பேரின்பத்தைநிரந்தரமாகவுடையையாய்க்கொண்டு எழுந்தருளி யிருக்குமவனே! |
| நின் தாள்களை எனக்கு அருளு | உன் திருவடிகளை எனக்குத் தந்தருளவேணும். |

* ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குதঃ* என்ற ப்ரஹ்லாதாழ்வானுடைய அத்யவஸாயமுள்ளவர்களுக்கு எல்லாம் எம்பெருமானுடைய விபூதியாகவே தோற்றக் குறையில்லையாதலால் இப்படிப்பட்ட அத்யவஸாயம் ஆழ்வார் தமக்கும்குறைவற உண்டாகியிருக்கும்போது இவர் ஓரிடத்தை த்யாஜ்யபூமி

யாகவும் மற்றோரிடத்தை ப்ராப்யபூமியாகவும் கொள்வதற்கு நியாயமில்லையே ; இவ்வுலகத்திலிருப்பைக்கழித்து அவ்வுலகத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து அங்கேயே வைக்கவேணுமென்று நிர்ப்பந்திப்பதானது மேற்சொன்ன அத்யவஸாயத்திற்கு இணங்காதே என்றொருசங்கை தோன்றக்கூடியதுண்டு; அதற்குப் பரிஹாரமாக அவதரித்தது இப்பாசுரமென்க.

யானும்நீதானேயாவதோ மெய்யே=* ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம * என்கிற சாஸ்த்ரார்த்தத்தில் ஒரு ஸந்தேஹமும் இல்லையென்றவாறு. சாஸ்த்ரார்த்தம் இதுவானபின்பு அருநரகவையும் நீ என்பதும் சாஸ்த்ரார்த்தமாகத் தேறிநிற்கும். இங்கு அருநரகு என்கிறது ஸம்ஸாரநிலம். இந்நிலத்திலுள்ள பொருள்களையெல்லாம் உன்னைப்பார்ப்பது போலவே பார்க்கத்தடையில்லையென்றவாறு. இப்படியான பின்பு, ஸம்ஸாரவிபூதி ஹேயமென்றும் நித்யவிபூதி உபாதேயமென்றும் கொள்வதற்குப் பொருத்தமில்லாமை கூறப்படுகிறது இரண்டாமடியினால்.

ஆனாலும் இந்த ஸம்ஸாரவாழ்க்கையில் அருவருப்புத்தானுள்ளது என்றார் மூன்றாமடியினால். வானுயரின்பமெய்தினாலென்ன? மற்றைநரகமேயெய்தினாலென்ன? என்று இரண்டையும் துல்யமாகப் பாவிப்பதற்கு எந்தத் தெளிந்தஞானம் [அத்யவஸாயம்] ஹேதுவோ, அந்தஞானம் நிலைநின்றிருந்தாலன்றோ ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் இல்லாதிருக்கலாம். அந்த ஞானம் நிலைத்திருப்பதற்கு இந்த நரகநிலம் மிகவும் விரோதியாகையாலே இந்நிலத்திலிருப்புக்கு மிகவும் அஞ்சவேண்டியதாயிருக்கின்றது என்பது மூன்றாமடியின் தேர்ந்த கருத்து. இங்கே இருபத்தினாலாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்க; "சேஷத்வஜ்ஞானத்துக்கு விருத்தமான ஸம்ஸாரத்திலேயிருக்கில் அகப்பட்ட இந்த ஞானத்தையுமிழப்பனென்று நான் மிகவும் அஞ்சாநின்றேன்." என்று. ஆகவே தம்முடைய பிரார்த்தனையைத் தலைக்கட்டியேயாகவேணுமென்கிறது ஈற்றடி. ... ... ... ... ... ... 9

3456 தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறா *
தோள்களையாரத்தழுவியென்னுயிரை அறவிலைசெய்தனன்சோதீ *
தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் *
தாள்களாயிரத்தாய்பேர்களாயிரத்தாய் தமியனேன்பெரியவப்பனே. 10

| | |
|---|---|
| தாள்களை எனக்கே தலைத்தலை சிறப்ப தந்த | (உனது) திருவடிகளை எனக்கே அஸாதாரணமாகத் தலைமேல் சிறக்கும்படி தந்தருளின |
| பேர் உதவி | மஹோபகாரத்திற்கு |
| கைம்மாறு ஆ | பிரதியுபகாரமாக, |
| என் உயிரை | எனது ஆத்மவஸ்துவை |
| தோள்களை ஆர தழுவி | தோள்களை நன்றாகத் தடவிக் கொடுத்து |
| அற விலை செய்தனன் | பரிபூரண விக்ரயம் செய்துவிட்டேன்; |
| சோதீ! | நான் தந்த விதனைப் பெற்று அபூர்வலாபம் பெற்றதாகக் களித்து விளங்குமவனே |
| தோள்கள் ஆயிரத்தாய் | (அந்தக்களிப்பினாலே பணைத்த) பலபல திருத்தோள்களையுடையவனே! |
| முடிகள் ஆயிரத்தாய் | பலபல திருமுடிகளையுடையவனே! |
| துணை மலர் கண்கள் ஆயிரத்தாய் | ஒன்றோடொன்றொத்த மலர் போன்ற திருக்கண்களையுடையவனே! |
| தாள்கள் ஆயிரத்தாய் | பலபல திருவடிகளையுடையவனே! |
| பேர்கள் ஆயிரத்தாய் | பலபல திருநாமங்களையுடையவனே! |
| தமியனேன் பெரிய அப்பனே | அகிஞ்சநனான வெனக்கு இன்னமும் எவ்வளவோ செய்யப் பாரித்திருக்குமவனே! |

நானாசைப்பட்டபடியே திருவடிகளை யெனக்குத் தந்தருளின சிறந்தவுதவிக்குக் கைம்மாறாக இவ்வாத்மவஸ்துவை எம்பிரானே! உனக்கு அர்ப்பணஞ் செய்தேனென்கிறார்.

“ தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத்தந்த பேருதவி ” என்கிறாரே ; எம்பெருமானுடைய திருவடிகள் இவர்க்குப் பரிபூர்ணத்ருப்தியாகக் கிடைத்து விட்டனவோ ? என்னில் ; ஸம்ஸாரிகளெல்லோரும் உண்டியே உடையே உகந்தோடித் திரியாநிற்க, தாம்மாத்திரம் அப்படியல்லாமல் எம்பெருமானது திருவடிகளையே தாரகபோஷக போக்யமாகக் கொண்டிருக்கும்படி பெற்றவோருதவியையே இங்குப் பேசுகிறாரென்க. ஆறாயிரப்படியருளிச்செயல்—“ஸம்ஸாரிகளெல்லாரும் ப்ராக்ருதவிஷயைக தாரக போஷக போக்யராயிருக்கச்செய்தே என்னை உன் திருவடிகளையே தாரகபோஷக போக்யமாயிருக்கும்படி பண்ணியருளினாய் ; இந்த மஹோபகாரமே அமையாதோ ? இவ்வுபகாரத்துக்குக் கைம்மாறாக என்னுடைய ஆத்மாவை உனக்கே அடிமையாகத் தந்தேன்......” என்பதாம். “ இப்போது திருவடிகளைக்கொடுக்கையாவது—ஸம்ஸாரத்தோடு பொருந்தாதபடியையும் தன்னையொழியச் செல்லாதபடியையும் தமக்குப் பிறப்பித்த தசையை ப்ரகாசிப்பிக்கை......ஸ்ரீ வால்மீகி பகவான் முதலாழ்வார்கள் தொடக்கமானாருண்டாயிருக்க என்பக்கலிலே விசேஷகடாக்ஷம் பண்ணி... ...” என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

இப்பேருதவிக்குக் கைம்மாறாக எம்பெருமானுக்கு ஆத்மவஸ்துவைக் கன்யகாதானம் பண்ணுகிறாராயிற்று ஆழ்வார். ஒருவனுக்கொருவன் கன்னிகையைக் கொடுக்கும்போது தோள்களையாரத் தழுவிக் கொடுப்பது வழக்கம் ; ஆத்மவஸ்துவுக்கு அவயவமொன்றுமில்லை யாகிலும் தம்முடைய அபிநிவேசாதிசயத்தாலே அது தாளுந்தோளும் முடியுமாய்ப் பணைத்ததாகக்கொண்டு “ தோள்களையாரத் தழுவியென்னுயிரை அறவிலை செய்தனன் ” என்றார். பரம ஸந்தோஷத்தோடே கொண்டாடிக்கொண்டு ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகிறேனென்றவாறு. “ எனதாவியாவியும் நீ—எனதாவியார் யானார் ?” “ மனமும் வாசகமும் செய்கையும் யானு நீ தானே ” என்றவற்றை மறந்தார் ஹர்ஷத்தாலே.

“ என்னுயிரை அறவிலை செய்தனன் ” என்று ஆழ்வார் சொன்னவாறே எம்பெருமான் தனக்கொரு அபூர்வவஸ்து கிடைத்ததுபோலவே புகர்பெற்று விளங்கினானாயிற்று ; அதைக் கீழ்க்கண்ணாலே கண்டறிந்தவாழ்வார் சோதீ ! என்று நெஞ்சுகுளிர விளிக்கிறார். இவ்வளவு மாத்திரமேயோ ? அவயவங்களும் சதசாகமாகப் பணைக்கத் தொடங்க, பிரானே ! என்னுடைய அற்பவாக்கியத்தைக்கொண்டு இப்படியும் உடல் பூரிப்பாயோ ? இது என்ன பித்து ! என்கிறார் பின்னடிகளால். இங்கு நம்பிள்ளையருளிச்செய்யும் ஸ்ரீஸூக்திகள் காணீர் :—“ ஒரு ஸம்ஸாரியை லபித்து அவாப்தஸமஸ்த காமனானவன் இப்படி ஹ்ருஷ்டனானானென்கிறவிது கூடுமோவென்னில் ; ஸார்வபௌமனான க்ஷத்ரியனுக்கு ஓருயர்த்தியுண்டென்றா, அபிமதையான மஹிஷி பக்கலிலே சாபலமின்றிக்கே யொழியுமோ ? அவாப்தஸமஸ்தகாமத்வமும் ப்ரமாண ஸித்தமாய் ஆச்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ரஸித்தமானால் அப்படியே கொள்ளுமத்தனையன்றோ.” ... .... ... ... ... 10

3457 பெரியவப்பனைப்பிரமனப்பனை உருத்திரனப்பனை * முனிவர்க்
குரியவப்பனையமரரப்பனை உலகுக்கோர்தனியப்பன்தன்னை *
பெரியவண்குருகூர்வண்சடகோபன் பேணினவாயிரத்துள்ளும் *
உரியசொன்மாலையிவையும்பத்திவற்றால் உய்யலாந்தொண்டீர்நங்கட்கே. 11

| | | | |
|---|---|---|---|
| பெரிய அப்பனை | எல்லாரினும் பெருமைபெற்ற ஸ்வாமியும் | முனிவர்க்கு உரிய அப்பனை | ஸநகர் முதலிய முனிவர்கட்கும் தகுதிவாய்ந்த ஸ்வாமியும் |
| பிரமன் அப்பனை | உலகங்களைப் படைத்தவனான பிரமனையும் படைத்தவனும் | அமரர் அப்பனை | ஸகல தேவர்களுக்கும் ஸ்வாமியும் |
| உருத்திரன் அப்பனை | ஸம்ஹாரக்கடவுளாகிய ருத்ரனுக்கும் தலைவனும் | உலகுக்கு ஓர் தனி அப்பன் தன்னை | ஸகல லோகங்களுக்கும் ஒப்பற்ற நாயகனுமானவனைக் குறித்து |

| | | | |
|---|---|---|---|
| பெரியவண்குருகூர்வண் சடகோபன் | ஆழ்வார் | உரிய சொல்மாலை இவை பத்தும் இவற்றால் | தகுந்த சொற்சேர்த்தி வாய்ந்த இப்பத்துப் பாசுரங்களினால் |
| பேணின ஆயிரத்துள்ளும் | ஆதரித்துச்சொன்ன ஆயிரத்தினுள்ளும் | தொண்டீர் நங்கட்கு உய்யலாம் | தொண்டர்களே! நாம் உஜ்ஜீவிக்கவமையும். |

இப்பதிகத்திற் சொன்ன பொருள்களையெல்லாம் சுருங்கச் சொல்லி, இப்பதிகம் கற்றார்க்கு எம்பெருமானைப் பெற்று உஜ்ஜீவிக்கை எளிதாமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். உபயவிபூதிநாதனாய் நான்முகனுக்குத் தந்தையாய் உரத்திருனுக்கு நிர்வாஹகனாய் ஸநகஸநந்தநாதி மஹர்ஷிகளுக்கும் அஸாதாரண சேஷியாய் மற்றுள்ள தேவர்களுக்குமப்பனாய், கிம் பஹுநா? ஸகலலோகங்களுக்கும் ஏகநிர்வாஹகனான எம்பெருமானைக்குறித்து ஆழ்வாரருளிச் செய்தவாயிரத்தில் இப்பத்துப் பாசுரங்களை யோதவே நெடுநாள் பகவத்விஷயவிமுகராய் விஷயாந்தரப்ரவணராய்ப் போந்த நமக்கும் உஜ்ஜீவிக்கப் பெறலாகுமென்றாராயிற்று. .... ... ... 71

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்து முதல்திருவாய்மொழியுரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—இரண்டாந்திருவாய்மொழி—நங்கள் வரிவளை.

உரையவதாரிகை; எம்பெருமான் ஆச்ரித பரதந்திரன், ஸர்வ நிர்வாஹகன் என்றிருந்தோம்; இவையும் நம்மைத்தோற்றிப் பொய்யாகிறதோவென்று அவன் குணத்திலும் ஸ்வரூபத்திலும் அதிசங்கைபண்ணின ஆழ்வாரை ஒருவாறு தேற்றித் தெளிவித்தானெம்பெருமான் கீழ்த்திருவாய்மொழியில். உண்டான அதிசங்கை தீர்ந்த வளவேயல்லது தமக்கு அபேக்ஷிதமான பாஹ்ய ஸம்ச்லேஷத்தைப் பெற்றாரல்லரே ஆழ்வார். அதனால் ஆழ்வார்க்கு மற்றோர் அதிசங்கையுண்டாயிற்று; அதாவது— ஸம்ஸாரத்திலே நமக்கு நசையில்லையென்று நாம் எண்ணியிருக்கின்றோமானாலும் * உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறியும் ஸர்வவேச்வரனுடைய திருவுள்ளமறிய நமக்கு ஸம்ஸாரருசி யிருக்கின்றதுபோலும். இல்லையாகில் எம்பெருமான் நம்மை உபேக்ஷிக்க ப்ரஸக்தியிராதே; உபேக்ஷிக்கக் காண்கிறோமாதலால், நமக்கு ஸம்ஸாரருசி இன்னமும் அறவில்லையென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கக்கூடும். ஸர்வஜ்ஞனான அவன் அங்ஙனே திருவுள்ளம்பற்றினால் அது பொய்யாக இருக்க மாட்டாதே. நம்மையுமறியாமல் நமக்கு ஸம்ஸாரருசி உள்ளத்தினுள்ளே உறைகின்றதோ என்னவோ? என்கிற சங்கை உண்டாயிற்று. அதனால் ஆத்மாத்மீயங்களில் தாம் நசையற்றபடியை எம்பெருமான் திருவுள்ளத்திலே படுத்த நினைத்தாராழ்வார் அதை நேராக விண்ணப்பஞ் செய்யாதே தோழியோடு ஸம்வாதமாகிற அந்யாபதேச முகத்தாலே அறிவிக்கிறபடியாயிற்று இத்திருவாய்மொழி. * காலம் பலசென்றுங் காண்பதாணை உங்களோடெங்க ளிடையில்லையே * என்றும் * பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு * என்றுமுள்ள பாசுரங்கள் இத்திருவாய்மொழிக்கு உயிரானவை.

இத்திருவாய்மொழியில் அந்யாபதேச ப்ரகாரமிருக்கிறபடி யென்னென்னில்;— ஸர்வேச்வரனோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி, மறுபடியும் அவன்தானே வரக் கண்டிருக்கை தவிர்ந்து தானே புறப்படுவாளாய் அவனிருந்த தேசத்தேறப் போகமுயல,

இது கண்ட தோழிமார் முதலானோர் 'உனக்குப் படிகடந்துபுறப்படுகையாகிறவிது ஆகாது காண்' என்று ஹிதஞ் சொல்லி மீட்கப்பார்க்க: அவளைக்குறித்து, பகவத் விஷய மொன்று தவிர மற்று எதிலும் தனக்கு நசையில்லாதபடியைச் சொல்லி அவர்களது பேச்சுக்கு இணங்க முடியாமை கூறுகிறது. ... ... ... *

3458 நங்கள்வரிவளையாயங்காளோ நம்முடையேதலர்முன்புநாணி *
நுங்கட்கியானொன்றுரைக்கும்மாற்றம் நோக்குகின்றேனெங்குங்காணமாட்டேன் *
சங்கஞ்சரிந்தனசாயிழந்தேன் தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன் *
வேங்கட்பறவையின்பாகனெங்கோன் வேங்கடவாணனைவேண்டிச்சென்றே. 1

| | |
|---|---|
| வரி வளை நங்கள் ஆயங்காளோ | அழகிய வளையணிந்த நம்முடைய தோழிகளே! |
| நம்முடை ஏதலர் முன்பு நாணி | நம்மிடத்துப் பகைபாராட்டுகின்ற தாய்மாரின் முன்பு சொல்ல வெட்கப்பட்டு |
| நுங்கட்கு யான் உரைக்கும்மாற்றம் நோக்குகின்றேன் | உயிர்த் தோழிகளான வுங்களுக்குமாத்திரம் செவிப்படும்படி நான் ஒரு வார்த்தை சொல்லப்பார்க்கின்றேன்; |
| எங்கும் காண மாட்டேன் | ஆனாலும், என்னுடைய நிலைமையை நான் ஒரு விதத்திலும் பாசுரமிட்டுச் சொல்லும் வழி அறிகின்றிலேன்: (ஆகிலும் சொல்லுகேன் கேண்மின்;) |
| வெம் கண் பறவையின் பாகன் எம் கோன் | வெவ்விய பார்வையையுடைய பெரிய திருவடியைநடத்துமவனாய் அஸ்மத்ஸ்வாமியான |
| வேங்கடம் வாணனை வேண்டிசென்று | திருவேங்கடமுடையானைக் காணவாசைப்பட்டுப் புறப்பட நினைத்ததுவே காரணமாக |
| சங்கம் சரிந்தன சாய்இழந்தேன் | கைவளைகள் கழன்றனவென்னும்படி இளைத்தேன்; மேனியொளியை இழக்கப் பெற்றேன்; |
| தடமுலை பொன் நிறம்ஆய் தளர்ந்தேன் | தடமுலைகள் பசலைநிறம் பூக்கப் பெற்று உடலும் தளர்ந்தவளானேன். |

* * *—தலைமகள் மேனிமெலிந்து வாடிக்கிடக்கிறபடியைக்கண்ட தோழிகள் நீ இங்ஙனேயானமைக்குக் காரணமென்? சொல்லாய் என்ன; இவள் வெட்கத்தாலே ஒன்றுஞ் சொல்லாதிருக்க, 'நங்காய்! உகவாத பிறர்க்கன்றோ வெட்கப்படவேண்டுவது; எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ? உனது உள்ளத்திலுள்ளதை உள்ளபடி சொல்லலாகாதோ' வென்று தோழியர் நிர்ப்பந்தித்துக்கேட்க, பிறர்க்கு மறைத்து உங்களுக்குச் சொல்லலாம்வார்த்தை ஒன்றும் எனக்குத் தோன்றவில்லையே; எனது நிலைமையை நீங்கள் கண்ணால் காண்கின்றீர்களன்றோ; திருவேங்கடமுடையானைச் சென்று தொழுதுவருவோமென்று நினைத்தவளவிலே இந்நிலையெய்தினேன்காண்மின் என்று அவர்களுக்கு மறுமாற்றமுரைப்பதாயிராநின்றது இப்பாட்டு.

ஆயங்காளோ வென்றது தோழிகளே! என்றபடி. அவர்களுக்கு வரிவளையென்று விசேஷணமிட்டது ஒரு கருத்தோடு கூடியது; சுகமோ துக்கமோ நமக்கு ஒத்திருக்க வேணுமென்று பலகாலும் சொல்லிவந்த நீங்கள் இப்போது கைவளை கழலாதிருப்பதும் நான் வளை கழன்றிருப்பதும் கண்டீர்களன்றோ; தோழிகளான நீங்கள் இப்படியிருக்கத் தகுமோ? என்பது கருத்து. ஆனால் ஸுக துக்கங்களை ஸமமாகக் கொண்டிருக்கிற தோழிகள் இப்படி இருப்பதற்குக் காரணமென்? இவள் வளை யிழந்திருக்க அவர்கள் வளையிட்டிருப்பர்களோ? என்னில்; இதற்கு ஈட்டிலருளிச்செய்வது காண்மின்;— "இவளைத் தரிப்பிக்கைக்காக அவர்களும் வருந்தி தரித்திருப்பர்களிறே. பிராட்டியைப் பிரிந்தவிடத்தில் பெருமாளிற் காட்டிலும் தம்முடைய காவற்சோர்வாலே வந்ததென்று தளர்த்தி இரட்டித்திருக்கச் செய்தேயும் பெருமாள் மிகத்தளருவரென்று தம்முடைய தளர்த்தி தோற்றாதபடி இளையபெருமாள் தரித்திருந்தாப் போலே இவர்களும் தரித்திருப்பர்கள் வளையை." என்று.

நம்முடையேதலர்முன்பு நாணி=ஏதலரென்று சத்துருக்களுக்குப் பெயர்; தலைவிக்கு சத்துருக்கள் யாரென்னில்; ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கிற தாய்மார்களே சத்துருக்

களாவர். ஸ்வாபதேசத்தில், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையே தாயாகவும், பேற்றுக்குப் பதறுகையே மகளாகவும் சொல்லப்படுவது. த்வரைக்கு அத்யவஸாயம் விரோதியென்றுணர்க

'நம்முடையேதலர்' என்றதற்கு ஆசார்யஹ்ருதயத்தில் விசேஷ ஸ்வாபதேச மருளிச்செய்யப்படுகிறது. அதில் இரண்டாம் பிரகரணமுடிவில் (139ஸூ) "மகள் நம் முடையேதலர் யாமுடைத்துணையென்னும் ஸித்த ஸாதந ஸாத்யபரரை" என்றுள்ளது. பஹிரங்க சத்ருக்களென்றும் அந்தரங்க சத்ருக்களென்றும் சத்ருக்களை இரண்டு வகை யாகப் பிரித்து, கர்மஜ்ஞாநாதி உபாயாந்தரங்களிலே ஊன்றினவர்களை பஹிரங்க சத்ருக்களென்றும், ஸித்தோபாயபூதனை அவனுடைய உபாயத்வத்திலே ஊன்றி நின்று, 'பதறுதல் பாரதந்திரியத்திற்குச் சேராது' என்று நிஷேதிக்கிற ஸித்தோபாய நிஷ்டரை அந்தரங்கசத்ருக்களென்றும் சொல்லுகிறது. இப்பாசுரத்தில் 'ஏதலர்' என்று ஸாமாந்யமாகச் சொல்லாமல் 'நம்முடையேதலர்' என்று விசேஷித்துச் சொல்லுகையாலே அந்தரங்க சத்ருக்களே இங்குப் பொருளாக வமையும். ஸித்தோ பாய நிஷ்டைக்கு ப்ரதிகூலரான ஸாத்யோபாய நிஷ்டரைத் தாய்மார் சத்ருக்களாக நினைத்திருப்பர்; பதற்றத்திலே நின்ற மகளுடைய நினைவுக்கு அது எதிராகையாலே அப்படிப்பட்ட நினைவுடைய தாய்மாரை இவள் அந்தரங்க சத்ருவாக நினைக்கத் தகுதி யுள்ளது. ஆகவே, இங்கு 'நம்முடையேதலர் முன்பு' என்றது—தாய்மார்முன்பு என்றே பொருள்பட்டு நிற்குமென்க இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி—"இவளுக்குச்சில சத்ருக்கள் இல்லையிறே; ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கிற தாய்மாரிறே சத்ருக்கள்." என்பதாம். அவர்கள்முன்பு லஜ்ஜித்து என்றது—அவர்களுக்குச் சொல்லாமல் என்ற படி. தாய்மார்க்குச் சொல்லா தொழிந்தாயாகிலும் எங்கட்குச் சொல்லலாகாதோ?' என்று தோழிகள் கேட்டபடியாலே; அவர்களுக்குச் சொல்லாது மறைத்துவைத்து உங்களுக்குச் சொல்லலாம்வார்த்தை என்ன விருக்கிறது, ஒன்றும் சொல்லத் தெரிய வில்லையேயென்றுளாயிற்று.

ஆனாலும் சிறிது சொல்லென்னச் சொல்லுகிறாள் சங்குசரிந்தனவென்று தொடங்கி. * என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே * என்று ஆண்டாளருளிச்செய்ததுபோல, என்னுடைய சரிவளையைச் சரிவளையே யாக்கினர் தலைவர் என்கிறாள் போலும் பராங்குசநாயகி. மூன்றுமடி முழுதும் இழவுசொல்லுகிறது. இழந்தவிழவுக்கு ஹேது சொல்லுகிறது நான்காமடி. பரமபதத்திலிருப்பை ஆசைப் பட்டேனல்லேன்; நமக்குக் காட்சி தருகைக்கு வந்து நின்றவிடத்தே ஆசைப்பட்டே னித்தனை; அதற்குப் பெற்ற தண்டனை இது—என்றுளாயிற்று.

[வெங்கட்பறவையின்பாகன்] பறவைக்கு 'வெங்கண்' என்று விசேஷணமிட்டதற்கு அநுகூலமாகவொரு பொருளும் பிரதிகூலமாக வொருபொருளுமருளிச்செய்வர். கருத் மான் விரோதிகளின்மேலே வெவ்விய கண்களைச் செலுத்தி அவர்களை முடித்துப் பெரு மானை இங்குக் கொணரவல்லவன், அவனிடத்துக் குறையில்லை என்பதாக முதற் பொருள். ஸம்ச்லேஷதசையிலே பிரித்துக் கொண்டுபோமவனை வெவ்வியன் என்பதாக இரண்டாம்பொருள். * அக்ரூரஃ க்ரூரஹ்ருதயஃ * என்ற கோபிகளின் வார்த்தை இதற்குச் சார்பாகும். வேண்டிச்சென்று என்றது—விரும்பினபடியாலே யென்று பொருள்பட்டு நிற்கிறது. சாய் என்றது 'சாயா' என்ற வடசொல்லின் விகாரம். ... ... 1

3459 வேண்டிச்சென்றேன்றுபெறுகிற்பாரில் என்னுடைத்தோழியர்நுங்கட்கேலும் *
ஈண்டிதுரைக்கும்படியையந்தோ காண்கின்றிலேனிடராட்டியேன்நான் *
காண்டகுதாமரைக்கண்ணன்கள்வன் விண்ணவர்கோன்நங்கள்கோனைக்கண்டால்*
ஈண்டியசங்கும்நிறைவுங்கொள்வான் எத்தனைகாலமிளைக்கின்றேனே. 2

| | |
|---|---|
| ஒன்று வேண்டி சென்று | என்னிடத்தில் ஒன்றை யபேக்ஷித்து வந்து |
| பெறுகிற்பாரில் | பெறுகின்றவர்களுக்குள்ளே |
| என்னுடை தோழியர் | தலைமைபெற்ற உயிர்த்தோழிகளான |
| நுங்கட்கேலும் | உங்களுக்குங்கூட |
| ஈண்டு இது உரைக்கும் படியை | இப்போது எனக்கு ஓடும் நிலைமையைப் பாசுரமிட்டுச் சொல்லக்கூடிய பிரகாரத்தை |
| இடராட்டியேன் நான் அந்தோகாண்கின்றிலேன் | இடருற்றிருக்கிற நான் ஐயோ! அறிகின்றிலேன்: |
| காண்தகு தாமரை கண்ணன் | காணவினிய தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனாய் |
| கள்வன் | பார்த்த பார்வையிலே ஸர்வஸ்வாபஹாரம் பண்ணவல்ல வஞ்சகனாய் |
| விண்ணவர் கோன் நங்கள் கோனை | நித்தியஸூரிகளைப் போலே என்னை யடிமை கொண்டவனான எம்பெருமானை |
| கண்டால் | காணப்பெற்றால் |
| ஈண்டிய சங்கும் நிறைவும்கொள்வான் | அவன் பக்கலிலே திரண்டவளைகளையும் அடக்கத்தையும்மீட்டுக் கொள்ளலாமென்று |
| எத்தனை காலம் இளைக்கின்றேனே | எத்தனையோகாலமாக ப்ரயாசைப்படுகின்றேனே. |

* * *—"வேங்கடவாணனை வேண்டிச் சென்று—சங்கம் சரிந்தன சாயிழந்தேன்" என்றாள் கீழ்ப்பாட்டில்; நீ ஆசைப்பட்ட விஷயம் திருவேங்கடமுடையானாகில் அது தகுதியே; நீ ஆசைப்பட்டால் கிடையாததுண்டோ வென்று தோழியர் சொல்ல ஆசைப் பட்ட பொருள் பெறுவாரெல்லாரிலும் நான் தலையாயிருக்கச் செய்தேயும் ஆசைப்பட்டுப் பெறாதே நான் படுகிற வ்யஸனம் வாசாமகோசரமாகையாலே வ்யஸனப் படுமத்தனையல்லது உங்களுக்குச் சொல்லுகைக்கு ஒரு சொல் காண்கின்றிலேன் என்கிறாள்.

முன்னடிகட்கு ஆறாயிரப்படியின் நடையிலே உரைத்தோமிது. இருபத்தினாலாயிரப் படியிலும் ஈட்டிலும் பொருள்வாசிகாண்கிறது. வேண்டிச்சென்று என்றது வேண்டிவந்து என்றபடி. என்னிடத்திலே வந்து ஒன்றை விரும்பிப் பெறுமவர்களில் தலையான வரிசையையுடைய தோழிமாரான வுங்களுக்கும் என்பது முதலடியின் கருத்து. என்னிடத்தில் கேட்டு நீங்கள் பெறாததுமுண்டோ? உங்களுக்குஞ் சொல்லாது மறைப்பதொன்றுண்டோ? அப்படியிருந்தும், ஈண்டிதுரைக்கும்படியையந்தோ காண்கின்றிலேனிடராட்டியேன் நான் என்று கூட்டுக.

மற்றொருபடியாகத் தமிழனுடைய நிர்வாஹமொன்றும் காட்டப்படுகிறது; 'வேண்டிச்சென்று ஒன்று பெறுகிற்பார் இல்' என்று பதம் பிரித்து, அப்பெருமானிடஞ் சென்று ஒன்று வேண்டிப் பெற நினைத்தவர்களில் அது பெற்றாரில்லை; * வேண்டிற்றெல்லாந்தரும் வள்ளல் * என்று வீணான ப்ரஸித்தியேயொழிய அவனிடம் பெற்றாரில்லை—என்பதாகவும் பொருள் கொள்ளலாம். இல்—இலர் என்றபடி. ஈண்டு—இப்போது; முன்பெல்லாம சொல்லிக் கொண்டிருந்தேனாகிலும் இப்போது சொல்லலாவது காண்கிறிலேன் என்கிறாள். அந்தோ!=நீங்கள் கேளாவிட்டாலும் நானே சொல்லியாகிலும் ஒருவாறு ஆற்றவேண்டியிருக்க, வாய்திறந்தொன்று சொல்லவொட்டுகிறதில்லையே நான் படுமிடர், ஐயோ என்கிறாள்.

'இடராட்டியேன்' என்றதை விவரிப்பன பின்னடிகள். [காண்தகு தாமரைக் கண்ணன்] வடமொழியில் தர்சநீயமென்றொரு சொல்லுண்டு; அதற்குப் பர்யாயமான தமிழ்ச் சொல் 'காண்டகு' என்பது. ஓயாது கண்டு கொண்டே யிருக்கத்தக்க என்று பொருள். இது தாமரைக்கு அடைமொழியாகவுமாம், கண்ணனுக்கு அடைமொழியாகவுமாம். [கள்வன்] அத்திருக்கண்ணோக்கத்தாலே என்னையும் என்னுடைமையையும் கொள்ளைகொண்ட பகற்கொள்ளைக்காரன் என்றபடி. 'விண்ணவர்கோன்' என்று சொல்லி உடனே 'நங்கள் கோன்' என்றதனால்—நித்யஸூரிகளைப்போலே ஆழ்வாரையுமீடுபடுத்திக்கொண்டவன் என்கிற கருத்துத் தோன்றும். "ஒரு விபூதியாகப் படுத்தின

பாட்டைக்கிடீர் என்னையொருத்தியையும் படுத்திற்று" என்று விசேஷக்கருத்துரைப்பர் நம்பிள்ளை.

இப்படிப்பட்ட எம்பெருமான் * கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்றும் கண்ணுக்குத் தோற்றாதபடி நிற்கின்றான்; அவனைக் காணப் பெற்றால் அவனால் கொள்ளை கொள்ளப்பட்ட எனது வளைகளையும் அடக்கத்தையும் திருப்பிப் பெற்றுக் கொள்ள வேணுமென்னும் அவாவினால் நான் நெடுங்காலமாக ஆயாஸப்படுகிறேன் என்றாளாயிற்று. அவன் பிரிந்தவன்று தொடங்கி வளைகழன்றும் அடக்கங் கெட்டும் இருப்பதனாலும், அவனோடு கூடப்பெற்றால் வளைதங்கி அடக்கமும் குறையற்றிருக்க நேருமாதலாலும் "கண்டால் ஈண்டிய சங்கும் நிறைவுங் கொள்வான்" எனப்பட்டது. இவ்வாசையோடே காலங் கழிகிறதேயன்றி ஆசை நிறைவேறும் விரகில்லையே! என்கிற வருத்தம் ஈற்றடியிலேயுறையும். ... ... ... ... 2

3460 காலமிளைக்கிலல்லால்வினையேன் நானிளைக்கின்றிலன் கண்டுகொண்மின் *
ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தானென் *
நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட *
கோலவளையொடுமாமைகொள்வான் எத்தனைகாலமுங்கூடச்சென்றே. 3

| | | | |
|---|---|---|---|
| நீலம் மலர் நெடு சோதி சூழ்ந்த | நீல நிறத்ததாய் எங்கும் வியாபித்ததாய் எல்லை காணவொண்ணாததான தேஜஸ்ஸாலே சூழப்பட்ட | ஞாலம் அறிய பழி சுமந்தேன் | உலகமெல்லா மறியும்படி படிகடந்து புறப்பட்டாளென்கிற பழியைப் பெற்றேன்; |
| நீண்ட முகில் வண்ணன் கண்ணன் | மஹா மேகம்போலே இருக்கிற நிறத்தையுடைய கண்ணபிரான் | நல் நுதலீர் | விலக்ஷணமான நெற்றியையுடைய தோழிகளே! |
| கொண்ட | அபஹரித்துக்கொண்ட | இனி நாணி தான் என் | இனி லஜ்ஜித்துத் தான் பயனுண்டோ? |
| கோலம் வளையொடு மாமை | அழகிய வளைகளையும் மேனி நிறத்தையும் | காலம் இளைக்கில் அல்லால் | காலம் முடிந்துபோமித்தனையல்லது |
| எத்தனை காலமும் கூட சென்றே கொள்வான் | அநேக காலம் கூடவே சென்றாகிலும் மீட்டுக் கொள்ளுகைக்காக | வினையேன் நான் இளைக்கின்றிலன் | வினையாட்டியேனான நான் இளைத்து மீளமாட்டேன்; |
| | | கண்டுகொண்மின் | இதை அநுபவத்தில் பார்த்துக் கொள்ளுங்கள். |

* * *—'எத்தனைகாலமிளைக்கின்றேனே" என்ற தலைவியை நோக்கி 'நங்காய்! பகவத் விஷயம் எட்டவொண்ணாத விஷயமென்பதை நீயே யறிந்திருக்கின்றாயே, நாள் சென்றவாறே இது ஸர்வாத்மநா துர்லபமென்று நீதானே மீளப்போகிறாய்; அப்படி நீயாக ஒரு காலவிசேஷத்திலே மீள்வதைக்காட்டிலும் எங்களுடைய வார்த்தை கேட்டு மீண்டதாக எங்கள் வார்த்தைக்கு ஒரு மதிப்புகொடுக்கலாகாதோ?' என்று தோழியர் சொல்ல: காலதத்துவம் முடிந்தாலும் நான் அவனைக் கண்டல்லதுவிடேன் என்கிறாள்.

[காலமிளைக்கிலல்லால் வினையேன் நானிளைக்கின்றிலன்] காலம் முடிந்து போனாலும் போகுமேயல்லது நான் இளைத்து மீளுகிறேனென்பது கிடையாதென்றபடி. இங்கு 'வினையேன்' என்றதற்கு இரண்டு வகையான கருத்துரைப்பர்; துர்லபம் என்றாலும் மீளவொண்ணாததான விஷயத்திலே ஆசை வைக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன்; நீங்கள் சொன்னவார்த்தை நெஞ்சில்படாதபடியான பாபத்தைப் பண்ணினேன். கண்டுகொண்மின் என்றது உறுதிப்பாடு தோன்றச் சொல்லும் வார்த்தை. எத்தனை காலமானாலும் நான் கண்டல்லது விடேனென்பதை நீங்கள் காணவே போகிறீர்களென்றவாறு.

இங்ஙனே சொல்லக்கேட்ட தோழியர் 'நங்காய்! அவனே வரப்பார்த்திருக்கையொழிய இப்படி இத்தலையால் ப்ரபல ப்ரயத்னம் செய்வது நம்குடிக்குப் பழியன்றோ?

பழிபரிஹரிக்க வேண்டுவது அவச்யமன்றோ: பெண்டிர்க்குத்தலையான குணமான நாண் தவிரலாமோ?' என்று கூற, ஞாலமறியப் பழிசுமந்தேன் நன்னுதலீர்! இனி நாணித்தா னென்? என்கிறாள். *அஞ்சிறைய மடநாரையில் தூதுவிட்டு* மாசறு சோதியிலே மடலெடுக்க முயன்றபோதே பழிபுகுந்திருக்க, இன்றாகப் பழிக்கஞ்சவேண்டுவ துண்டோ? நாணித்தான் பயனுண்டோ? என்கை. நன்னுதலீர்!=நுதல்—நெற்றி. என்முகம் வாடிக்கிடக்க உங்கள் முகம் ஒளிபெற்று விளங்குவதே! இதுவென்? என்று கேட்கிறபடி.

கண்டேவிடுகிறேன் காண்மின் என்று இப்படியொரு நிர்ப்பந்தம் ஏதுக்காகக் கொள்ளுகிறாயென்று கேட்டார்க்கு விடையிறுக்கிறது மூன்றாமடி. அவனுடைய வடிவழகே என்னை இப்பாடு படுத்துகிறதென்கிறாள். [நீலமலர் நெடுஞ்சோதி சூழ்ந்த] இது முகில்வண்ணனான எம்பெருமானுக்கு விசேஷணம்: முகிலுக்கு விசேஷணமென்றுங் கொள்ளலாம். நீலம், மலர், நெடு என்ற மூன்றும் சோதிக்கு விசேஷணங்கள். நீல நிறத்ததாயும் எங்கும் பரம்பினதாயும எல்லைகாணவொண்ணாததாயுமிருப்பது சோதி; அதனால் சூழப்பட்ட என்றபடி. இது முகில்வண்ணனுக்கு விசேஷணமாம்போது குறையொன்றுமின்றியே அந்வயிக்கிறது. முகிலுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டால் அப்படிப்பட்டவொரு விலக்ஷணமான முகிலைச் சிக்ஷித்துச் சொல்லுகிறதாகக் கொள்ளவேணும்.

அப்படிப்பட்ட கண்ணன் கவர்ந்துகொண்டுபோன வளையையும் மேனிநிறத்தையும் திருப்பிக்கொள்ளுகைக்காக இனியுள்ள காலமெல்லாம் முயல்வதாக நான் உறுதிகொண்டு ஞாலமறியப் பழிசுமந்தேன் இனி நாணியென்? ... ... 3

3461 கூடச்சென்றேனினியென்கொடுக்கேன் கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம் *
பாடற்றொழியவிழந்துவைகல் பல்வளையார்முன்பரிசழிந்தேன் *
மாடக்கொடிமதிள்தென்குளந்தை வண்குடபால்நின்றமாயக்கூத்தன் *
ஆடற்பறவையுயர்த்தவெல்போர் ஆழிவலவனையாதரித்தே. 4

| | | | |
|---|---|---|---|
| மாடம் கொடி மதிள் தென் குளந்தை | மாடங்களையும்கொடியணிமதிள்களையுமுடைய பெருங்குளமென்னும் திருப்பதியிலே | கூடசென்றேன் | அவனோடு ஸம்ச்லேஷிக்கச் சென்றேன்; |
| வண் குடபால் நின்ற மாயக் கூத்தன் | அழகிய மேற்பக்கத்திலே நின்ற மாயக்கூத்தப் பெருமானாய் | கோல்வளை நெஞ்சம் தொடக்கம் எல்லாம் | அழகியவளையும் நெஞ்சும் முதலானவையெல்லாம் |
| ஆடல் பறவை உயர்த்த | மகிழ்ச்சியினால் களித்தாடுகிற கருடனாலே வஹிக்கப்பட்டிருப்பவனாய் | பாடுஅற்றுஒழிய இழந்து | என்பக்கல் சேஷியாமல் விட்டுப்போம்படியாக இழந்து |
| வெல்போர் ஆழி வலவனை | போர்க்களத்தில் வெற்றிபெறுமியல்வினனான திருவாழியாழ்வானை வலத்திருக்கையிலுடையனான பெருமானை | பல் வளையார் முன் வைகல் பரிசு அழிந்தேன் | பல வளைகளையுடைய பெண்டுகள்முன்னே நெடுங்காலமாகவே என் இயல்புமாறப் பெற்றேன்; |
| ஆதரித்து | ஆசைப்பட்டு | இனி என் கொடுக்கேன் | (எல்லாமிழந்த நான்) இனி என்னஇழக்கக் கடவேன். |

* * *—ஆழ்வார்திருநகரியைச்சார்ந்த நவதிருப்பதிகளுள் திருக்குளந்தை யென்பது ஒரு திருப்பதி. இது பெருங்குளமென்று வழங்கப்படும். அத்தலத்திலுள்ள எம்பெருமான் மாயக்கூத்தன்; அப்பெருமானிடத்து ஆழ்வார் தமக்குள்ள ஈடுபாட்டைச் சொல்வது இப்பாசுரம்.

[கூடச்சென்றேன்] இதற்கு இரண்டுபடியாகப்பொருளருளிச்செய்வர்;* சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான் இனியுனது வாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே* (2715) என்றவிடத்தும் * நானேறப்பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே * (3726)

என்றவிடத்தும் திருநாடு செல்வதான பொருளை விவக்ஷித்தாப்போலே இங்கும் அப்பொருளே விவக்ஷிதமாகி 'நான் இதோ முடிந்து திருநாடு செல்லப்புகாநின்றேன், [இனி என்கொடுக்கேன்] இங்கிருந்தாலன்றோ அதையிழந்தேன் இதையிழந்தேன் என்று இழவுசொல்லவேண்டுவது; இனி இழக்கவேண்டியதென்னவிருக்கிறது? என்பதாக ஒரு பொருள். மற்றொரு பொருளாவது—, கூட—அவனோடு ஸம்ச்லேஷிப்பதற்காக, சென்றேன்—முயன்றேன்; இவ்வளவிலேயே எல்லாமிழந்தேனானபின்பு, இனி என்கொடுக்கேன்—இனி இழக்கவேண்டியதென்னவுள்ளது? என்பதாக. "தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தனையாதரித்துக் கூடச்சென்றேன்" என்று தானே மூலமுள்ளது; இதற்கு—திருக்குளந்தைப்பெருமானை விரும்பி அவனோடே ஸம்ச்லேஷிக்கச் சென்றேன் என்கிற பொருள் தேறுமேயல்லது 'இதோ முடிந்து திருநாடு சென்றேன்' என்கிற பொருள் எப்படியேற்கும்? என்று சங்கை தோன்றும்; இப்பொருள் சொல்லும் நிர்வாஹத்தில் 'கூடச் சென்றேன் இனியென்கொடுக்கேன்' என்பது தனிப்பட்ட வாக்யமாகக் கொள்ளத்தக்கது. பாட்டின் முடிவிலுள்ள 'ஆழிவலவனை யாதரித்தே' என்பதற்கு 'கூடச்சென்றேன்' என்பதில் அந்வயமென்று இப்போது கொள்ளவேண்டா; 'ஆதரித்து' என்னும் வினையெச்சம் 'பல்வளையார்முன் பரிசழிந்தேன்' என்றதில் அந்வயிப்பதாகக் கொள்க. ஆறாயிரப்படியில்—"திருக்குளந்தையில் பரமோதாரமான மேலைத்திக்கிலே.........நின்றருளினவனை யாதரித்துக் கூடச்சென்றேன்" என்றிருக்கிறதேயென்னில்; அது வொரு யோஜனை. அந்த யோஜனையும் கொள்ளப்பட்டேயுள்ளது. ஒரு யோஜனைக்கு மற்றொரு யோஜனை விரோதியன்றாதலால் "கூடச்சென்றேனினியென் கொடுக்கேன்" என்பதை மேலோடே அந்வயியாமல் தனிவாக்யமாகக் கொள்ளும் யோஜனையும் பொருந்துமாதல் அறிக.

மாயக்கூத்தன்=இதற்குப் பலபடியாகப் பொருள் கூறலாம். கீதையில் *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று தானே சொல்லிவைத்தபடி குருவி பிணைத்த பிணைபோலே மாயப்பிணையொன்று பிணைத்து அதிலே எல்லாரையும் மயக்கி இப்படியொரு கூத்துக்காண்பவன். அன்றியே, அந்த கீதையிலே *ஸம்பவாம்யாத்ம மாயயா* என்றருளிச் செய்தபடியே ஸங்கல்பமென்னும் பொருளதான மாயையினாலே திருவவதாரங்கள் செய்து அவற்றிலே குடக்கூத்து, மரக்கால்கூத்து, குரவைக்கூத்து என்னும்படியான பலவகைக்கூத்துக்களைச்செய்து "மாயக்கோலப்பிரான் தன் செய்கை நினைந்து மனங்குழைந்து" என்னும்படியாக்குமவன். அன்றியே, *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தராநிற்கவேயங்கு ஓர் மாயையினு லீட்டியவெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்றுவன்கூன் கோட்டிடையாடினை கூத்து அடலாயர்தம கொம்பினுக்கே* (திருவிருத்தம்—21) என்கிறபடியே நம்போல்வார்க்கு நெஞ்சினாலும் நினைக்கவொண்ணாததொரு மாயக்கூத்தைச் செய்பவனென்னவுமாம். வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்டு நிற்பது, புண்ணில் புளிப்பெய்தாலொக்குந் தீமைகளை மனைதோறுஞ் செய்வது, உருகவைத்தகுடத்தொடு வெண்ணெய் உறிச்சியுடைத்திட்டுப் போந்து அருகிருந்தார் தம்மையநியாயஞ்செய்வது, இல்லம்புகுந்தொருமகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு கொல்லையில் நின்றுங் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கவ்வளை கொடுத்து நல்லனநாவற்பழங்கள்கொண்டு நானல்லேனென்று சிரிப்பது, ஆற்றிலிருந்து விளையாடுபவர்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றிற்கடியனாயோடி யகம்புகுவது, வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு விண்டோய் மரத்தேறுவது, மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக்கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலுந்தீமைகள் செய்வது, தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடுவது, ஒளியாவெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்றால் விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுவது, கஞ்சனுங்காளியனுங் களிறு மருதமெருதும் வஞ்சனையின்மடியவளாவது, ஆயனாகியாயர்மங்கை வேயதோள் விரும்பியது,

குன்றெடுத் தாநிரைகாத்துக் கோவலனாய்க் குழலூதியூதிக் கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு கலந்துடன்வருவது, சீமாலிகனவனோடு தோழமைக்கொண்டு சாமாற வனையெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டது, நாறியசாந்தம் நமக்கிறைநல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற்பூச ஊறியகூனினையுள்ளே யொடுங்க ஏறவுருவியது, வார் கடா வருவியானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள்திண்பாக னுயிர்செகுத்து அரங்கின் மல்லரைக்கொன்று போர்கடாவரசர் புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்தது, பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப் பாரதம் கைசெய்தது, பற்றலர்வீயக் கோல்கையில் கொண்டு மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண் டேர்மேல் முனனின்றது, பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப் பகலவனொளிகெடப் பகலே ஆழியாலன்றங்காழியை மறைத்தது, கொல்லாமாக்கோல் கொலைசெய்து பார தப்போரெல்லாச் சேனையுமிருநிலத்தவித்தது, மாதவத்தோன் புத்திரன் போய் மறி கடல்வாய்மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது, படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர்கடவிச் சுடரொளியாய் நின்ற தன் னுடைச் சோதியில்வைதிகன் பிள்ளைகளையுடலொடுங்கொண்டு கொடுத்தது முத லான மாயக்கூத்துக்கள் பலவும் இங்கு அநுஸந்திக்கவுரியவை.

[ஆடல்பறவையுயர்த்த.] எம்பெருமான் தன் மீதேறிச் சாரிகையெழுந்தருளப் போவதை நினைத்துக்கொண்டு மகிழ்ச்சியின் கனத்தாலே சிறகை விரித்தடித்துக் கொண்டு கூத்தாடிநிற்பது கருடப்பறவையின் இயல்வு; அதுபற்றி ‘ஆடல் பறவை’ என்கிறது. [வெல்போராழி] விடுத்த திசைக்கருமம் திருத்துமவனான திருவாழியாழ் வான் எந்தப்போர்க்களத்துச் சென்றாலும் வெற்றியோடே மீள்வனென்க. வலவன் என்றது—திருவாழியாழ்வானை வலத்திலேயுடையவன் என்று பொருள்படுவதுதவிர, ‘வல்லவன்’ என்பதன் தொகுத்தலாகி, திருவாழியைச் செலுத்தவல்லவனென்றும் பொருள்படும். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை ஆதரித்துப் பரிசழிந்தேன் என்றாளாயிற்று. ... ... ... ... ... 4

3462 ஆழிவலவனையாதரிப்பும் ஆங்கவன்நம்மில்வரவுமெல்லாம் *
தோழியர்காள்நம்முடையமேதான் சொல்லுவதோவிங்கரியதுதான் *
ஊழிதோறூழியொருவனாக நன்குணர்வார்க்குமுணரலாகா *
சூழ்வுடையசுடர்கொளாதித் தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே. 5

| | |
|---|---|
| தோழியர்காள் | தோழியர்களே ! |
| நினைக்குங்கால் | ஆராய்ந்து பார்க்குமளவில் |
| நன்கு உணர்வார்க்கும் ஒருவன் ஆக ஊழி தோறு ஊழி உணரல் ஆகா | நன்றாக உள்ளபடி அறியவல்லார்க்கும் காலமுள்ளளவும் அறிய முயன்றாலும் இத்தகையனென்று அறியவொண்ணாதபடி |
| சூழல் உடைய | அடியார்களை அகப்படுத்திக் கொள்ளும் சூழ்ச்சியாகிற சேஷ்டிதங்களை யுடையனாய் |
| சுடர்கொள் ஆதி | மிகுந்த தேஜஸ்ஸையுடைய காரணபூதனாய் |
| தொல்லை அம் சோதி | நித்ய அஸாதாரண அப்ராக்ருத ஜ்யோதிர்மய ரூபத்தை யுடையனாய் |
| ஆழி வலவனை | திருவாழிவலவனான ஸர்வேச்வரனை |
| ஆதரிப்பும் | விரும்பிப் பணிகையும் |
| ஆங்கு | அப்படிப் பணியுமிடத்து |
| அவன் நம்மில் வரவும் எல்லாம் | அவன் நம்பக்கலில் வந்து சேருகையும் ஆகிய இவையெல்லாம் |
| நம்முடையமே தான் | நம்மைத் தோற்றிப் புதிதாக உண்டாகப் பெற்றிருக்கிறோமோ? |
| இங்கு சொல்லுவதோ! அரியது தான் | அவன் விஷயத்தில் எதையாவது அவத்யமாகச் சொல்லிவிடுவது தகாது. |

* * *—‘நங்காய்! ஆழிவலவனையாதரித்துப் பரிசழிந்தேனென்று நீயே சொல்லாநின்றாயே; அவனை யாசைப்பட்டார் இப்படி பரிபவப்படுமதொழிய, ஆசைப்பட்ட

படியே பெற்றுக் களிப்பதென்பது கிடையாதே ; ஆகவே அவனையாசைப்பட்டு வருந்துவதிற்காட்டிலும் ஆசையை அறத்துறந்து மறந்து மகிழ்ந்திருப்பதே நலமன்றோவென்று தோழிமார் சொல்ல, அவர்களுக்குத் தலைவி விடை கூறுகின்றாள். ஆசைப்படுவாரும் பெறுவாரும் பலரில்லையோ ; அவனையாசைப்படுவதென்பது இன்று நேற்று உண்டாயிற்றோ ? நானொருத்தியேயோ புதிதாக இன்று ஆசைப்படத்தொடங்கினேன் ! அவனையாசைப்படுவதும் அவன்றான் வந்து கலந்து களிப்புறச்செய்வதும் தொன்று தொட்டு நிகழுமதன்றோ. அப்படியிருக்க 'அவன் அரியன், அவனையாசைப்பட வேண்டா' என்று சொல்லுவது தகுதியோ ? என்கிறாள்.

என்னோடே கலந்து பழகுகின்ற நீங்கள் என்னைப்போலவே அவனது இயல்வையறிந்திருந்தும் அவனையாசைப்பட வேண்டாவென்றிப்படிச் சொல்லலாமோ என்னுங் கருத்துத்தோன்றத் தோழியர்காள் ! என விளிக்கிறாள். ஆழிவலவனையாதரிப்பும் ஆங்கவன் நம்மில் வரவும்=*கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராயொருநாள்* *தாமரைநீள்வாசத் தடம்போல்வருவானே ! ஒருநாள்காணவாராயே *தொண்டனேன் உன்கழல்காண ஒருநாள் வந்து தோன்றாயே* என்றிப்படியலற்றி அவனையழைப்பதும், அழைத்தவாறே அவன்றான் நம்போல்வாருடைய இல்லந்தேடியோடிவருவதும் என்றபடி. இவ்வளவோடு நிறுத்தாமல் எல்லாம் என்று பின்னையும் சொன்னதற்குப் பொருளென் ? என்னில் ; வருகிறவளவுதானே வாய்விட்டுச் சொல்லுவது ; வந்த பின்பு அவன் செய்யுமவை பன்னியுரைக்குங்காற் பாரதமாமே ; முற்றம்புகுந்து முறுவல் செய்து நிற்பதும், பந்துபறித்துத் துகில்பற்றிக் கீறிப்படுறுசெய்வதும், குழறுபூவையொடுங் கிளியோடுங்குழகுவதும், மையலேற்றி மயக்கப் பேசுவனவும் செய்வனவும் வாய்கொண்டு சொல்லப்போமோ ? அவை, எல்லாம் என்பதிலே யடங்குமித்தனை.

நம்முடையமேதான்=நம்மைத்தோற்றிப் புதிதாக ஏற்பட்டவையல்லவே என்பது கருத்து. உடையம்—பன்மைத்தன்மைக் குறிப்பு வினைமுற்று. ஏ என்பது எதிர்மறைப் பொருளதாகி, உடையோமல்லோம் என்றதாய்நிற்கும். நம் என்றது நாம் என்றபடி.

சொல்லுவதோ இங்கு அரியதுதான்=அரியது என்றது—சொல்லத்தகாத வார்த்தை என்றபடி. அவனையாசைப்படவேண்டாமென்று தோழிமார் சொல்லும் வார்த்தையே 'அரியது' என்பதனால் விவக்ஷிதம். அரியது சொல்லுவதோதான் ?=சொல்லத்தகாத வார்த்தையை நீங்களா சொல்லுவது ? என்றபடி. அன்றியே, சொல்லுவதோவிங்கு அரியதுதான் என்று உள்ளபடியே அந்வயித்து, நீங்கள் சொல்லும் வார்த்தையானவிது சொல்லத்தகாததே, நான் கேட்கத் தகாததே என்றுமுரைக்கலாம்.

பின்னடிகளால் அப்பெருமானுடைய அருமையே சொல்லப்படுகிறது அவனை அரியனென்று சொல்லலாமாவென்று முன்னடிகளில் கண்டித்தவளே அவனது அருமையைச் சொல்லலாமோவென்னில் ; இதற்கு நம்பிள்ளையருளிச் செய்யுமழகுகாணீர் ; —" அவன் கிட்டவரியனா யிருக்கிறமை இல்லையோவென்ன, அதுதானும் நான் சொல்லக் கேட்கவேண்டாவோ வுங்களுக்கு " என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

நன்குணர்வார்க்கும் ஒருவனென்று ஊழிதோறூழி உணரலாகா=எதையும் செய்து நன்கு அறியவல்லவர்களான மஹாமேதாவிகளும் எத்தனைகாலங்கூடி அறியப்புகுந்தாலும் அறியமுடியாத என்றபடி. இப்படியாகில் *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* *அஹம் வேத்மி மஹாத்மாநம்* என்றவை எங்ஙனே சேரும் ? சிலரை ப்ரஹ்ம வித்துக்களென்றும் தத்வவித்துக்களென்றும் சொல்லுகிறோமே, அதுதான் எப்படி சேரும் ? என்கிற சங்கை யுண்டாகும். *ஊழிதோறூழியொருவனாக நன்குணர்வார்க்கு முணரலாகாதவனென்று அறிகிறவர்களே ப்ரஹ்மவித்துக்களும் தத்வவித்துக்களுமாவர் என்க. இப்படிச் சொல்லிவிடலாமோ ? எம்பெருமானுடைய படிகள் இன்னின்னவையென்று நன்கு நிஷ்கர்ஷிக்கவன்றோ சாஸ்த்ரங்கள் அவதரித்துள்ளன ; அப்படிப்பட்ட

சாஸ்த்ரங்களையறிந்தவர்களன்றோ நன்குணர்வார்; அவர்களுக்கும் உணரலாகாத துண்டோ? என்று கேள்வி பிறக்கும். இதற்குச் சொல்லுகிறோம். எம்பெருமானுடைய சில விஷயங்கள் நிஷ்கர்ஷிக்க முடியாமலேயிராநின்றன. இரண்டொன்று எடுத்துரைப்போம்; 'பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு என்னையடி பணிவார்க்கு நான் ப்ராப்யன்' என்று பல விடங்களிற் கூறுகின்ற எம்பெருமான் தானே *நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்கிருன்; புருஷகார பலத்தைக்கொண்டும் மற்று எந்த ஸாதனங்கொண்டும் என்னை வசப்படுத்த முடியாது; எனக்காகத் தோன்றுகிறபோது நானுகவே ஒரு அதிகாரிவிசேஷத்தைத் திருவுள்ளம் பற்றுவேனத்தனை—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இங்ஙனமே மற்றொன்றுங் காண்மின்; *ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவஃ* [ச்ருதி ஸ்ம்ருதிகள் என்னுடைய ஆணை; அதை மீறி நடப்பவன் எனக்கு த்ரோஹி; அவன் வேறுவிதமான பக்தி விசேஷங்களை என்னிடத்துச் செலுத்தினுலும் வைஷ்ணவனல்லன்] என்று ஓரிடத்தில் சொல்லி வைத்து *அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸஃ* என்றும் *மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந, தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்* என்றுமருளிச்செய்கிருன்—எவ்வளவு துஷ்டனுனவனும் என்னைக் கபடமாகவாவது அடிபணிந்தானுயின் அவனை என்னுடொப்ப பஹுமானிக்கக்கடவது; மற்றபடி அவனிடத்தில் தோஷங்களிருந்தாலென்ன? என்கிருன். இங்ஙனே சொல்லுகிற எம்பெருமான்படியை என்னென்று அறுதியிடுவது. இதனுல் யாருமே அறுதியிடமுடியாதென்று கொள்ளவேண்டா; மயர்வற மதிநலமருளப் பெற்றவர்கள் அறுதியிடாததொன்றில்லை.

[சூழலுடைய] சூழல் என்றும் சூழ்ச்சி என்றும் பர்யாயம்; அகப்படுத்திக் கொள்ளும் யந்த்ரம் சூழலெனப்படும். கிட்டினுரைத் தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளவல்ல அவதார சேஷ்டிதங்களையுடையவன் என்றபடி. [சுடர்கொளாதி] சுடர்கொள் என்பதும் ஆதி என்பதும் தனித்தனியே எம்பெருமானுக்கு வாசகங்கள் என்று கொள்வது தவிர, சுடர்கொள் என்பது ஆதிக்கு விசேஷணமாய் அந்வயிப்பதாகக் கொள்வதும் பொருந்தும். தேஜஸ்ஸு முதலான எண்ணிறந்த கல்யாணகுணங்களையுடையவன், ஜகத்காரண பூதன்—என்பது முந்தின யோஜனையில் தேறும் பொருள். தேஜிஷ்டமான ஜகத்காரணத்வத்தையுடையவன் என்பது இரண்டாவது யோஜனையில் தேறும் பொருள். ஜகத்காரணத்வம் தேஜிஷ்டமாயிருக்கையாவது—உபாதாநகாரணத்வம் ஸஹகாரிகாரணத்வம் நிமித்தகாரணத்வம் ஆகிய மூவகைக் காரணத்வமும் எம்பெருமான்றனக்கே பொருந்தியிருப்பது காணு நின்றோம்; ப்ரபஞ்சத்தைக் குறித்து எமபெருமான் காரணமாகிருனென்ருல் மேற்சொன்ன மூவகைக் காரணமும் தானேயாயிருப்பதாக வேதாந்த நூற்கொள்கை. இதைக்கொண்டே 'சுடர்கொளாதி' என்கிறது. ஆதி என்பதற்கு காரணத்வத்தையுடையவன் என்று பொருளாகி, அதன் ஏகதேசமாகிய காரணத்வத்தில் 'சுடர்கொள்' என்பது விசேஷணமாய் அந்வயிப்பதாகக் கொள்க. நினைக்குங் கால்—அவன் பெருமையை ஆராயப்புகுந்தாலென்றபடி. ஆக, பின்னடிகளினுல் தேறினது என்ன? என்னில்; "சொல்லுவதோ விங்கரியதுதான்" என்பதே முக்கியமானது: அரியவஸ்துவே எளியதாமளவில் தடுப்பாருண்டோ? என்றதாகவே முடிபு. ... ... ... ... ... 5

3463 தொல்லையஞ்சோதிநினைக்குங்கால் என்சொல்லளவன்றிமையோர்தமக்கும் *
எல்லையிலாதனகூழ்ப்புச்செய்யும் அத்திறம்நிற்கவெம்மாமைகொண்டான் *
அல்லிமலர்த்தண்டுழாயுந்தாரான் ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர் *
வல்லிவளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே. 6

| | |
|---|---|
| நினைக்குங்கால் | ஆராயப்புகுமளவில், |
| தொல்லை அம் சோதி என் சொல் அளவு அன்று | அஸாதாரணமாய் அழகியதான அவனுடைய தேஜஸ்ஸானது என்னுடைய சொல்லில் அடங்குமதன்று; |
| இமையோர் தமக்கும்—தேவர்களுக்குங்கூட (நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி) | |
| எல்லை இலாதன கூழ்ப்புசெய்யும் அ திறம் நிற்க | அளவிறந்தஸம்சயங்களை விளைக்கும்படியான அப்பெருமேன்மை கிடக்க; |
| வல்லிவளம் வயல் சூழ் குடந்தை மா மலர் கண்வளர்கின்றமால் | பூங்கொடியும் அழகிய வயல்களுஞ் சூழ்ந்ததிருக்குடந்தையிலேசிறந்ததாமரை போன்ற திருக்கண்கள் வளரும்படி சாய்ந்தருளின பெருமான் |

| | |
|---|---|
| எம்மாமை கொண்டான் | எம்மேனி நிறத்தைக் கொள்ளை கொண்டான்; |
| அல்லிமலர் தண் துழாயும் | பூந்தாரினுடைய விகாஸத்தையுடைத்தான திருத்துழாய் மாலையையும் |
| தாரான் | அருள் செய்கின்றிலன்; |
| இனி | இப்படியான பின்பு |
| ஆர்க்கு பூசல் இடுகோ | (இத்துயரத்தை) வேறு யார் பக்கலிலே சென்று முறையிடக்கடவோம்? |
| சொல்லீர் | நீங்களே சொல்லுங்கள். |

* * *—மறுபடியும் தோழியானவள் 'நங்காய்! நீ சொல்லுகிறபடியே அவன் எளியனல்லன்; அருமைப்பட்டவனே' என்று சொல்ல, தோழீ! அவன் அரியனானாலென்ன? எளியனானாலென்ன? எந்த நிலையிலும் அவன் தன்னையே வாய்வெருவும்படியன்றோ நம்மைப் பண்ணி விட்டான்; அப்படிப்பட்டவன் வாசலிலே கூப்பிடாதே ஸம்பந்தமில்லாதார் வாசலிலே கூப்பிட ப்ரஸக்தியுண்டோ? என்கிறாள் தலைவி.

நினைக்குங்கால் தொல்லையஞ்சோதி = ஆராய்ந்து சொல்லப்புக்கால், இதர விலக்ஷணமான திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவன் என்று இவ்வளவு சொல்லலாமேயொழிய வேறு சொல்லப்போமோ? அவனுடைய அருமை நாம் சொல்லுமளவிலுள்ளதோ? என்பது கருத்து. என் சொல்லளவன்று—என்னுடைய சொல்லில் அடங்குமதன்று; ஓர் அபலையாகிய நான் இருந்து சொல்லுமளவோ அவன் பெருமை. இமையோர் தமக்கும் எல்லையிலாதன கூழ்ப்புச் செய்யும் = கூழ்ப்பு என்று ஸம்சயத்திற்குப் பெயர்; மிக மேம்பட்ட ஞானம்படைத்த பிரமன் முதலிய தேவர்களுக்கும் ஒரு நிச்சயத்தை விளைக்கமாட்டாததான பெருமையன்றோ அவனுடையது. ஒரு ஸமயத்திலே எளியனென்றிருப்பர்கள்; மற்றொரு ஸமயத்திலே அரியனே யிவன் என்றிருப்பர்கள். ஆகவே, அரியனோ எளியனோ என்கிற ஸந்தேஹமே அவர்களுக்கும் ஊடுருவச் செல்லாநிற்குமாயிற்று. மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் ப்ரஹ்மருத்ரஸம்வாதத்தில் ருத்ரனை நோக்கிப் பிரமன் சொல்லுகிறான்—*தவாந்தராத்மா மம ச யேசாந்யே தேஹிஸம்ஜ்ஞகா:, ஸர்வேஷாம் ஸாக்ஷிபூதோஸௌ ந க்ராஹ்ய: கேநசித் க்வசித்* என்கிறான். உனக்குமெனக்கும் மாத்திரமன்றிக்கே ஸகல தேஹிகளுக்கும் அந்தராத்மாவாயும் ஸாக்ஷியாயுமிராநின்ற இப்பெருமானை ஒருவரும் ஒருவிதமாகவும் அறுதியிடகில்லார் என்கையாலே 'இமையோர் தமக்கு மெல்லையிலாதன கூழ்ப்புச்செய்யும்' எனப்பட்டது. இமையோர் என்று பிரமன் முதலிய தேவர்களையன்றிக்கே நித்யஸூரிகளையே சொல்லிற்றாகவுமாம்; *சூட்டுநன் மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவேயங்கு ஓர்மாயை யினாலீட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து* என்ற திருவிருத்தப் பாசுரம் (21) இங்கே அநுஸந்திக்கவுரியது.

அத்திறம்நிற்க எம்மாமைகொண்டான் = அப்படிப்பட்ட மேன்மை கிடக்கச் செய்தேயும் தன்னுடைய வடிவழகு முதலியவற்றைக் காட்டி என்னிறத்தைக் கொண்டான்; என்னோடு சிருங்கார சேஷ்டைகளைச் செய்யாநின்றானென்றபடி. இமையோர்களுக்கும் அறுதியிடமாட்டாதபடியிருந்தவன் என்னோடு கலந்து பழகும்போது எனக்கு ஸர்வாத்மநா விதேயனாகவேயிருந்தானென்பது கருத்து. கூடியிருந்த காலத்தில் அப்படியிருந்தவன் இப்போது, அல்லிமலர்த்தண்டுழாயுந்தாரான் = தான் வாராவிட்டாலும் தன்னோடு

ஸ்பர்சமுள்ளதொரு பொருளையாவது தந்து என் வாட்டத்தைத் தணிக்கலாமே; அது செய்கின்றிலன்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி—"அது செய்தானாகில் பூவுக்கிட்டோம் போலும் என்றிருக்கலாமே" என்று. இதன் கருத்து யாதெனில்; குடும்ப வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் கூடிவாழ்ந்து மகிழ்ந்திருத்தல் என்பதொன்று. அஃதில்லையாகில் [நாயகன் மன வெறுப்போடே பிரிந்திருந்தாலும்] நாயகி ஸுமங்கலியாக வாழ்வதற்கு ஒரு குறையில்லையே. நல்ல சேலைகளையணியவும் மஞ்சள் பூசிக்கொள்ளவும் பூச்சூடிக் கொள்ளவும் குறையில்லையே. ஆனாலும் அதுவொரு மகிழ்ச்சியாகாதே. ஆயினும் ஸுமங்கலியாக வாழ்கிறோமென்று ஒருவாறு மகிழலாமன்றோ. அதுபோல, எம்பெருமான் வந்து ஸம்ச்லேஷித்து ஆனந்தப்படுத்தாதொழிந்தாலும் அல்லிமலர்த்தண் டுழாயாவது தந்தானாகில் பூச்சூடவாவது பாக்கியம் பெற்றிருக்கிறோமென்று ஒருவாறு உகந்திருக்கலாம்; அந்தோ! அக்கேடுமில்லையே! என்பதாகக் கொள்க.

ஆர்க்கு இடுகோ இனிப் பூசல்="நம்மை நலிந்தவன் வாசலிலே கூப்பிடாதே ஆர் வாசலிலே கூப்பிடுவோம், சொல்லிக்காண்" என்பது ஈடு. *ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றில் கடியனாயோடி அகம் புக்கு மாற்றமுந்தாரானால் இன்றுமுற்றும் வளைத்திறம்பேசானால் இன்றுமுற்றும்(213)* என்று, நலிந்தவன்வாசலிலே நின்று கூப்பிடவன்றோ தகுதி; ஸம்பந்தமில்லாதார் வாசலிலே சென்று கூப்பிடவோ? அருள் செய்தாலும் படுகொலையடித்தாலும் அவன் பக்கலிலேயன்றோ முறையிடுதல் முறை. *ஆர்க்கோவினி நாம் பூசலிடுவது அணி துழாய்த் தார்க்கோடும் நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேனந்தோ (597)* என்ற பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

வல்லிவளவயல் சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்ற மால்='எம்மாமை கொண்டான்' என்றதிலே இதற்கு அந்வயம். திருக்குடந்தைபோன்ற திருப்பதிகளிலே என் போல்வார்க்காகவே ஸந்நிதிபண்ணியிருக்குமவனுடைய தாமரைபோன்ற திருக்கண்கள் என்திறத்தில் அலரக் காண்கின்றிலேன் என்று வருந்திக் கூறுகிறபடி.

இப்பதிகத்தில்கீழ்நான்காம்பாட்டில் "மாடக்கொடிமதிள் தென்குளந்தை" என்று திருக்குளந்தைத் திருப்பதி ப்ரஸ்துதமானபடியாலே இங்கும் 'வல்லிவளவயல் சூழ் குளந்தை' என்று அத்திருப்பதியின் ப்ரஸ்தாவமேயிருக்கலாமென்று சிலர் கூறினர்; அது சிறிதும் பொருந்தாது; திருக்குளந்தையில் நின்ற திருக்கோலம்; திருக்குடந்தையில் சயனத்திருக்கோலம். "தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தன்" என்று அங்கு நின்ற திருக்கோலம் பேசப்பட்டது. "குடந்தை மாமலர்க் கண்வளர்கின்றமால்" என்று இங்கு சயனத்திருக்கோலம் பேசப்படுகிறது. ஆகவே இந்த வாசியை யறியாது சொல்லுவது பொருந்தாது. இப்பாசுரத்தில் திருக்குடந்தைத் திருப்பதியின் அநுபவமேயுள்ளது. ... ... ... 6

3464 மாலரிகேசவன்நாரணன் சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனேன்றென்று *
ஓலமிடவென்னைப்பண்ணிவிட்டிட்டு ஒன்றுமுருவுஞ்சுவடுங்காட்டான் *
ஏலமர்க்குழலன்னைமீர்காள் என்னுடைத்தோழியர்காளென்செய்கேன் *
காலம்பலசென்றுங்காண்பதாணை உங்களோடெங்களிடையில்லையே. 7

| | | | |
|---|---|---|---|
| ஏலம் மலர் குழல் அன்னைமீர்காள் | நறுமணம்மிக்க பூவையணிந்த குழலையுடைய தாய்மார்களே! | மால் அரி கேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்தன் என்று என்று | மாலே! ஹரியே! கேசவனே! நாராயணனே! ஸ்ரீமாதவனே? கோவிந்தனே! வைகுண்டனே! என்றிப்படி பலகாலுஞ் சொல்லி |
| என்னுடை தோழியர்காள் | என்னுடைய தோழிமார்களே!, | | |

| | |
|---|---|
| ஓலமிட என்னை பண்ணிவிட்டு இட்டு | கூப்பிடும்படியாக என்னைப் பண்ணி, கைவிட்டு |
| | (எம்பெருமானானவன்) |
| ஒன்றும் உருவும் சுவடும் காட்டான் | ஒருபடியாலும் தன் வடிவையும் தன்னைக் கிட்டுவதோரடையாளத்தையும் காட்டுகின்றிலன்; |
| என் செய்கேன் | இதற்கு நான் என்ன பண்ணுவேன்! |
| பல காலம் சென்றும் காண்பது ஆணை | காலமுள்ளதனையும் சென்றாகிலும் காணக்கடவேனென்பது ஸத்யம்; |
| உங்களோடு எங்கள் இடை இல்லை | (இந்த அத்யாவஸாயத்தைக் குலைக்கப் பார்க்கிற) உங்களுக்குமெனக்கும் ஒரு ஸம்பந்தமுமில்லை. |

* * *—'அப்பெருமானைக் காண்பது அரிது; ஆகவே அவனை விட்டு விடுதலே நன்று' என்று உறவு முறையார் அலைக்க, அவனுடைய திருக்குணங்களிலே அகப்பட்ட நான் எத்தனை காலமானாலும் அவனைக் கண்டல்லது விடேன்; அதற்கு இடையூறான வுங்களோடு ஸம்பந்தம் எனக்கு வேண்டாவென்று உறவறுத்து உரைக்கின்றாளிப்பாட்டில். முதலடியில் சில திருநாமங்களை யடுக்குகின்றாள்; ஒவ்வொரு திருநாமமும் ஒவ்வோரபிப்ராயத்தோடு கூடியது; அப்பெருமான் இப்படி உபேக்ஷிக்குமளவில் நாமும் அவனை உபேக்ஷித்திருக்கையன்றோ தகுதி; அப்படி உபேக்ஷித்து விலகியிராமல் அவனையே அலற்றுவதற்கு என்ன காரணமென்னில்; மால்=அடியார் பக்கலில் வியாமோஹமே வடிவெடுத்தவனாயிற்றே அவன்; மாலாய்ப்பிறந்த நம்பியான அவன் நம்மீது அத்தனை வியாமோஹங் கொண்டிருந்தவனன்றோ; நெடுக உபேக்ஷித்து விடமாட்டானே! என்கிற எண்ணத்தோடு மாலென்கிறாள். அரி=நம்மிடத்தில் விரோதி கனத்திருந்தாலும் அதைத் தன்னுடைய ஸங்கல்பலவலேசத்தாலே ஹரித்திட வல்லனல்லனோ? விரோதிவன்மையைப்பற்றி நாம் கவலைப்படவேண்டுமோ? என்கிற எண்ணத்தோடு அரியென்கிறாள். கேசவன்=*மைவண்ண நறுங்குஞ்சிக்குழல் பின்தாழ (2072)* என்றும் *களி வண்டெங்கும் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று விளையாட (644)* என்றும் சொல்லும்படியான திருக்குழலொழுங் கைக்காட்டி நம்மை அகப்படுத்திக்கொண்ட அவன் 'இவ்வழகை நினைத்து நினைத்துப் புலம்புவளே பராங்குச நாயகி' என்றுணரமாட்டானோ? இதை நினைத்தாகிலும் பதறி யோடிவரமாட்டானோ? என்கிற எண்ணத்தோடு கேசவனென்கிறாள். (கேசவனென்பதற்குப் பல பொருள்களுண்டு; சிறந்த மயிர்முடியையுடையவனென்ற பொருள் இங்கு விவக்ஷிதம்.)

நாரணன்=நாராயணனென்ற சொல்லுக்குப் பல பொருள்களுண்டு; முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் "புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்குங்குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்; அவையாவன—வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும் ஜ்ஞானமும் சக்தியும்" என்றருளிச்செய்கையாலே 'ஆச்ரிதவத்ஸலன்' என்கிற பொருள் இங்கு விவக்ஷிதம்; உடனே சீமாதவன் என்கையாலே இப்பொருள் பொருந்தும்; இப்படி பெரியபிராட்டியாருடைய ஸம்பந்தத்தினால் கிளப்பப்பட்ட திருக்குணங்களையுடைய பெருமான் நம்மைக் கைவிடமாட்டானென்னும் கருத்தினால் 'நாரணன் சீமாதவன்' என்கிறாள். கோவிந்தன்=அண்டினார்க்குக் கையாளாயிருக்குமவன் நம்மைக் கைவிடுவனோ? வைகுந்தன்=கீழ்ச்சொன்ன திருக்குணங்களெல்லாம் நிறம்பெறும்படி மேன்மையையுடையவன். என்றென்று=ஆக இப்படிப்பட்ட திருநாமங்களை நிரந்தரமாகச் சொல்லிக் கூப்பிடும்படி என்னைப்பண்ணிவிட்டு, தன்வடிவைக் காட்டுகிறிலன், தானிருந்த விடத்துக்கு ஓரடையாளமுங் காட்டுகிறிலன்.

இங்ஙனே சொன்ன தலைவியை நோக்கித் தோழியர் 'துர்லபனான அவனைப் பற்றின பேச்சை விட்டிடுவதே நலம்' என்று கூற, அதற்கு மறுமாற்றமுரைப்பன பின்னடிகள். அரியனான அவனை எளியனாக்கிக் கண்டேதீருவேன்; எத்தனை காலமானா

லும் சரி; ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இப்படிப்பட்ட எனது துணிவுகண்டும் நீங்கள் ஹிதஞ்சொல்லி என்னை மீட்கப்பார்க்கில், உங்களோடு உறவை அறத்துறப்பன்; நீங்கள் கடக்க நில்லுங்கள்—என்றுளாயிற்று. ... ... ... 7

3465 இடையில்லையான்வளர்த்தகிளிகாள் பூவைகள்காள்குயில்காள்மயில்காள் *
உடையநம்மாமையுஞ்சங்கும்நெஞ்சும் ஒன்றுமொழியவொட்டாதுகொண்டான் *
அடையும்வைகுந்தமும்பாற்கடலும் அஞ்சனவெற்புமவைநணிய *
கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றி அவனவைகாண்கொடானே. 8

| | |
|---|---|
| யான் வளர்த்த கிளிகாள் | நான் வளர்த்து வந்த கிளிகளே! |
| பூவைகள்காள் | பூவைகளே! |
| குயில்காள் | குயில்களே! |
| மயில்காள் | மயில்களே! |
| இடை இல்லை | (என்னிடத்தில் உங்களுக்கு ஓர் அவகாசமில்லை; |
| நம் உடைய மாமையும் சங்கும் நெஞ்சும் ஒன்றும் ஒழிய ஒட்டாது | நம்முடையதான நிறத்தையும் வளையையும் நெஞ்சையும் ஒன்றும் மிச்சப்படவொட்டாதே |
| கொண்டான் | கொள்ளை கொண்டவன் |
| அடையும் | இங்கிருந்து சென்று சேர்ந்த |
| வைகுந்தமும் | திருநாடும் |
| பால் கடலும் | திருப்பாற்கடலும் |
| அஞ்சனம் வெற்பும் அவை | திருவேங்கடமலையுமாகிய அத்தலங்கள் |
| நணிய | அருமையற்று எளியவையே; (ஆனால்) |
| பாசங்கள் | புறம்புண்டான பற்றுக்கள் |
| கடை அற | ஸவாஸநமாக |
| விட்ட பின்னை அன்றி | விட்டொழிந்தாலல்லது |
| அவன் | அப்பெருமான் |
| அவை காண் கொடான் | அத்தலங்களைக் காணக் கொடான். |

* * *—இப்பதிகத்திற்கு இப்பாட்டே உயிர்நிலையாயிருக்கும். புறம்புண்டான பற்றுக்கள் சிறிதுமில்லாமையைத் தெரிவிப்பதேயன்றோ இத்திருவாய்மொழிக்கு முக்யமான ப்ரமேயம்; அஃது இப்பாட்டிலுள்ளது. கீழ்ப்பாட்டில் "உங்களோடெங்களிடையில்லையே" என்று தோழிமாரோடு உறவறுத்தமை சொல்லிற்று; லீலோபகரணங்களிலும் அநாதரமுண்டானமை சொல்லுகிறதிப்பாட்டு. லீலோபகரணங்களால் பிறக்கும் ரஸமெல்லாம் தனக்கு எம்பெருமானாலே பிறக்குமென்பது தோன்ற முதலடி அமைந்துள்ளது. 'யான்வளர்த்த' என்பது கிளிகளிற்போலவே பூவை குயில் மயில்களிலும் அந்வயிக்கும்.

ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி;—"தன்னை ப்ரதிபந்திக்கிற அன்னைமாரோடும் உறவறச்செய்தேயும் அவனைக்காணுதொழிந்தவாறே தான்வளர்த்த தன்னுடைய லீலோபகரணமான கிளிகள் பூவைகள் குயில்கள் மயில்கள் என்கிற விவற்றோடுள்ள ஸம்பந்தமாகாதே அவனைக்காண்கைக்கு ப்ரதிபந்தகமென்று பார்த்து அவற்றை நோக்கிச் சொல்லுகிறாள்." என்று.

ஆசார்யஹ்ருதயத்தில் (153) * கண்வலைப்படாதே அகவலைப்பட்டு * என்று தொடங்கும் சூர்ணையில் "பராபிமாநத்திலேயொதுங்கின நம்பிக்கன்பர் தலைமீதடிப்பொடி உடையவருடையார்போல்வாரைக் கிளிபூவை குயில்மயிலென்னும்" என்று ஸ்வாபதேசார்த்தம் அருளிச்செய்யப்பட்டுள்ளது; தொண்டரடிப்பொடியாழ்வார் ஆழ்வான் ஆண்டான் எம்பார் அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலானவர்கள் போல்வாரைக் கிளிபூவை குயில் மயிலாகச் சொல்லுவதாகத் தேறியுள்ளது. அப்படிப்பட்டவர்களிடத்தில் ஸங்கம் உபாதேயமேயல்லது த்யாஜ்யமன்றே; அப்படியிருக்க, இவற்றோடு ஸங்கமற்றதாகச் சொல்லுகிறவிது சேருமோவென்று சங்கை பிறக்கும்; கேண்மின்; சரணாகதி கத்யத்தில் * பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந் * என்று தொடங்கி குருக்களையுமுட்பட த்யஜித்ததாக அருளிச்செய்யப்படுகிறது. * தன் குருவின் தாளிணை

கள் தன்னில் அன்பொன்றில்லாதார் அன்பு தன்பால் செய்தாலும் அம்புயைகோன்— இன்பமிகு விண்ணாடு தானளிக்கவேண்டியிரான், ஆதலால் நண்ணாரவர்கள் திருநாடு * என்றும் * ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால், மாநிலத்தீர்! தேனார்கமலத்திருமாமகள் கொழுநன்தானே வைகுந்தந்தரும் * என்றும் [உபதேசரத்தினமாலையில்] அருளிச்செய்தபடியே ஆசார்யஸம்பந்தமே முக்திக்கு முதல்தனிவித்தாயிருக்க அப்படிப்பட்ட ஆசார்ய ஸம்பந்தத்தையும் குலைத்துக் கொள்வதாகக் கூறலாமோ? "குரூந் ஸந்த்யஜ்ய" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறதே யென்று கேட்கலாம்; இதற்கு அவ்விடத்து வியாக்யானத்திலே விரியவுரைத்தோம். அவர்களை அறவே விட்டிடுவதாக இங்கு விவக்ஷித மன்று; மாதாபிதாக்களையும் ஆசார்யர்களையும் புத்ரமித்ராதிகளையும் பகவத் விபூதிகளாகக் கருதுகின்றே னென்பதுவே இங்குப் பரமதாத்பரியம். இவர்கள்தாமே பகவத் பாகவதாநுபவ விரோதிகளாகில் இவர்களை ஸர்வாத்மநா த்யஜிக்கவும் ப்ராப்தமே. *குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத:, உத்பதம் பரதிபந்நஸ்ய ஸத்யஸ் த்யாகோ விதீயதே * என்றதுகாண்க.

'பூவைகள்' என்னும் பன்மைச்சொல்லின் மேல் விளியுருபு ஏறினால் 'பூவைகாள்' என்றாகும்; 'பூவைகள்காள்' என்றாவதற்கு வழியில்லை; எனினும், வடமொழி வேதத்தில் வரும் பலவகைப் பிரயோகங்களைச் 'சாந்தஸத்வாத் நதோஷ:' என்பதுபோல இங்குங்கொள்க. 'பூவைகாள்' என்றே பாடமென்று சிலர் சொல்லுவது அஸம்பிரதாயம்.

'உடையநம்' என்றதை மாற்றி 'நம்முடைய' என்று கொள்வது. நம்மிடத்தில் ஸர்வஸ்வாபஹாரம்பண்ணினானென்கிறது இரண்டாமடி. கொண்டான் என்றது வினைமுற்றன்று, வினையாலணையும் பெயர்; மூன்றாமடியின் முதலிலுள்ள அடையும் என்பதில் அந்வயிக்குமது; 'கொண்டானடையும்வைகுந்தமும்......' என்க. "இத்தலையிலுள்ளதெல்லாம் நேராகக்கொண்டு எட்டவொண்ணாத நிலத்திலேபோய்ப் பாரித்து வெற்றி கொண்டாடியிருந்தானென்கை" என்பது ஈடு. என்னையு மென்னுடைமையையுங் கொள்ளைகொண்டு அவன் பரமபதத்திலோ திருப்பாற்கடலிலோ * சேணுயர்வானத்தோடொத்ததான * சேணுயர்வேங்கடத்திலோ சென்று சேர்ந்தாலும் [அவை நணிய] அவை நமக்குக் கிட்டத்தகாதவையல்ல, ஸமீபஸ்தங்களே என்கிறார். 'நண்ணிய' என்பது 'நணிய' என்று தொக்கிக் கிடக்கிறது. நண்ணத்தகுந்தவையே என்றபடி. அப்படியானால் அநுபவம் கிடைக்கவில்லையேயென்று அழுவானேன்? கிட்டியநுபவித்துக் களிக்கலாகாதோவென்ன, அதற்கு உத்தரமுரைக்கிறார்—கடையறப்பாசங்கள்விட்ட பின்னையன்றி அவனவைகாண்கொடானே என்று. இங்கே ஈடு;—"அவன் சுணையுடையவன், புறம்பேயுமொருவிஷயத்திலே நசைகிடக்க ஸ்வாநுபவத்தைக் காட்டிக்கொடான்: பின்னாட்டாதபடி ஸவாஸநமாக பாஹ்யருசிபோனாலல்லது போகஸ்தானங்களைக் காட்டிக் கொடான்." என்று. ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்திகாண்மின்;—"அவன் நம்முடைய நிறமும் வளையும் நெஞ்சும் தொடக்கமாகவுள்ள ஸர்வஸ்வத்லதையும் அபஹரித்துக் கொண்டு போனானாகிலும், பரமப்ராப்யமான திருநாடும் திருப்பாற்கடலும் திருமலையும் தன்னையாசைப்பட்டார்க்குக் காணநணியவாகில் காட்டாதொழிவானென்னென்னில், உங்கள் பக்கலுள்ள ஸங்கம் நிச்சேஷமாகப் போனாலல்லது அவனவை காண்கொடான்; ஆதலால் இனி உங்களோடுமுறவில்லையென்கிறார்." என்று. ... .... 8

3466 காண்கொடுப்பானல்லனார்க்குந்தன்னைக் கைசெயப்பாலதோர்மாயந்தன்னால் *
மாண்குறள்கோலவடிவுகாட்டி மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த *
சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த தேவபிராற்கென்னிறைவினேடு *
நாண்கொடுத்தேனினியென்கொடுக்கேன் என்னுடையநன்னுதல்நங்கைமீர்காள். 9

| | |
|---|---|
| ஆர்க்கும் | எப்படிப்பட்ட பேரளவுடையார்க்கும் |
| தன்னை காண் கொடுப்பான் அல்லன் | தன்னைக் காணக் கொடாதவனுயிருந்து வைத்து |
| மாயம் தன்னால் | தனது வஞ்சனத்தினாலே |
| கை செய் அப்பாலது ஓர் | அக்ருத்ரிமமாய் அத்விதீயமான |
| கோலம் மாண் குறள் வடிவு | ஸௌந்தரியத்தை யுடைய யாசக வாமன வேஷத்தை |
| காட்டி | (மஹாபலிக்கு) வெளிக்காட்டி (உடனே) |
| மண்ணும் விண்ணும் நிறைய மலர்ந்த | மண்ணுலகும் விண்ணுலகும் நிறையும்படியாக வியாபித்தவனாய் |
| சேண் சுடர் பல தோள்கள் தழைத்த | ஓங்கி விளங்காநின்ற பல திருத்தோள்களும் தழைத்திருக்கிற |
| தெவபிராற்கு | தேவபிரானான எம்பெருமானுக்கு |
| என் நிறைவினோடு | என்னுடைய ஸ்த்ரீத்வ பூர்த்தியோடே கூட |
| நாண் கொடுத்தேன் | லஜ்ஜையையும் இழந்தேன்; |
| நல் நுதல் என்னுடை நங்கைமீர்காள் | விலக்ஷணமான திருமுக மண்டலத்தையுடையீர்களாயிருக்கிற என்னுடைய தோழிகளே! |
| இனி என் கொடுக்கேன் | இன்னமும் என்ன இழக்கக் கடவேன்? |

* * *—கீழ்ப்பாட்டில் * கடையறப்பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே * என்று கூறின தலைவியைநோக்கி 'நங்காய்! எங்களோடு உறவை வேணுமாகில் நீ விட்டுத் தொலைக்கலாமேயொழிய அவன் காட்சி கொடுப்பதென்பது கிடையாது; ஆத்மாத்மீயங்களை இன்னமும் இழக்கலாமத்தனை' என்று தாய்மார்கள் சொல்ல, எல்லாம் பண்டே இழந்தாயிற்றன்றோ, இன்னமும் இழக்க என்னவிருக்கிறது? என்று அவர்களுக்குச் சொல்லுகிறாள்.

[தன்னை ஆர்க்கும் காண்கொடுப்பானல்லன்] தமது முயற்சியினால் காண நினைப்பார் எத்தனை சிறப்புப் பெற்றவர்களாயிருந்தாலும் அவர்களுக்குத் தன்னைக் காட்டிக் கொடுக்கு மியல்வினனல்லன் எம்பெருமான். இது தாய்மாருடைய வார்த்தையின் அநுவாதமிருக்கிறபடி. அவன் துர்லபன் என்றன்றோ நீங்கள் சொல்லுகிறீர்கள்; ஆமாம், அவன் துர்லபனென்றே கொள்ளுங்கோள் என்று அப்யுபகம்யவாதம் பண்ணுகிறபடி. துர்லபனென்று தெரிந்தும் அவனிடத்தே ஆசை கொள்வது தகுதியன்றென்று சொன்னவர்களை நோக்கி "காண்கொடுப்பானல்லன் ஆர்க்குந்தன்னை" என்று இசைந்து சொல்லிவிடுவதனால் லாபமில்லையே யென்னில்; லாபமோ நஷ்டமோ, அந்த விசாரம் இங்கில்லை. "இன்னமும் ஆத்மாத்மீயங்களை நீ இழக்கவேபோகிறாய்" என்று தாய்மார்கள் சொன்னதற்கு வலிதாக விடை கூறுவது மேல் முழுவதும். எந்த வடிவைக் காட்டி மஹாபலியின் ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொண்டானோ, அந்த வடிவையே காட்டி என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண்டானானபின்பு, இன்னமும் அவன் கொள்ளைகொள்ளத்தக்கதாய் நான் இழக்கத் தக்கதாய் என்ன இருக்கிறது என்பது கருத்து.

'கை செய் அப்பாலது' என்றது மாயத்தில் அந்வயிப்பதன்று; மாண்குறள் கோலவடிவுக்கு விசேஷணமாய் அதிலே அந்வயிக்கும். கைசெய்கைக்கு அப்பாலதான அழகையுடைய வடிவு. *ஓவியத்தெழுதவொண்ணா வுருவத்தாய்!* (கம்பர்.) என்றபடி. சித்திரத்திலும் எழுத வொண்ணாதபடி மிக அற்புதமாயமைந்த ஒப்புயர்வற்ற மிக அழகையுடைய வடிவைக்காட்டியென்றபடி. உபயவிபூதி நாதனான தான் ஒன்றுமில்லாதான் போலே யாசகனாய் வருகையும், சிறுகாலைக் காட்டிப் பெரிய காலாலே அளந்து கொள்ளுகையும் ஆகிய மாயத்தை நினைத்து, மாயந்தன்னால் எனப்பட்டது. மாவலி பரம சந்தோஷத்துடனே நீர்த்தாரையைக் கையில்விட, கையிலே நீர் விழுந்தளவிலேயே ஸமஸ்த லோகங்களும் விம்மவளர்ந்தான்; கற்பகச் சோலை பணைத்தாற்போலே திருத்தோள்கள் தழைத்தன. இந்திரனிழந்த ராஜ்யத்தை மீட்டுக்கொடுத்து அதனாலுண்டான மகிழ்ச்சிமிகுதியினால் வடிவுபுகர்பெற்று விளங்கிற்று: அப்படிப்பட்ட விலக்ஷணமான வடிவை எனக்குக்காட்டி எனது ஸர்வஸ்வமான அடக்கத்தையும் லஜ்ஜையையும் கொள்ளைகொண்டு போயினான்; அவற்றுக்கு மேற்பட இன்னமும் இழக்கக்கூடியது என்பாலொன்றுமில்லையே—என்றுளாயிற்று. ... ... 9

3467 என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் யானினிச்செய்வதென்என்னெஞ்சென்னை *
நின்னிடையேனல்லேனென்றுநீங்கி நேமியுஞ்சங்குமிருகைக்கொண்டு *
பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற்றோடு பான்மதியேந்தியோர்கோலநீலம் *
நன்னெடுங்குன்றம்வருவதொப்பான் நாண்மலர்ப்பாதமடைந்ததுவே. 10

என்னுடைய நல் நுதல் நங்கைமீர்காள் !—;
என் நெஞ்சு = எனக்கு விதேயமாயிருந்த நெஞ்சானது
நின் இடையேன் அல்லேன் என்று = 'உனக்கு நான் உறுப்பாவேனல்லேன்' என்று சொல்லி
என்னை நீங்கி = என்னை விட்டகன்று,
நேமியும் சங்கும் இரு கை கொண்டு = திருவாழி திருச்சங்குகளை இரண்டு திருக்கையிலுமேந்திக் கொண்டு,
ஓர் கோலம் நீலம் நல் நெடு குன்றம் = ஓர் அழகிய நீல மஹாபர்வதம்
நெடு சூழ் பல சுடர் ஞாயிற்றோடு பால் மதி ஏந்தி வருவது ஒப்பான் = பரந்து சூழ்ந்த பல சுடரையுடைத்தான ஸூர்யனோடு கூடவெளுத்த சந்திரனையும் (தன் சிகரத்திலே) தாங்கிக்கொண்டு நடந்து வருவது போன்றுள்ளவனுடைய
நாள் மலர் பாதம் அடைந்தது = அப்போதலர்ந்த செந்தாமரை போன்ற திருவடிகளையடைந்திட்டது:
இனி யான் என் செய்வது = இப்படி நான் நெஞ்சிழந்த பின்பு எதைச் செய்வது ?

* * *—'நங்காய் ! எது எப்படியிருந்தாலும் உனக்கு ஹிதமே கோருமவர்களான நாங்கள் சொல்லுமதை நீ கேட்கவேணுமே' என்று தாய்மார் சொல்ல, 'ஆமாம், கேட்கவேண்டியது அவசியந்தான் ; உங்கள் வார்த்தை கேட்கைக்கு நெஞ்சுவேணுமே; அது இங்கில்லையே, அவன் பக்கல் போயிற்றே, என் செய்வேன் ?' என்றாள் தலைவி.

யான் இனிச் செய்வது என் ?=ஸ்வதந்திரனை எம்பெருமானைத்தான் நியமிக்க முடியவில்லையென்றால், பரதந்திரமான நெஞ்சையும் அந்தோ! நியமிக்க முடியவில்லையே யான் என் செய்வேன்? என்கிறாள். 'என்னெஞ்சு' என்னும்படியாக எனக்கு விதேயமாயிருந்த நெஞ்சன்றோ ; அதைக்கொண்டு ஜீவிக்கவேண்டியவளன்றோ நான் ; இப்படியிருக்க, நிர்தாக்ஷிண்யமாய் அது என்னைவிட்டகன்றதே; அகன்றுபோம்போது வெட்டிதாகவொரு வார்த்தையும் சொல்லியன்றோ போயிற்று ; அது என்னென்னில் ; [நின்னிடையேனல்லேனென்று.] 'ஆழ்வீர் ! இனி உமக்கும் நமக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லைகாணும்' என்று உறவறுத்துக்கொண்டு போயிற்று. ஸம்ந்யாஸாச்ரமஸ்வீகாரம் செய்வார் போமாப்போலே யன்றோ போயிற்று. போனாலென்ன ? பின்தொடர்ந்து சென்று பிடிக்கவொண்ணாதோ வென்கிறீர்களோ ? பின்தொடரவொண்ணாதபடி கடலிலேயன்றோ சென்று புக்கது. கடல்வண்ணனுடைய திருவடிவாரத்திலே லயித்து விட்டதே ! இப்படி நெஞ்சைப் பறிகொடுத்தநான் உங்கள் ஹிதவசனங்கேட்கப் பரிகரமற்றிருக்கின்றேனே, என்செய்வேன் ? என்றாளாயிற்று.

பின்னடிகளில் எம்பெருமானை ஒரு குன்றமாக வர்ணிக்கிறாள். அதுதன்னிலும் இல்பொருளுவமை [அபூதோபமை உள்ளது. ஒரு திருக்கையில் திருவாழியாழ்வானையும், மற்றொரு திருக்கையில் திருச்சங்காழ்வானையும் ஏந்தியிராநின்ற பச்சைமாமலைபோல்மேனியனான எம்பெருமானுக்கு—ஏககாலத்திலே ஸூர்யசந்திரர்களைத் தன்னிடத்திலே கொண்டதொரு பெரியமலை ஏற்ற உவமையாம். திருவாழியாழ்வானுக்கு ஸூர்யனோடு ஸாம்யமும் திருச்சங்காழ்வானுக்குச் சந்திரனோடு ஸாம்யமும் ப்ரஸித்தம். * ஆங்கு மலரும் குவியும் மாலுந்திவாய், ஓங்கு கமலத்தினொண்போது, ஆங்கைத் திகிரி சுடரென்றும் வெண்சங்கம, வானிற்பகருமதியென்றும் பார்த்து.* (2348) என்ற பேயார் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. .... ... ... 10

3468 பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள்முற்றவிட்டு *
கோதில்புகழ்க்கண்ணன்தன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீதிலந்தாதியோராயிரத்துள் இவையுமோர்பத்திசையோடும்வல்லார் *
ஆதுமோர்தீதிலராகி இங்குமங்குமெல்லாமமைவார்கள்தாமே. * 11

| | |
|---|---|
| பாதம் அடைவதன் பாசத்தாலே | திருவடியையடைவதிலுண்டான ஆசையினால் |
| மற்ற வல் பாசங்கள் முற்ற விட்டு | புறம்புண்டான பற்றுக்களையுடைய வாஸனையோடே விட்டு |
| கோது இல் புகழ் கண்ணன் தன் அடி மேல் | கோதற்ற புகழையுடைய கண்ணபிரானது திருவடி விஷயமாக |
| வண் குருகூர் சடகோபன் சொன்ன | உதாரரான ஆழ்வார் அருளிச்செய்த |
| தீது இல் அந்தாதி ஓர் ஆயிரத்துள் | தீதற்றதாய் அந்தாதித்தொடையாயமைந்த ஆயிரத்துள் |
| இவையும் ஓர் பத்து | இவை பத்தையும் |
| இசையொடும் வல்லார் தாம் | இசையோடுங்கூடப் பயிலவல்லவர்கள் |
| ஆதும் ஓர் தீது இலர் ஆகி | ஒருவகைக் குற்றமுமற்றவர்களாகி |
| இங்கும் அங்கும் | உபய விபூதியிலும் |
| எல்லாம் அமைவார்கள் | எல்லாவகை நிறைவும் பெற்று விளங்குவர். |

* * *—இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிற பாசுரமிது, உபயவிபூதியிலும் பகவதநுபவமே யாத்திரையாயிருப்பதே இத்திருவாய்மொழி கற்கைக்குப் பலன் என்கிறது. புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விட்டபடியை எம்பெருமான் திருவுள்ளத்தில் நன்குபடுத்துமதுவே இத்திருவாய்மொழிக்கு உயிரான விஷயமாதலால் "பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு" என்றார்.

கோதில் புகழ்க்கண்ணன் = கண்ணனுடைய புகழ்க்கு ஏது கோது? என்னில்; அவனையும் விரும்பி மற்ற வன்பாசங்களையும் விரும்புகைதான் கோது; "குணங்களுக்குக் கோதாவது, தன்னையொழியப் புறம்பேயும் நசைபண்ணும்படியாயிருக்கை" என்பது நம்பிள்ளையீடு. அங்ஙனே கோதற்ற புகழையுடைய கண்ணபிரானது திருவடிகளிலே ஆழ்வாரருளிச்செய்தது தீதிலந்தாதியோராயிரம். நாராயணகதையைச் சொல்லுவதாக ஆரம்பித்த மஹாபாரதம் பூசல் பட்டோலையென்று பரந்தது. ராமவ்ருத்தாந்தம் சொல்லுவதாக எழுந்த ஸ்ரீராமாயணம்—ஸுப்ரஹ்மண்யோத்பத்தி புஷ்பகவர்ணனம் முதலானவற்றிலே பரந்தது; இத்திவ்வியப் பிரபந்தம் அப்படி இதர கதைகளின் ப்ரஸ்தாவகந்தமும் கொள்ளாமலிருப்பதுவே இதற்குத் தீதில்லாமை யென்க. அப்படிப்பட்ட ஆயிரத்தினுள் இப்பதிகத்தை இசையோடும் சொல்லுமவர்கள் *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும் * என்னும்படியான தீது ஒன்றுமில்லாதவராகி இஹலோகத்தோடு பரலோகத்தோடு வாசியற எங்கும் குறையற்றிருப்பர்கள் — என்றாராயிற்று. ... ... ... ... ... 11

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்து இரண்டாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—அங்குமிங்கும்.

உரையவதாரிகை ;—கீழ்த் திருவாய்மொழியில் பத்தாம் பாட்டில் * ஓர் கோலநீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பான் * என்று எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹவைலக்ஷண்யத்தையநுஸந்தித்தாரே ; அவ்வநுஸந்தானம் திருவுள்ளத்திலே மிக ஊன்றியிருந்தது ; இப்படிப்பட்ட ஸௌந்தர்யஸௌகுமார்யங்களுக்குக் கொள்கலமான இவ்வடிவுடனே ப்ரயோஜநாந்தரபரரான ப்ரதிகூலர்வர்த்திக்கிற இந்த நிலத்திலே தனியே வந்து உலாவுகின்றானே ?' பரிவர் ஒருவருமில்லையே, என்ன தீங்கு நேரிடுமோ ! என்று ஆழ்வார் வயிறெரிந்து பயப்பட, அதற்கு எமபெருமான் " ஆழ்வீர் ! நமக்குப் பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் உண்டு ; ஒரு குறையுமில்லை ;

வீணுகை ஏதுக்கு அஞ்சுகின்றீர் ? அஞ்சவேண்டா ” என்றருளிச்செய்ய, ஆழ்வார் தாம் ஒருவாறு அச்சம் தீர்ந்தவரான படியை இத்திருவாய்மொழியிலே அருளிச் செய்கிருர்.

இதில், முதலில் * ஆளுமாளாராழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம், வாளும் வில்லுங் கொண்டு பின் செல்வார் மற்றில்லை * என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஆழ்வார் பரிந்து அஞ்சினமை தெரியும் ; மேலே * கலக்கமில்லாநல்தவ முனிவர் கரைகண்டோர், துளக்கமில்லாவானவரெல்லாந் தொழுவார்கள் * என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஒருவாறு மனம் தேறினமை தெரியவரும. ... ... ... *

3469 அங்குமிங்கும் வானவர்தானவர்யாவரும் *
எங்குமினையை யென்றுன்னை அறியகிலாதலற்றி *
அங்கஞ்சேரும் பூமகள்மண்மகளாய்மகள் *
சங்குசக்கரக்கையவனேன்பர் சரணமே. 1

| | | | |
|---|---|---|---|
| அங்கும் இங்கும் எங்கும் | மேலுலகங்களிலும் இவ்வுலகத்திலும் மற்றுமெவ்வுலகங்களிலுமுள்ள | பூமகள் மண்மகள் ஆய் மகள் | ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி யென்னும் தேவிமார் |
| | | அங்கம் சேரும் | திருமேனியில் சேர்ந்திருக்கப் பெற்றூர்களென்றும், |
| வானவர் தானவர் யாவரும் | தேவர்கள் அசுரர்கள் முதலான யாவரும் | சங்கு சக்கரம் கையவன் | திருவாழி திருச்சங்குகளைத் திருக்கையிலேந்திய பெருமான் |
| உன்னை இனையை என்று அறியகிலாது அலற்றி | உன்னை உள்ளபடி அறியப் பெருது எதையோ சொல்லிக் கூப்பிட்டு | சரணம் என்பர் | நம்முடைய ஆபத்துக்களைப் போக்கவல்லவன் என்றும் ரக்ஷகத்வ மாத்ரத்தையே அநுஸந்தித்திருப்பர்கள், |

* * *—எம்பெருமானிடத்தில் ஆச்ரயிக்கின்ற அதிகாரிகளை யெல்லாம் ஆழ்வார் உற்று நோக்கிஞர்; எதற்காக வென்னில்; எம்பெருமான் பக்கலிலே பரிவதற்கு நமககுத் துணையாவார் ஆரேனுமுண்டோ ? என்று பார்க்கைக்காக. உற்று நோக்கின விடத்திலே ஐச்வர்யார்த்திகள் முந்துறமுன்னம் திருவுள்ளத்தில் பட்டார்கள் ; ஐயோ ? இவர்கள் எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்தையறிந்து பரிகையன்றிக்கே தங்களுக்கு அப்பெருமான் இஷ்ட ஸாதனமென்று கொண்டிருக்கிருர்களே! என்று வெறுத்து இவ்வெறுப்பை எம்பெருமான்றன்னையே நோக்கியருளிச் செய்கிருர்.

அங்குமிங்கும் எங்கும் வானவர்தானவர்யாவரும் உன்னை இனையையென்று அறியகிலாது— மேலுலகங்களிலும் கீழுலகங்களிலும் மற்றுமுள்ள எவ்விடங்களிலுமிராநின்ற அநுகூலர்களான வானவர்களும் பிரதிகூலர்களான தானவர்களும், இவ்விரண்டுவகுபபிலும் சேர்ந்தவர்களான மநுஷ்யாதிகளுமான யாவரும் எம்பெருமானே ! உன்னை இப்படிப் பட்டவனென்று அறியாமல் என்றபடி. உன்னுடைய ஸௌகுமார்யத்தை யறியாதவர்களாய் என்பது கருத்து. ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் இப்போது அவனுடைய ஸௌகுமார்யமே உறைத்திருப்பதனுலும், அதனுலேயே தாம் அவன் பக்கலிலே பரியத்தேடுகையாலும் இவ்விடத்தில் ‘ இனையையென்று உன்னையறியகிலாது ’ என்பதற்கு இதுவே பொருளாகத்தகும். “ கருமுகை மாலைபோலேயிருக்கிற உன்படியறியாதே” என்பது ஈடு.

எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்தை அவர்கள் அறியாதே செய்கிற காரியம் என்னவென்றல் ; [சரணமே யென்பர்] எம்பெருமானுக்கு ரக்ஷையிடப்பாராதே அவன் பக்கல் நின்றும் தாங்கள் ரக்ஷை பெறப்பார்ப்பர்கள். இன்னமும் அவர்கள் செய்வதென்னென்னில் ; “ பூமகள்மண்மகளாய்மகள் அங்கஞ் சேரும் ; சங்கு சக்கரக் கையவன் ” என்றும் சொல்லுவர்கள் ; இப்படிச் சொல்வது நன்றுதானே ; இதில் பிசகு ஒன்றுமில்லையே ; இதை நிந்தனைக்கு உறுப்பாக்குவதேன் ? என்னில் ; வாயாற் சொல்லுகிற வாசகம் நன்றேயானுலும் அவர்களின் அபிப்ராயம் நன்றன்று ; பூமகள்

மண்மகள் ஆய்மகளோடுண்டான சேர்த்திக்கும் சங்கு சக்கரக்கையவனை இருப்புக்கும் பல்லாண்டு பாடுகிறவர்களாய்க் கொண்டு அந்த வாசகங்களைச் சொன்னார்களாகில் நன்றே; பல்லாண்டு பாடும்படியான பரிவு அவர்களுக்கு இல்லையே; தங்களுடைய இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவ்ருத்திக்கும் உறுப்பாகப் புருஷகார பூதர்களும் திவ்யாயுதங்களு முண்டு என்று ப்ரயோஜனத்தில் விருப்பத்தாலே சொல்லுகிற வாசகமாகையாலே அதுபற்றி ஆழ்வார் க்ஷேபித்துக்கூறுகின்றாரென்க.

அலற்றி =' ஐயோ! எம்பெருமானுக்கு என் வருகிறதோ!' என்று வயிறெரியாதே அவனுடைய ரக்ஷகத்வத்தையும் சக்திபூர்த்தியையுஞ் சொல்லுகிற வசனங்களைக் கொண்டு அலற்றுவர்களாம் அவர்கள். * வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு * என்று அச்சேர்த்திக்கு மங்களா சாஸனம் பண்ணுவாரில்லை; கையும் திருவாழியுமான அழகை அநுபவிக்க இழிவாரில்லை; நம் விரோதிகளைத் துணித்து நம்மை ரக்ஷிக்கைக்கு வேண்டுவனவுண்டென்று இவ்வளவே நினைத்து ஏதோ சப்தராசிகளை யலற்றுகிறார்களே யென்று வருந்தியருளிச் செய்தாராயிற்று.

ஆறாயிரப்படியருளிச் செயல்;—“ஸ்வர்க்காதிலோகங்களிலும் இந்த லோகத்திலும் மற்று மெங்கும் வர்த்திக்கிற தேவதாநவப்ரப்ருதி ஸமஸ்தாத்மாக்களும், ஏவம்பூதனென்று உன்னையுள்ளபடி யறியாதே, லக்ஷ்மீபூமி நீளாநாயகனாய் சங்கசக்ரகதாதரனாய் பரமப்ராப்யனாயிருந்த வுன்னைத் தங்களுக்கு உபாயமென்பர்; ஆதலால் எனக்கு அவர்கள் துணையல்ல ரென்கிறார்.” ... ... ... ... *

3470 சரணமாகிய நான்மறைநூல்களுஞ்சாராதே *
மரணந்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம் *
கரணப்பல்படை பற்றறவோடுங்கனலாழி *
அரணத்திண்படை யேந்தியவீசற்காளாயே. 2

| | | | |
|---|---|---|---|
| சரணம் ஆகிய நால்மறை நூல்களும் சாராதே | ஐச்வர்யத்திற்குரிய உபாயங்களை விதிக்கின்ற நால்வேதங்களாகிற சாஸ்த்ரங்களை விட்டிட்டு | அரணம் திண் படை ஏந்திய ஈசற்கு ஆள் ஆயே | க்ஷேமங்கரமான திவ்யாயுதத்தைத் தரித்துள்ள எம்பெருமானுக்கு சேஷபூதர்களாயிருந்து வைத்தே [முமுக்ஷுக்களாகியு மென்றபடி] |
| கரணம் பல் படை பற்று அற ஓடும் கனல் ஆழி | உபகரணங்களை யுடைய, பல சத்ருஸேனைகள் நிச்சேஷமாக வோடும்படி ஜ்வலிக்கின்ற திருவாழியாகிற | மரணம் தோற்றம் வான் பிணி மூப்பு என்ற இவை மாய்த்தோம் | இறப்பும் பிறப்பும் மஹாவியாதிகளும் கிழத்தனமுமான இவற்றைப் போக்கிக்கொண்டவித்தனை யொழிய வேறில்லையே |

* * *—கீழ்ப்பாட்டில் ஐச்வர்யார்த்திகளை நிந்தித்துப் பேசினார்; இப்பாட்டில் கைவல்யார்த்திகளை க்ஷேபித்துப் பேசுகிறார். ஆனால் மேலெழப் பார்க்குமளவில், இதில் பிறருடைய நிந்தையிருப்பதாகப் புலப்படாது; இரண்டாமடியில் “மரணந்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவை மாய்த்தோம்” என்று ஆழ்வார் தம்மைப்பற்றி ஏதோ சொல்லிக்கொண்டிருக்கின்றாரேயல்லது பிறரைப்பற்றியொன்றும் சொல்லவில்லையே; தன்மையான வினைமுற்று, காண்கிறதேயல்லது முன்னிலையான வினைமுற்று காணவில்லையே யென்று பலரும் சங்கிக்க இடமுள்ளது. ஆழ்ந்து குறிக்கொண்மின்; முகுந்த மாலையில் * நாதே நः புருஷோத்தமே * என்கிற ச்லோகத்தில் “யம்கஞ்சித் புருஷாதமம் கதிபயக்ராமேசம் அல்பார்த்ததம் ஸேவாயை ம்ருகயாமஹே நரமஹோ மூகா வராகா வயம் * என்றுள்ளது; புருஷோத்தமனான எம்பெருமான் நலமந்தமில்லதோர் நாடுதருவானாய் நிற்க, ஐயோ! அறிவிலிகளான நாம் க்ஷுத்ரபலன்களைத் தருமவனான ஓர் அற்பனைத் தேடியோடுகின்றோமே! என்று ஆத்ம நிந்தையே இதிலுள்ளது; ஆனாலும் இது தம்மைப்பற்றி இகழ்ந்து கூறுவதில் நோக்குடையதன்று; பிறரையிகழ்ந்து கூறு

வதிலேயே முழுநோக்கு. உலக வழக்கிலும் இஃது உள்ளது. "நீங்கள் நன்றாக வாழ்ந்துவிட்டீர்களே !" என்று பிறரை ஏசிச் சொல்லவேண்டுமிடத்து 'நாம் நன்றாக வாழ்ந்துவிட்டோமே !' என்று தம்மையே ஏசிச் சொல்லுவதுண்டு. அந்த நியாயமே இங்குக் கொள்ளத் தக்கது.

"கைவல்யார்த்திகளும் தமக்குத் துணையல்லரென்கிறார்" என்பது இப்பாட்டுக்கு ஆறாயிரப்படியவதாரிகை. கைவல்யார்த்திகளென்கிற பதமும் இப்பாட்டில் இல்லை; அவர்கள் துணையல்லர் என்பதைத் தெரிவிக்கும் வாசகமும் இதில் வியக்தமாக இல்லை; ஆழ்ந்து நோக்குதலில் கிடைக்கு மிது.

சரணமாகிய நான் மறைநூல்களுஞ்சாராதே என்றது—க்ஷுத்ரப்ரயோஜனங்களை விதிக்கும் முகத்தால் நமக்குத் தஞ்சமாகிய வேதசாஸ்த்ரங்களைப் பற்றி க்ஷுத்ர பலன்களை லபித்துப்போகாதே என்றபடி. இது வொருநன்மையே; இந்த நன்மைக்குமேல் மற்றொரு நன்மையுமுண்டு; அது, கரணப்பல்படை யென்று தொடங்கிப் பின்னிரண்டடிகளாற் சொல்லப்படுகிறது. விரோதி நிரஸனத்தில் வல்லவனை திருவாழியாழ்வானைத் தாங்கியுள்ள எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தல் கைவல்யநிஷ்டர்களுக்குமுண்டே; ஸாதநாநுஷ்டான தசையில் பகவத் ப்ராப்திகாமர்களுக்குப் போலே ஆத்மப்ராப்திகாமர்களுக்கும் பகவத்பஜன முண்டாகையாலே.

ஆக, சரணமாகிய நான்மறைநூல்களும் சாராமலிருந்தும் ஈசற்கு ஆளாகியிருந்தும் மரணம் தோற்றம் வான்பிணிமூப் பென்றிவைமாய்த்தலாகிற ஜராமரண மோக்ஷமே தவிர, பகவத் கைங்கர்ய ப்ராப்தியென்பது கேவலர்க்குக் கிடையாமையாலே அவர்களையும் க்ஷேபித்தாராயிற்று. மரணம் தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தீர்களே தவிர, வேறு அத்தாணிச் சேவகம் பெற்றீர்களில்லையே; ஆகையாலே நீங்களும் எனக்குத் துணையல்லீர் என்றதாக முடிந்தது.

கரணப்பல் படையித்யாதிக்கு இரண்டுவகையாகப் பொருள் நிர்வஹிப்பதுண்டு:—கரணம் என்று உபகரணங்களைச் சொன்னபடியாய், யுத்தத்திற்கு வேண்டிய உபகரணங்களையுடைத்தாய்ப் பலவகைப்பட்டதான படை—சத்ருக்களின் சேனையானது, பற்று அற—மிச்சமில்லாமே, ஓடும்படி கனல்கின்ற திருவாழி—என்பது ஒரு வகையான பொருள். (2) கரணம் என்று இந்திரியங்களுக்கும் பேராகையாலே, கரணப்பல்படை—இந்திரிய ஸமூஹமானது, பற்று அற—விஷயங்களில் பற்றற்று மீளும்படியாக, என்று மற்றொரு பொருள். இப்பொருளில், பற்றற என்பது ஆளாயே என்பதில் அந்வயிக்கும். "ஓடுங்கனலாழியரணத்திண்படையேந்திய ஈசற்கு, கரணப்பல்படைபற்றற ஆளாயே" என்று இங்ஙனே அந்வயங்காண்க. ... ... ... 2

3471 ஆளுமாளார் ஆழியுஞ்சங்குஞ்சுமப்பார்தாம் *
வாளும்வில்லுங்கொண்டு பின்சேல்வார்மற்றில்லை *
தாளுந்தோளும் கைகளையாரத்தொழக்காணேன் *
நாளும்நாளும் நாடுவனடியேன்ஞாலத்தே. 3

| | | | |
|---|---|---|---|
| ஆளும் ஆளார் | (கைங்கர்யத்திற்காக) ஒரு ஆளையும் வைத்துக்கொள்ளு | தாளும் தோளும் | திருவடிகளிலும் திருத்தோள்களிலு மீடுபட்டு |
| யும் சங்கும் சுமப்பார் தாம் | திருவாழி திருச்சங்குகளைச் சுமப்பவர் தாமேயாயிருக்கிறாரே; (அப்படியானாலும்) | கைகளை ஆர தொழகாணேன் | கையாரத் தொழுவாரையுங் காண்கின்றிலேன்; (ஆதலால்) |
| வாளும் வில்லும் கொண்டு | நந்தகவாளையும் சார்ங்க வில்லையுங் கொண்டு | ஞாலத்து அடியேன் நாளும் நாளும் நாடுவன் | இவ்விபூதியிலே அடியேன் நாள்தோறும் பின் செல்லப் பாராநின்றேன். |
| பின் செல்வார் மற்று இல்லை | பின் செல்லுகைக்கு ஒருவருமில்லையே; | | |

* * *—கீழிரண்டுபாட்டிகளிலே தமக்கு ஒருவரும் துணையில்லையென்று சொன்ன முகத்தாலே தமமுடைய தனிமையை வெளியிட்டாராயிற்று. இப்படி தம் முடைய தனிமையைச் சொன்ன ப்ரஸங்கத்தாலே அவனுடைய தனிமையை நினைத்து வருந்துகிறாரிப்பாட்டால்.

ஆளும் ஆளார்=எம்பெருமானுக்கு உபய விபூதியும் ஆளாயிருக்கச் செய்தேயும் அப்பெருமான் ஒரு சேவகனைத் தன்னிடம் வேலைக்கு வைத்துக்கொள்ளவில்லையே யென்று வயிறு பிடிக்கிறாராழ்வார்; எதனாலேயென்னில்; [ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்] ஆள் இருந்தால் திருவாழி திருச் சங்குகளைத் தாமே சுமப்பரோ? மடாதிபதிகள் தம் முடைய த்ரிதண்டத்தையும் ஒரு கைங்கர்யபரர் கையிலே கொடுத்துத் தாம் கைவீசிக் கொண்டு போகா நின்றார்களே; அவர்களுடைய திருமேனி அத்தனை ஸுகுமாரமானால் எம்பெருமானது திருமேனியின் ஸௌகுமார்யம் வாய்கொண்டு வருணிக்கப்போமோ? திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களைத் தாம் சுமக்கலாமோ? அவை சுமக்க ஆள் வைத்துக்கொள்ளவேண்டாவோ? என்கிறார்.

இங்கே நம்பிள்ளையீடு;—'விபூதித்வயத்திலும் பரிகைக்கு ஆளில்லை; தனியே ஒருவரை ஆளவேணுமென்றிருக்கிறார், நித்யஸூரிகள் பகவதனுபவத்திலே அந்யபரர்; ஸம்ஸாரிகள் சப்தாதிகளிலே அந்யபரர்; (ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்) ஆபரண மான திவ்யாயுதங்கள், அவன் ஸௌகுமார்யத்தாலே மலையெடுத்தாற் போலே சுமை யாய்த் தோற்றுகிறது இவர்க்கு."

திருவாழி திருச்சங்குகள் எம்பெருமானுக்கு நிரூபகங்களாகையாலே அவற்றை அவனே சுமந்தாக வேண்மேயல்லது பிறர் சுமக்கக்கூடுமோ? என்று சில பரமை காந்திகள் சொல்லுவதாகக் கொண்டு, அதைவிட்டு, வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை என்று வேறொன்றிலே தோள்மாறுகிறார். ராமாவதாரத்திலே இளைய பெரு மாள் *ப்ருஷ்டதஸ் து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாம ஹ* என்னும்படியாக வாளும் வில்லுங் கொண்டு பின் தொடர்ந்து திரிந்தாரே; அப்படியொருவரைப் பின்னேகொண்டு செல்ல லாகாதோ வென்கிறார்.

தாளுந் தோளும் கைகளையாரத் தொழக்காணேன்=பெருமாள் நடக்கும்போது மாறி யிடுந் திருவடிகளும் வீசுகின்ற திருத்தோள்களும் காப்பிட வேண்டும்படி யிருக்குமே; அந்தோ, அவற்றுக்கும் மங்களாசாஸனம் செய்வாரில்லையே! என்கிறார். கைகளையார என்றது—கைகளார என்றபடி; ஐகாரம்—சாரியை. தொழக் காணேன்—இன்னார் தொழ என்பது வியக்தமாக இல்லாமையாலே, பிறர் தொழக் காணேன்; நான் தொழும்படி காணேன் என்று இரண்டு வகையாகவும் கொள்ளலாம். ஆறாயிரப்படியில்—"தானெழுந்தருளும்போது அவன் திருவடிகளையும் திருத்தோள்களையும் என்னுடைய கைகளினுடைய விடாய் தீரும்படி தொழக் காணப்பெறுகிறிலேன்" என்று காண்கை யாலே, திருவடிகளையும் திருத்தோள்களையும் ஆழ்வார் தாம் தொழப் பெறாமே வருந்தி யருளிச் செய்வதாகத் தெரிகிறது. திருவடிகளுக்கும் திருத்தோள்களுக்கும் பரிகின்ற வர்களைக் காணேன் என்கிற பொருளும் பொருந்தும். ஆக, கீழ் மூன்றடிகளாலும் பரிவர் இல்லாமைக்கு வருந்தி, இனி ஈற்றடியினால் தம்முடைய பரிவின் மிகுதியைக் காட்டுகின்றார். நாளும்நாளும் நாடுவனடியேன் ஞாலத்தே என்று. [ஞாலத்தே] இங்கே ஈடு இன்சுவை மிக்கது; "பரமபதத்திலே யிருந்து அஸ்தாநே பயசங்கை பண்ணு கிறேனோ? ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம் பண்ணுவார் நாகபாசத்தை யிட்டுக்கட்டுவார், அழைத்து வைத்து மல்லரையிட்டு வஞ்சிக்கத்தேடுவார், பொய்யாஸன மிடுவாராகிற் தேசத்திலே வர்த்தியா நின்றால் நான் அஞ்சாதே செய்வதென்?." .... ... 3

3472 ஞாலம்போனகம்பற்றி ஓர்முற்றாவுருவாகி *
ஆலம்பேரிலை அன்னவசஞ்செய்யுமம்மானே *
காலம்பேர்வதோர் காரிருளூழியொத்துளதால் * உன்
கோலங்காரேழில் காணலுற்றழுங்கோர்டியேற்கே. 4

| | | | |
|---|---|---|---|
| ஓர் மூற்று உரு ஆகி | மிகச் சிறு பிராயமான வடிவை யுடையையாய் | உன் கோலம் | உனது வடிவழகை |
| ஞாலம் போனகம் பற்றி | ஜகத்தையெல்லாம் அமுது செய்து | காணல் உற்று | காணவேணு மென்றாசைப்பட்டு |
| ஆல் பேர் இலை | ஆலினுடைய மிகச் சிறிய இலையிலே | ஆழும் | அதிலே ஆழங்காற்பட்டிருக்கின்ற |
| அன்னவசம் செய்யும் அம்மானே | கண் வளர்ந்தருளுகிற ஸ்வாமியே ! | கொடியேற்கு | கொடியேனாகிய எனக்கு |
| கார் எழில் | காளமேகம்போன்றழகிய | பேர்வது ஓர் காலம் | நிகழ்கிற ஒரு க்ஷணவகாசமானது |
| | | கார் இருள் ஊழி ஒத்து உளது | காடாந்தகாரம் மிக்க கல்பம் போலே நீள்கின்றது. |

* * *—கீழ்ப்பாட்டில் * வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை * என்று அஞ்சினவாறே, எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! நம்மைப்பற்றி நீர் அஞ்சவேண்டுமோ? நம்முடைய ஸர்வரக்ஷகத்வப்பெருமையை நீர் அறியீரோ?' என்று அப்பெருமையைக் காட்டிக்கொடுத்தான்; (அதாவது) வடதளசாயி விருத்தாந்தத்தை நினைப்பூட்டினான்; அதை யநுஸந்தித்துத் தம்முடைய தளர்சியை விண்ணப்பஞ்செய்கிறார் இதில்.

ஞாலம் போனகம் பற்றி=ஆலிலையமர்ந்த பெருமானுக்கு உலகம் முழுவதும் உணவாயிற்று; 'இது நமக்கு ஸாத்மிக்குமா ஸாத்மியாதா?' என்று கூட ஆராயாமல் பூமிப்பரப்பையெல்லாம் வயிற்றிலே எடுத்து வைத்துக்கொண்டமைக்கு வயிறெரிகிறார். அதற்குமேலே மற்றொரு வயிற்றெரிச்சலுமாகிறது, ஓர் முற்றுருவாகி=மிகச் சிறு பிராயமானபடி. "பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு" என்றதாயிற்று. அதற்குமேலே, ஆலம் பேரிலை அன்னவசஞ்செய்யுமம்மானே!=பேரிலை என்றது எதிர்மறையிலக்கணையால் சிறிய இலை என்றபடி. மிகச்சிறிய ஆலந்தளிரிலே திருக்கண்வளர்ந்தருளும் பெருமானே!. வயிறாரவுண்டதால் வருமுறக்கத்திற்கு அன்னவச மென்று பெயர். வையமேழையுமுண்ட ஆயாஸத்தினால் திருக்கண்வளர்ந்தருள நினைத்தால் விசாலமானதோரிடத்தைக் கற்பித்துக்கொண்டு அதிலே * தன்தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி * என்னும்படியே விசாலமாகக் கண்வளர்ந்தருளலாகாதோ? மிகச்சிறியதாய் முகிழ்விரியாததான ஆலந்தளிரிலேயோ கிடப்பது? சரிந்து விழுந்தால் அந்தோ! என்னாகும்? என்று வயிறு பிடிக்கிறார்.

அன்னவசஞ் செய்யு மென்றவிடத்து ஈடு;—"உணவுக்கீடாக இடம்வலங் கொள்ளும்; யசோதைப் பிராட்டி தொட்டிலில் பண்ணும் வ்யாபாரமெல்லாம் பண்ணுமாயிற்று அதுக்குள்ளே."

இனி, பின்னடிகளால் தம்முடைய அச்சமிகுதியை விவரிக்கிறார். காரெழில் உன் கோலம் காணலுற்று ஆழும் கொடி யேற்கு, பேர்வதோர் காலம் காரிருள் ஊழியொத்துளதால் என்று அந்வயிப்பது. மங்களாசாஸனம் பண்ணுகைக்கு உனது அழகிய வடிவைக்காண ஆசைப்பட்டு அது பெறாதே நோவுபடுகிற மஹாபாபியானவெனக்கு ஒரு க்ஷணகாலமும் கல்பகோடிஸஹஸ்ரமாக நெடுகாநின்றது காண்! என்கை. ஆறாயிரப்படி;—"ஓர் முற்றுருவுருவாய் அந்தப்பிள்ளைத்தனத்தாலே ஸர்வ லோகங்களையும் அமுதுசெய்து, பெரிய வெள்ளத்திலே சிறியதோராலிலையிலே, யசோதைப் பிராட்டியைப் போலேயிருப்பாளொரு தாயாருமின்றியே தனியே கண்வளர்ந்தருளுகிற தசையிலே துணையாயிருக்கப்பெறுமையாலும் உன் வடிவழகைக் காணவாசைப் பட்டுப்பெறாமையாலும் அகாதமான துக்கார்ணவத்திலே நிமக்நனாய்க் கிடக்கிற வெனக்கு ஒரு க்ஷணமானது அந்தகாரமயமான ராத்ரி யுகமாய்க் செல்லாநிற்கிறதென்கிறார்." ... .... 4

3473 கோடியார்மாடக் கோளூரகத்தும்புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *
அடியாரல்லல்தவிர்த்தவசவோ அன்றேலிப்
படிதான் * நீண்டுதாவியவசவோ பணியாயே. 5

| | | | |
|---|---|---|---|
| கொடி ஆர் மாடம் | கொடிகள் நிறைந்த மாடங்களையுடைய | அடியார் அல்லல் தவிர்த்த அசவோ | (பல திருவவதாரங்கள் செய்து) அடியார்களின் துன்பங்களைப் போக்கின சிரமத்தினாலோ ? |
| கோளூர் அகத்தும் புளிங்குடியும் | திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் | அன்றேல் | அல்லது, |
| மடியாது | இடம் வலங்கொள்ளாமல் | இப்படி | இப் பூமியை |
| இன்னே | இன்று காணும் விதமாகவே | நீண்டு தாவிய அசவு தானோ | ஓங்கியளந்த சிரமத்தினாலோ ? |
| நீ துயில் மேவி மகிழ்ந்தது தான் | நீ சயனத்தை விரும்பி மகிழ்ந்து திருக்கண் வளர்ந்தருள்வதானது, | பணியாய் | கூறியருளவேணும். |

* * *—கீழ்ப்பாட்டிலே * ஆலம் பேரிலை அன்னவசஞ் செய்யுமம்மானே !* என்று ப்ரளயார்ணவத்திலே தனியே கண்வளர்ந்தருளினவிடத்திற்கு வயிறெரிந்த ஆழ்வாருடைய வயிற்றெரிச்சல் தீர, திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் பரிவர்பலர் புடை சூழத்திருக்கண்வளர்ந்தருளாநின்றபடியைக் காட்டிக்கொடுக்க, இக்கிடைகளிலே யீடுபட்டுப் பேசுகிறார். இப்பாட்டில் திருக்கோளூரையும் திருப்புளிங்குடியையும் பிரஸ்தாவித்தது மற்றுமுள்ள சயனத் திருப்பதிகளுக்கும் உபலக்ஷணம். * நாகத்தணைக் குடந்தை வெஃகாத்திருவெவ்வுள், நாகத்தணையரங்கம் பேரன்பில்* என்று திருமழிசைப் பிரானும், *அரங்கம் மெய்யம் கச்சி பேர்மல்லை* என்று திருமங்கை மன்னனும் தொடுத்தருளின சயனத்திருப்பதிகள் பலவும் இங்கே விவக்ஷிதமாகலாம். இத்திருப்பதிகளிலே ஆடாமல் அசையாமல் நீ திருக்கண்வளர்ந்தருள்வதற்கு என்ன காரணம்? மஹத்தான சிரமமோ? திருவடிகளிலே சரணம் புகுந்த இந்திராதி தேவர்களுக்காக ராவணாதிகளை அழியச்செய்து அவர்களது துக்கங்களைப் போக்கின விளைப்போ? அன்றியே, அன்றே பிறந்து அன்றே வளர்ந்து ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு உலகமெல்லாம் தாவியளந்த சிரமமோ? என்கிறார். இவ்விடத்தில், * நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலமேனமாய் இடந்த மெய்குலுங்கவோ?* இத்யாதியான திருச்சந்த விருத்தப் பாசுரம் நினைக்கத் தக்கது.

கோடியார் மாடம் = மாடங்களுக்குக் கொடிகட்டியிருப்பதும் ஆழ்வார்க்கு அச்சத்தை விளைக்கிறதென்று நம்பிள்ளை திருவுள்ளம்பற்றி யருளிச் செய்யுமழகு பாரீர்—"சத்ருக்கள், கிடந்தவிடமறிந்து அபிசரிக்கும்படி கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோ? கொடிக்கு பயப்படவல்லார் இவரைப்போலில்லை; கம்ஸபயத்தாலே ஒளித்துவளர்ந்தாப் போலே யிருக்கலாகாதோ?" என்பன ஈட்டு ஸ்ரீஸூக்திகள். இந்தப்பதிகம் பயம்மிக்கு அருளிச் செய்வதாகையாலே இங்ஙனே பொருள் பணித்தது இன்சுவை மிக்கதேயாம். "ஆச்ரிதர்க்கு ஆத்மதானம் பண்ணுகைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிற திருக்கோளூரிலும்" என்பது ஆறாயிரப்படியருளிச்செயல்,

மடியாது = உலகில் உறங்குமவர்கள் சற்று இடது பக்கமாயும் சற்று வலது பக்கமாயும் மாறிமாறியசைந்து கிடப்பதுண்டே; அப்படி ஒருபோதும் அசையாமல் என்றபடி. இதற்கு மற்றொரு பொருளும் அருளிச் செய்யப்படுகிறது; திருப்பதிகளிலே எம்பெருமான் இப்படி திருக்கண்வளர்ந்தருள்வதானது நமக்காகவன்றோ வென்று இந்நிலவுலகத்தவர்கள் பரிந்து ஈடுபடவேண்டுமே; அப்படி ஒருவரும் ஈடுபடக்காணாமையாலே எம்பெருமான் இக்கிடையைவிட்டு எழுந்துபோக வேண்டியதன்றோ ப்ராப்தம்; அப்படியெழுந்து போகாமே, என்றேனுமொருநாள் யாரேனுமொருவர் பரியக்கூடுமென்று கிடக்கிறானாகச் சொல்லுகிறபடி. அசவு—அயர்வு. ... ... 5

3474 பணியாவமரர் பணிவும்பண்புந்தாமேயாம் *
அணியாராழியும் சங்கமுமேந்துமவர்காண்மின் *
தணியாவெந்நோய் உலகில்தவிர்ப்பான் * திருநீல
மணியார்மேனியோடு என்மனஞ்சூழவருவாரே. 6

| | | | |
|---|---|---|---|
| பணியா அமரர் | எவரையும் பணிய வேண்டாத நித்ய ஸூரிகளினுடைய | தணியா வெம் நோய் தவிர்ப்பான் | ஒருகாலும் தணியாத வெவ்விய நோய்களைத் தவிர்ப்பதற்காக |
| பணிவும் பண்பும் | பணிவுக்கும், ஞானம் முதலிய குணங்களுக்கும் | திரு ஆர் நீலம் மணி மேனியோடு | அழகியதாய் நீலமணி போன்றதான வடிவோடுகூட |
| தாமே ஆம் | தாமே இலக்காயிருப்பவரும், | என் மனம் சூழ உலகில் வருவார் | என் மனம் பிரமிக்கும்படியாக இவ்வுலகில் வந்து உலவுவார். |
| அணி ஆர் ஆழியும் சங்கமும் ஏந்துமவர் | ஆபரணமாகப் பொருந்திய திருவாழி திருச்சங்குகளைத் தாங்கி நிற்பவருமான அப் பரம புருஷர் | | |

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய சயனத்தை நினைத்துப் பரிந்து பேசின ஆழ்வாரை நோக்கி 'நீர் இப்படி துடிக்கக் கடவீரோ? அவன் ஸர்வரக்ஷகனன்றோ?' என்று சொல்ல; அதற்கு 'நித்யஸூரிகளின் பரிவுக்கு இலக்கானவவன் ஸம்ஸாரத்திலே அவ்வடிவோடே வந்து உலாவாநின்றால் நானிப்படி துடிக்காமலிருக்க முடியுமோ? வேறு என் செய்வது?' என்கிறார். பணியாவமரர் என்று நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. எம்பெருமானைத் தவிர வேறுயாரையும் ஒருநாளும் பணிந்தறியாத அமரர்களன்றோ நித்யஸூரிகள். அவர்களுடைய பணிவுக்கும் ஞானம முதலிய குணங்களுக்கும் தாமே இலக்காயிருக்குமவர் என்றபடி. ஆறாயிரப்படியில் நிர்வாஹம் வேறுவகையாகவுள்ளது; "ஸ்வாச்ரித சதுர்முகாதி தேவர்களுக்கு ஸ்வேதரஸகல ஜநாபிவந்த்யத்வ நிரதிசயஐச்வர்யப்ரதனாய்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல்: நான்முகன் முதலிய தேவர்களுக்கு தங்களைப் பலரும் பணியும்படியான பெருமையையும் செல்வங்களையும் அளித்தவன் என்பது கருத்து. வணங்காமை என்கிற தன்மை சிலரிடத்திலே ஹேயமாகவும் சிலரிடத்திலே சிறப்பாகவும் சொல்லப்படும். வணங்குவதற் கென்றே பிறந்த நம் போல்வார் வணங்காதிருந்தால் அது "வணங்கா மன்னன்" என்றும் "வணங்கலி லரக்கன்" என்றும் சொல்லும்படியாகி ஹேயமாகும்; தேவதைகளாகவுள்ளவர்கள் எம்பெருமானைத் தவிர வேறு யாரையும் வணங்கவேண்டியவர்களல்லாமையாலே பணியாவமரர் என்றது பொருந்தும்.

அணியாராழியுஞ் சங்கமு மேந்துமவர்காண்மின் என்றதன் உட்கருத்தை நம்பிள்ளை கண்டறிந்து வெளியிடுகிறபடி பாரீர்: "ஸர்வாபரணமும் தானேயாகப் போரும்படியான திவ்யாயுதங்களைத் தரித்து நித்யஸூரிகளுக்குக் காட்சி கொடுத்தால் அவர்களும அஸ்தாநே பயசங்கைபண்ணி மங்களாசாஸனம் பண்ணும்படியாயிற்று இருப்பது." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. இங்கே ஆழ்வார் துடிக்கிறதுடிப்பு திருநாட்டிலே நித்ய ஸூரிகளுக்கு முண்டாயிருக்குமென்றபடி.

அஞ்சுவதற்கு நிலமல்லாத திருநாட்டிலே அப்படியானால் இந்நிலத்திற் சொல்லவேணுமோவென்கிறார் பின்னடிகளில். உலகில் என்பதை மூன்றாமடியிலும் அந்வயிக்கலாம், நான்காமடியிலும் அந்வயிக்கலாம். அதாவது, 'உலகில் தணியாவெந்நோய் தவிர்ப்பான்' என்பது ஒரு அந்வயம்; 'உலகில் வருவார்' என்பது மற்றொரு அந்வயம். தாபத்ரயம் முதலான துக்கங்கள் தணியாவெந்நோயெனப்படுகிறது.

திருநீலமணியார் மேனியோடு=அப்பெருமான் அவ்விபூதியைவிட்டு இவ்விபூதியிலே வரவேண்டினால் நீலமணி போலே ச்ரமஹரமாய் ஸுகுமாரமான அவ்வடிவோடே வரவேணுமோ? அப்படி வருகையால் என்மனம் சுழற்சியடைகின்றது என்பதை என்மனஞ் சூழ என்பதனால் காட்டினபடி. ... .... ... 6

3475 வருவார்செல்வார் வண்பரிசாரத்திருந்த * என்
திருவாழ்மார்வர்க்கு என்திறம்சொல்லார்செய்வதென் *
உருவார்சக்கரம் சங்குசுமந்திங்கும்மோடு *
ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனென்றே. 7

வருவார் செல்வார் — அந்தப்பக்கத்தில் நின்றும் வருபவர்களும் இந்தப்பக்கத்தில் நின்றும் போமவர்களுமான மனிசர்கள்

வண்பரிசாரத்து இருந்த — திருவண் பரிசாரத்திலெழுந்தருளியிருக்கிற

என் திரு வாழ் மார்வர்க்கு — என்னுடைய திருமாலுக்கு

உரு ஆர் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடு ஒருபாடு உழல்வான் ஓர் அடியானும் உளன் என்று — வடிவழகார்ந்த திருவாழி திருச்சங்குகளைச் சுமந்துகொண்டு இங்கு உம்மோடு ஒருபக்கத்திலிருந்துகொண்டு திரியுமடியானொருவனிருக்கின்றானென்று

என் திறம் சொல்லார் — என்னைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லுகின்றிலர்;

செய்வது என் — (இதற்கு) நான் செய்யக் கூடியது என்னோ?.

* * *—இங்கே வந்து திருவண்பரிசாரத்திலே யெழுந்தருளியிருக்க, அந்தோ! நான் உதவப்பெற்றிலேனே; இது கிடக்க; இங்ஙனே ஓரடியானுளனென்று அவனுக்கு அறிவிப்பாருமில்லையேயென்று துடிக்கிறார்.

வருவார் செல்வார்=ஆழ்வார் திருப்புளியடியிலே யெழுந்தருளி யிருந்தன்றோ இப்பாசுரமருளிச் செய்கிறார்; திருநகரித் திருவீதியிலே போவாரும் வருவாருமான வழிப்போக்கர்களுண்டே; அவர்கள் ஸம்ஸாரிகளாய்த் தங்கள் காரியங்களுக்காகப் போவதும் வருவதுமா யிருந்தாலும் ஆழ்வாருடைய நினைவு அப்படியன்று; திருவண்பரிசாரம் ஸேவிக்கப் போகிறார்கள், திருவண்பரிசாரம் ஸேவித்து மீளுகிறார்கள் என்றே இவர் நினைத்திருப்பது; இங்கே ஆறாயிரப்படி—"ஸ்வகார்யார்த்தமாகப் போகிறாரும் வருகிறாரும் திருப்பரிசாரத்தேறப்போகிறாராகவும் வருகிறாராகவும் நிச்சயித்து" என்று. இனி ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"ஸ்வகார்யத்தாலே த்வரித்துப் போவாரை தம் தசையையறிவிக்கப் போகிறார்களென்றும், அங்கு நின்றும் வருவாரைத் தம்மையழைக்க வருகிறார்களென்றுமிருப்பர்."

தம்மை யழைக்க வருகிறார்களென்று இவர் நினைத்திருந்தபடி ஒருவரும் தம்மருகே வரக்காணாமையாலே இவர்கள் திருப்பரிசாரத் தெம்பெருமானிடத்திலே நம்மைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை போலும்; அதனால்தான் அப்பெருமான் நியமிக்கவில்லை போலும் என்று அறுதியிட்டு "திருவாழ்மார்பர்க்கு என்திறம் சொல்லார் செய்வதென்?" என்கிறார். என்னவென்று சொல்ல விருப்பமென்னில்; பின்னடிகள் முழுவதும் அந்தச் சொல்லின் அநுவாதம். "பரிவர் ஒருவருமில்லாதிருக்கிற இந்த ஸம்ஸார மண்டலத்திலே சங்குசக்கரங்களைச் சுமந்து கொண்டு உம்மோடே ஒரு பக்கத்திலே கூடவே திரியுமடியானொருவன் திருநகரியிலே திருப்புளியடியிலேயுளன்" என்று சொல்லவேணுமாம்.

ஒருபாடுழல்வானென்கிறாரே; ஒருபக்கத்திற்கு ஆழ்வாரானால் மற்றொரு பக்கத்திற்கு ஆர்? என்று கேள்வி பிறக்குமே: இதற்கு நம்பிள்ளையருளிச் செய்கிறார்—"ஒரு பார்ச்வத்துக்கு இளைய பெருமாளுண்டிறே" என்று. ஓரடியானென்றது—அநந்ய ப்ரயோஜநனான தாஸன் என்றபடி. *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: என்றெண்ணியிருக்கிற எம்பெருமான் பக்கலிலே சென்று, இப்படிப்பட்ட மஹாத்மா துர்லபரல்லர், ஸுலபரேயாயினர்; திருப்புளியடியிலேயுளர் என்று சொல்லவேணுமாம். 7

3476 என்றேயென்னை உன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ் *
நின்றேயாட்செய்ய நீகொண்டருளநினைப்பதுதான் *
குன்றேழ்பாரேழ் சூழ்கடல்ஞாலமுழுவேழும் *
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே. 8

| | | | |
|---|---|---|---|
| எழ் குன்று | குலபர்வதங்களேழையும் | திருமாலே | திருமகள் கொழுநனே !, |
| எழ் பார் | த்வீபங்களேழையும் | என்னை | அடியேனை |
| சூழ் | சூழ்ந்த | உன் எர் ஆர் கோலம் திருந்து அடி கீழ் | தேவரீருடைய அழகு விஞ்சின திருவடிகளின் கீழே |
| கடல் | ஸமுத்ரங்களையும் | | |
| எழ் ஞாலமும் | எழுலகங்களையும் | | |
| முழு | முழுக்க | நின்றே ஆள் செய்ய | நிலை நின்று அடிமை செய்யவேணும்படி |
| நின்றே தாவிய | நின்ற நிலையிலே நின்று ஆக்கிரமித்துக்கொண்ட | | |
| நீள் கழல் | நெடிய திருவடிகளை யுடையையாய் | நீ கொண்டருள நினைப்பது தான் என்றே | தேவரீர் அங்கீகரிக்கத் திருவுள்ளம்பற்றுவது என்றைக்கோ ?. |
| ஆழி | திருவாழியையு முடையையான | | |

* * *—தமக்காகப் பிறர் ஒருவாய்ச்சொல்கூடச் சொல்லுகின்றிலரே யென்று கிலேசப் பட்டார் கீழ்ப்பாட்டில். "பிறர்கதை கிடக்கட்டும்; எம்பெருமான்றன்னையே கேட்போம் என்று துணிந்து 'உன் திருவடிக் கீழே பரிகைக்கு நிலையாளாக என்னைக் கொள்வது என்றைக்கு?' என்று அவனையே கேட்கிறார். இவர் கேட்பதற்கு முன்னமே எம்பெருமான் 'ஆழ்வீர்! உம் அபேக்ஷிதம் செய்கிறோம்' என்று ஆபிமுக்கியம் தோற்ற நிற்க, என்றே? என்கிறார்; அந்த நாளைக் குறிப்பிட்டாலாகாதோ வென்கிறார். எதற்கு நாள் குறிப்பிடவேணுமென்ன, என்னை யென்று தொடங்கி அதைச் சொல்கிறார். என்னை யென்றது—உன்னோடு கூடவே யிருந்து உனக்கு ஸதா மங்களாசாஸனம் பண்ணியல்லது தரித்திருக்கவில்லாத வென்னை யென்றபடி. [உன் ஏரார் கோலத் திருந்தடிக்கீழ்] உன்திருவடிகளின் பரம போக்யதையை நினைத்துக்கொண்டால் அத்திருவடிகளின் நிழலும் ரேகையுமாக விருப்பதன்றி, தனிப்பட்ட வொரு பொருளாக இருக்க என்னாலாகுமோ? என்கிறார். திருவடிகளுக்கு ஏரார் கோலமாவது—* சங்கரதாங்க கல்பகத்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சனங்களையுடைத்தாயிருக்கை. திருந்து என்றது—அடியார்களைத் திருத்திப்பணி கொள்ளவல்லமையைச் சொன்னபடி; அதாவது—ஒரு ப்ரயோஜனத்திற்காக வந்து சேர்ந்தவர்களையுங் கூட தம் போக்யதையிலேயே யீடுபடுத்தி வேறொரு ப்ரயோஜனத்தையும் நினைக்கமாட்டாதபடி செய்விக்கையாம். இப்படிப்பட்ட திருவடிகளின்கீழே, நின்றேயாட்செய்ய நீ கொண்டருள நினைப்பது என்றே?=நானாக அடிமை செய்யப்புகுவது புருஷார்த்தமன்றே; ஆனை கிடக்க, அதன்மேல் நாமாக ஏற நினைக்குமாபோலே யாகுமன்றோ வது; * க்ரியதாமிதி மாம் வத - என்றும் * ஏவ மற்றமரராட் செய்வார் * என்றுஞ் சொல்லுகிறபடியே ஏவிப் பணிகொள்வதன்றோ சீரியது; அங்ஙனே செய்யத் திருவுள்ளம்பற்றி யிருக்கும் நாள் எதுவோவென்று கேட்கிறார். நின்றேயாட் செய்கையாவது—ப்ரயோஜநாந்தரங்களில் நெஞ்சு செல்லாமல் ததேக ப்ரயோஜநத்வபுத்தி நிலைநிற்கப் பெற்றுக் கைங்கரியம் பண்ணுகை.

ஆழ்வார் இங்ஙனே கேட்கவும் எம்பெருமான் மறுமாற்ற மொன்றுஞ் சொல்லாமையினாலே 'ஒரு கைம்முதலு மில்லாதவுமக்கு நானென்ன சொல்லுவது' என்றிருந்தானாகக் கொண்டு, தாவியன்றுலக மெல்லாம் தலைவிளாக் கொண்டாயே, அது யாரிடத்தில் என்ன கைம்முதல்கண்டு செய்தது? என்று கேட்பார் போலப் பின்னடிகளருளிச் செய்கிறார். திருவண்பரிசாரத்திலெழுந்தருளி யிருக்கிற விருப்புக்கே நான் பரியவேண்டி யிருக்க, அதற்குமேலே அதிமாநுஷமான செயலையும் நீ செய்தருளினால் நான் பரியாதிருக்க முடியுமோ வென்னுமபிப்ராயத்தாலே உலகளந்த சரிதையை எடுத்துரைக்

கிரு ரென்னவுமாம். ஸப்தகுல பர்வதமென்ன, ஸப்த த்வீப மென்ன, அவற்றைச் சூழ்ந்த ஸப்தஸமுத்ரமென்ன, இப்படி ஏழுவகைப்பட்ட பூமியை யெல்லாம் நின்ற நிலையிலே நின்றளந்து கொண்டருளும்படி நீண்ட திருவடிகளை யுடையாய்! கையுந் திருவாழியுமான திருமாலே! ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு கல்லுங் கரடு மான பூமியை யளந்துகொண்ட சிரமந்தீர சிசிரோபசாரம் பண்ணப் பெறும் நாள் என்று? என்று கேட்டாராயிற்று. ... ... ... ... 8

3477 திருமால்! நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள் * எம்
பெருமான் தன்மையை யாரறிகிற்பார் பேசியென் *
ஒருமாமுதல்வா ஊழிப்பிரானென்னையாளுடை *
கருமாமேனியனென்பன் என்காதல்கலக்கவே. 9

| | |
|---|---|
| திருமால்! | திருமாலே! |
| நான்முகன் செஞ்சடையான் என்ற இவர்கள் யார் | பிரமனென்றும் ருத்திரனென்றும் சொல்லப்படுகிறவிவர்களில் யார்தான் |
| எம்பெருமான் தன்மையை | எம்பெருமானான வுன்னுடைய ஸௌகுமார்யாதி ஸ்வபாவத்தை |
| அறிகிற்பார் | அறியவல்லார்? |
| பேசி என் | இது சொல்லி என்ன ப்ரயோஜனமுண்டு? |
| ஒரு மாமுதல்வா | விலக்ஷணமான பரமகாரணமானவனே! |
| ஊழி பிரான் | காலம் முதலிய ஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியானவனே! |
| என் காதல் கலக்க | என்னுடைய ப்ரேமமானது நெஞ்சைக்கலக்க |
| என்னை ஆளுடை கரு மா மேனியன் என்பன் | என்னையடிமை கொண்ட கரியகோலத் திருவுருவனே! என்று இவ்வளவேயன்றோ நானும் சொல்ல வல்லேன். |

* * *—ஆழ்வீர்! நமக்குப் பரியப் பிரமன்முதலான தேவர்களுண்டாயிருக்க நீர் இப்படி அஞ்சுவானேன்? என்று எம்பெருமான் கேட்க, அவர்கள் உன்னுடைய ஸௌகுமார்ய மறியப் பிறந்தவர்களோ வென்கிறார். முதலடி "திருமால் நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள்" என்றிருக்கையாலே 'திருமாலென்ன, நான்முகனென்ன, செஞ்சடையானென்ன ஆகிய இவர்கள்' என்று இங்ஙனம் விபரீதமான பொருளே நெஞ்சில்பட்டுவிடும்; இப்படியன்று பொருள். திருமால் என்றது விளி; திருமாலே! என்றபடி. நீயும் பிராட்டியுமான சேர்த்திக்கு மங்களாசாஸனம் பண்ணுவர்களோ அவர்கள்! என்பது உட்கருத்து. நான்முகன் ஸ்ருஷ்டிக்கு உறுப்பான பல முகங்களை யுடையனாய் அதிலே போதுபோக்கித்திரியா நின்றான். செஞ்சடையான் ஸாதகவேஷந் தோற்றச் சடைபுனைந்து தன் அபிமதலாபத்திலே கண்வைத்துக் கிடவாநின்றான்; ஆக இவர்களும் இவர்களது வகுப்பிலே சேர்ந்த மற்றுள்ளவர்களும் எம்பெருமானான வுன்னுடைய ஸௌகுமார்யத்தை யறிய வல்லவர்களோ? இதைப்பற்றிச் சொல்லி என்ன பயன்?

அவர்கள் நம்மை யறியமாட்டார்களாகில் அறிந்த நீர் பேசிக் காணீரென்று எம்பெருமான் ஆழ்வாரை நோக்கிக்கூற, என்னால்தான் பேசலாயிருந்ததோ வென்கிறார் பின்னடிகளில்; நான் பேசக்கூடியதும் 'ஒருமாமுதல்வனே! ஊழிப்பிரானே! என்னை யாளுடைக் கருமா மேனியனே!' என்று இவ்வளவே யன்றோ; உன் ஸௌகுமார்ய மறிந்து பேசவல்ல தன்மை என்திறத்தில் தானுண்டோ? என்கிறார்.

இங்கே ஈடு; [என் காதல் கலக்கவே] என்னுடைய ப்ரேமமானது நான் அஞ்சும்படி கலங்கப்பண்ண, உன்வடிவழகிலும் மேன்மையிலும் கலங்கிச் சொன்ன வத்தனை போக்கி உன் ஸௌகுமார்யத்தை எல்லைகண்டு சொன்னேனல்லேன்; ப்ரேமாந்தனாய்க் கொண்டு சொன்னேனத்தனைபோக்கி நெஞ்சொழிந்து சொன்னேனல்லேன்; ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகள் பரிவும் உனக்கு ஸத்ருசமன்று; ப்ரேமாந்தனான என் பரிவும் உனக்கு ஸத்ருசமன்று என்றதாயிற்று." ... ... 9

3478 கலக்கமில்லா நல்தவமுனிவர்கரைகண்டோர் *
துளக்கமில்லா வானவரெல்லாம்தொழுவார்கள் *
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை *
உலக்கநாம்புகழ்கிற்பது என்செய்வதுரையீரே. 10

கலக்கம் இல்லா நல்தவம் முனிவர் — ஸம்ஸாரக் கலக்கமற்ற நல்ல தபஸ்விகளான ஸனகாதி முனிவர்களென்ன,
கரை கண்டோர் — ஸம்ஸாரத்தைக் கடந்து அக்கரை சென்ற முக்தர்களென்ன ;
துளக்கம் இல்லா வானவர் — ஒருகாலும் ஸ்வரூப விபர்யயமடையாதவர்களான நித்யஸூரிகளென்ன ;
எல்லாம் — ஆகிய இவர்களெல்லாரும்
தொழுவார்கள் — பரிவுபூண்டு மங்களாசாஸனம் பண்ணுமவர்களாயிராநின்றார்கள் ;
மா கடல் தன்னை — பெருங்கடலை
மலக்கம் எய்த கடைந்தானை — கலங்கும்படி கடைந்த பெருமானை
நாம் உலக்க புகழ்கிற்பது — அற்பரான நாம் ஒரு முடிவு கண்டு புகழ்ந்தோமாவது
என் செய்வது — கைகூடுமதோ ?
உரையீர் — சொல்லுங்கோள்.

* * *—ஆழ்வாருடைய அச்சத்தைப் பரிஹரிக்கைக்காக எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி “நமக்கு ஸனகாதிகள் முக்தர்கள் நித்யஸூரிகள் ஆகிய விவர்கள் கிட்டிநின்று பரிகிறார்கள் ; அதுதவிர, நாமும் அரிய செயல்களும் செய்யவல்லோமான பின்பு நீர் நமக்கு அஞ்சவும் வேண்டா காணும்” என்றருளிச் செய்ய, ஆழ்வார் அச்சந்தீர்ந்து அத்தை யநுஸந்தித்து இனியராகிறார். இவ்விஷயம் ஆழ்வார்க்கு முன்பே தெரியாதோ ? என்று சிலர் கேட்கக் கூடுமென்று கொண்டு இங்கே நம்பிள்ளையருளிச் செய்கிறார்—“இவர் தமக்கு இன்னபோது இன்னது பயஹேதுவாம், இன்னபோது இன்னது பரிஹாரமாம் என்று தெரியாதிறே” என்று.

கலக்கமில்லா நல்தவமுனிவர்—மஹாதபஸ்விகளான ஸனகாதிகள். கரைகண்டோர்—ஸம்ஸார நிலத்தைக்கடந்து மோக்ஷ பூமியைக் கண்டவர்களான முக்தர்கள். துளக்க மில்லாவானவர்—ஒருகாலும் ஸம்ஸாரஸ்பர்சமே யில்லாதவர்களான நித்யஸூரிகள் ; ஆகிய இவர்களெல்லாரும் மங்களாசாஸன பரர்களாயிருக்கின்றார்களென்று எம்பெருமானுணர்த்தியதை அநுவாதம் பண்ணினபடி முன்னடிகள். இரண்டாமடியின் முடிவில் தொழுவார்களென்றது—மங்களா சாஸனம் பண்ணுவர்களென்ற பொருளில் பிரயோகிக்கப்பட்டது. இப்படி மங்களா சாஸனபரர் குறையற்றிருக்கும் போது நமக்கென்ன பணியென்று தலைக்கட்டுகிறார் பின்னடிகளால். ... 10

3479 உரையாவெந்நோய்தவிர அருள்நீண்முடியானை *
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன் *
உரையேய்சொல்தொடை ஓராயிரத்துளிப்பத்தும் *
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே. 11

உரையா வெம் நோய் தவிர — வாய்கொண்டு சொல்லவொண்ணாதபடி வெவ்விய கலக்கமாகிற நோயானது தீரும்படி
அருள் — க்ருபை செய்தருளின
நீள் முடியானை — ஸர்வாதிக சேஷியானவனைக் குறித்து,
வரை ஆர் மாடம் மன்னு குருகூர் சடகோபன் — மலைபோன்ற மாடங்கள் பொருந்திய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய
உரை ஏய் சொல் தொடை ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் — ஸ்ரீஸூக்தியாயமைந்த ஆயிரம் பாசுரங்களினுள்ளும் இப்பதிகத்தை
நிரையே வல்லார் — அடைவுபட ஓதவல்லவர்கள்
நீடு உலகத்து பிறவார் — கடல்சூழ்ந்த மண்ணுலகில் இனியொருநாளும் பிறக்கமாட்டார்கள்.

* * *—இத்திருவாய்மொழி கற்பார் எம்பெருமானுடைய தனிமைகண்டு அஞ்ச வேண்டும் நிலமான ஸம்ஸாரத்திலே பிறவார் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதானனை எம்பெருமானுக்கு என் வருகிறதோவென்று அஞ்சினவிது விலக்ஷணமான நோயாகையாலே உரையா வெந்நோய் என்கிறார். வாய் கொண்டு உரைக்கமுடியாததான வெவ்விய நோய் என்றபடி. இது தவிரும்படியாக அருள்செய்தானாயிற்று உபய விபூதிநாதனான ஸர்வேச்வரன்.

இவ்விடத்தில் நீண் முடியானை யென்றருளிச் செய்ததற்கு அம்மங்கியம்மாளென்னுமாசிரியர் ஓர் இன்சுவைப்பொருள் கூறுவராம்; "ஆழ்வாருடைய அச்சம் தீரும்படி உம்முடைய வபேக்ஷிதம் செய்கிறோமென்று தலைதுலுக்கினான் போலும்" என்று. ப்ரக்ருதத்தில் ஆழ்வார்க்கு அபேக்ஷிதம் செய்கையாவது * ஆளுமாளார் ஆழியுஞ்சங்கும் சுமப்பார்தாம் * என்ற இழவுதீர ஆழியும் சங்கும் சுமக்கவல்ல ஆள்களை ஆளுகையாம். ... ... ... ... ... 11

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்து மூன்றாந்திருவாய்மொழியுரை முற்றுப் பெற்றது.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—நான்காந்திருவாய்மொழி—வார்கடாவருவி

அவதாரிகை ;—எம்பெருமானே ஸம்ஸார மண்டலத்திலேவந்து அவதரித்துத் தனியே உலாவாநின்றான்; ஸம்ஸாரிகள் தங்கள் தங்கள் அபேக்ஷிதம் பெற்றுப் போகைக்காக இவனைக்கிட்டி அபேக்ஷிதம் பெற்று அகன்றுபோமவர்களேயொழிய இவனுக்கு ரக்ஷைதேடிப் பரிகிறவர்களாக இல்லையே!, இவனுக்கு என் வருகிறதோ! என்று அஞ்சின ஆழ்வாருடைய அச்சம் கீழ்த்திருவாய்மொழியில் ஒருவாறு தீர்ந்திருக்கச் செய்தேயும் இன்னமும் இவர்க்கு நம்பக்கல் பரிவின் கனத்தாலே அச்சம் மறுவலிடக்கூடுமென்றெண்ணின எம்பெருமான் 'ஆழ்வீர்! பிரதிகூலர்க்குக் கணிசிக்க வொண்ணாதபடி அரணுடைத்தான திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றிலே மஹா சக்திமான்களான மூவாயிரம் வேதியர்கள் பரிந்து நோக்க அவர்களுடன் நாம் சேர்ந்து வாழ்கிறபடி பாரீர்; நமக்கு அஸாதாரணமான வீர்ய பராக்ரமாதி குணஸம்ருத்தியையும் பாரீர்' என்று அவற்றைக் காட்டிக்கொடுக்க, அதனால் அச்சம் நன்றாகக் கெட்டு அவனது வடிவழகிலே நெஞ்சை வைத்து அநுபவித்து உகந்தபடியைத் தெரிவிப்பதாம் இத்திருவாய்மொழி.

ஸ்ரீ விபீஷணாழ்வான் பெருமாள் திருவடிகளிலே வந்து சரணம்புக, இவனைச் சேர்த்துக்கொண்டால் பெருமாளுக்கு என்ன அவத்யம் வருமோவென்று கலங்கின ஸுக்ரீவ மஹாராஜாதிகளுக்கு அச்சந்தீருமாறு பெருமாள் *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர* என்று தம்முடைய மிடுக்கைக் காட்டினது போலாமிது. அப்படி மிடுக்கைக் காட்டக்கண்டு அச்சந்தீர்ந்து *கிமத்ர சித்ரம் தர்மஜ்ஞ லோகநாத ஸுகாவஹ* என்று மஹாராஜர் இனியரானாப்போலே ஆழ்வாருமினியராகிறாரிங்கு. ... ... ... *

3480 வார்கடாவருவியானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி *
ஊர்கோள்திண்பாகனுயிர்செகுத்து அரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மேல் *
போர்கடாவரசர்புறக்கிட மாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த *
சீர்கொள்சிற்றாயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்கள்செல்சார்வே. 1

| | |
|---|---|
| வார் கடா அருவி | பாய்கின்ற மதநீராகிற அருவிப் பெருக்கையுடைய |
| யானை மா மலையின் | குவலயாபீட யானையாகிற பெரிய மலையினுடைய |
| மருப்பு | இரண்டு தந்தங்களாகிற |
| இணை குவடு | இரண்டு சிகரங்களை |
| இறுத்து | முறித்து |
| உருட்டி | (யானையை) முடித்தொழித்து |
| ஊர் கொள் திண் பாகன் உயிர் செகுத்து | யானையை நடத்த வல்ல சதிருடையனான பாகனது உயிரையும் முடித்து |
| அரங்கில் | அரண்மனை வாசலில் |
| மல்லரை கொன்று | (சாணூர முஷ்டிக) மல்லர்களையும் தொலைத்திட்டு |
| சூழ் பரண் மேல் போர் கடாவு அரசர் புறக்கிட | சுற்றுமுண்டான மஞ்சத்தின் மேலே நின்ற ரண வீரர்களான அரசர்கள் முதுகு காட்டி ஓடும்படியாகப் பண்ணி |
| மாடம் மீமிசை | மாடத்தின் மேல்நிலத்திலே யிருந்த |
| கஞ்சனை | கம்ஸனை |
| தகர்த்த | தொலைத்திட்ட |
| சீர் கொள் சிறு ஆயன் | வீர ஸ்ரீயையுடைய கோபால கிருஷ்ணன் எழுந்தருளி யிருக்குமிடமான |
| திருச்செங்குன்றூரில் திருச் சிற்றாறு | திருச்செங்குன்றூர் திருச்சிற்றாறென்கிற திருப்பதியானது |
| எங்கள் செல் சார்வு | எங்களுக்குச் சென்று சேரும் புகலிடமாகும். |

* * *—குவலயாபீட வதம் மல்ல நிரஸநம் முதலான வீரச்செயல்களைச் செய்த சீர்கொள்சிற்றாய னெழுந்தருளியிருக்குமிடமான திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றுப் பதி எமக்கு நிர்ப்பயமான புகலிடமென்கிறார். வில்விழவென்கிற வியாஜத்தினால் அக்ரூரனையிட்டுக் கம்ஸனால் திருவாய்ப்பாடியினின்று மதுரைக்கு வரவழைக்கப்பட்ட பலராமஸமேதனான கண்ணபிரான் குவலயாபீட ஸம்ஹாரம் தொடங்கிக் கம்ஸவத மளவாகச் செய்த பராக்ரமச்செயல் மூன்றடிகளால் கம்பீரமாகப் பேசப்படுகிறது. எம்பெருமான் ஆழ்வார்க்குக் காட்டின வீரம் பாசுரத்திலும் ஏறிப்பாய்ந்துவிட்டது போலும். குவலயாபீடயானை கண்ணனை முடிப்பதற்காக அரண்மனைவாசலில் மத மூட்டி நிறுத்தப்பட்டிருந்தது; அதனை அநாயாஸேந முடித்துப் பாகனையும் உயிர் மாய்த்தான் கண்ணபிரான். அந்த யானையை ஒரு மலையாக ரூபிக்கிறாராழ்வார்; மலைக்கு அருவிப் பெருக்கு இருக்குமே; அப்படியே யானைக்கு மதநீர்ப்பெருக்கு உள்ளதென்கிறார்; மலைக்குக் குவடுகளிருப்பதுபோல யானைக்கு மருப்பிணையுள்ள தென்கிறார்.

உருட்டியென்று அவ்யானையை முடித்தமை சொன்ன பின்பும் “ஊர் கொள் திண்பாகன்” என்று அந்த யானையைப் பாகன் நடத்துகிறானாகச் சொன்னவது கூடுமோ வென்ன, இதற்கு நம்பிள்ளையருளிச் செய்கிறார் “உயிருள்ள பதார்த்தத்தை நடத்துமா போலே நடத்தவல்லனாயிற்று சிக்ஷாபலத்தாலே” என்று. அந்தப் பாகனையும் முடித்து, சாணூரமுஷ்டிகரென்னும் மல்லர்களையுங் கொன்று, அதன்பிறகு, மஞ்சத்தின்மீது கம்ஸனுக்குக் காவலாக இருந்த அரசர்களையும் முதுகுகாட்டி யோடப்புடைத்து, உயர்ந்த மாடத்திலே யிருந்த கம்ஸனையும் முடிசிதற மயிரைப்பிடித்துக் கீழேவிழ விட்டு மேலேபாய்ந்து அவனை முடித்திட்ட வீர ஸ்ரீயையுடைய கோபாலக்ருஷ்ணன் எழுந்தருளி யிருக்குமிடமான திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு நாங்கள் அச்சங் கெட்டு ஆச்ரயிக்குமிடம். ... ... ... ... ... 1

3481 எங்கள்செல்சார்வுயாமுடையமுதம் இமையவரப்பனென்னப்பன் *
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும் பொருந்துமூவுருவனெம்மருவன் *
சேங்கயலுகளும் தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றா
றங்கமர்கின்ற * ஆதியானல்லால் யாவர்மற்றென்னமர்துணையே. 2

| | |
|---|---|
| எங்கள் செல் சார்வு | யாம் சென்று சேரும் புகலிடமாயும் |
| யாமுடை அமுதம் | நமக்குப் பரமபோக்யனும் |
| இமையவர் அப்பன் | தேவாதி தேவனும் |
| என் அப்பன் | எனக்கு ஸ்வாமியும் |
| பொங்கு மூ உலகும் | பரந்த மூவுலகத்தையும் |
| படைத்து அளித்து அழிக்கும் | ஸ்ருஷ்டித்து ரக்ஷித்து ஸம்ஹரிப்பானும் |
| பொருந்தும் மூ உருவன் | மேலே சொன்ன முச்செயல்களுக்கும் பொருத்தமாக மூர்த்தித்ரயஸ்வரூபியாயும் |
| எம் அருவன் | எமக்கு உயிரானவனும் |
| செம் கயல் உகளும்தேம் பணை புடைசூழ் | செவ்விய மீன்கள் துள்ளும்படி தேன்மிக்க நீர் நிலங்கள் சூழ்ந்த |
| திருச் செங்குன்றூர் திருச்சிற்றாறு அங்கு | திருச்சிற்றாறென்னும்பதியிலே |
| அமர்கின்ற | அமர்ந்திருப்பவனாயுமிருக்கின்ற |
| ஆதியான் அல்லால் | ஆதிப்பிரானல்லது |
| என் அமர் துணை மற்று யாவர் | எனக்குற்ற துணை வேறு யார்? (யாருமிலர்.) |

* * *—வெறும் வீர ஸ்ரீயைக் காட்டினபடியேயன்று, தன்னுடைய பரமபோக்யதையையுங் காட்டிக் கொடுத்தானென்கிறார் யாமுடையமுதம் என்று. எங்கள் என்றும் யாமுடை யென்றும் பன்மையாகச் சொல்லுகிறது—ஆழ்வார் ஸம்பந்தம்பெற்ற நம்போல்வாரையுங் கூட்டி யென்க. "*கேசவன் தமர்க்குப் பின்பு தனியரல்லரே" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. "இமையவரப்பனென்று சொல்லி உடனே என்னப்பனென்கையாலே நித்ய ஸூரிகளை அடிமை கொண்டாப்போலே தம்மையுமடிமை கொண்டவன் என்பது காட்டப்பட்டதாம். "குறைவற்றார்க்கும் ஸத்தா ஹேதுவாய் குறைவுக்கெல்லையான வெனக்கும் ஸத்தா ஹேதுவானவன்" என்பது ஈடு.

நான்முகனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டியை நடத்தியும், தானான தன்மையில் ரக்ஷணத்தை நடத்தியும், ருத்ரனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸம்ஹாரத்தை நடத்தியும் இப்படி மூவுருவாயிருக்குமவன் என்னுடைய பயத்தைப்போக்கி எனக்கும் தாரகனாயிராநின்றானென்கிறது இரண்டாமடி. இப்படிப்பட்ட வெம்பெருமான் நீர்வளம் பொருந்திய திருச்சிற்றாற்றுப்பதியிலே, விபவாவதாரங்கள் போலே தீர்த்தம் ப்ரஸாதித்துத் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளாமே நித்யஸந்நிதி பண்ணியிராநின்றான், அவனை யொழிய எனக்கு உற்ற துணையில்லை; அவனே நமக்கு நற்றுணைவன் என்றாராயிற்று. ... ... ... ... ... 2

3482 என்னமர்பெருமானிமையவர்பெருமான் இருநிலமிடந்தவெம்பெருமான் *
முன்னைவல்வினைகள்முழுதுடன்மாள என்னையாள்கின்றவெம்பெருமான் *
தென்திசைக்கணிகோள் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றவெம்பெருமான் * அடியல்லால்சரண் நினைப்பிலும்பிறிதில்லையெனக்கே. 3

| | |
|---|---|
| இமையவர் பெருமான் என் அமர் பெருமான் | நித்ய ஸூரிநாதனைப்போலே எனக்குற்ற நாதனை |
| இரு நிலம் இடந்த எம் பெருமான் | மாநிலத்தைப் ப்ரளயாபத்திலிருந்து இடந்தெடுத்த எமது நாதனை |
| முன்னை வல் வினைகள் முழுது உடன் மாள | அநாதியான வலிய தீவினைகளெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் மாளும்படியாக |
| என்னை ஆள் கின்ற எம் பெருமான் | என்னை அடிமை கொண்டருளுகிற பெருமையை யுடையனை |
| தென் திசைக்கு அணி கொள் | தென் திசைக்கு அலங்காரமாகக் கொள்ளப்படுவதான |
| திருச் செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங் கரை மீபால் நின்ற | திருச்சிற்றாறென்னும் திருப்பதியின் மேலைப்பக்கத்திலெழுந்தருளியிருப்பவனை |
| எம்பெருமான் அடி அல்லால் | அஸ்மத்ஸ்வாமியினுடைய திருவடிகளைத் தவிர்த்து |
| எனக்கு நினைப்பிலும் பிறிது சரண் இல்லை. | என்னுடைய மனோரத தசையிலும் வேறொரு புகல் இல்லை. |

* * *—" என்னமர் பெருமானிமையவர் பெருமா "னென்ற விதனை "இமையவர் பெருமான் என்னமர் பெருமான் " என மாற்றியன்வயிப்பது. *அயர்வறு மமரர்களதி பதியாயிருக்குமவன் எனக்கு அமர்ந்த ஸ்வாமியாயுள்ளான். அந்த பரத்வமெங்கே, இந்த ஸௌலப்ய மெங்கே! என்று வியப்புத் தோற்ற வருளிச் செய்கிறபடி. இரு நிலமிடந்த எம்பெருமான்=பிரளயாபத்தைப் போக்கின தன் வல்லமையைக் காட்டி என்னை ஆட்படுத்திக் கொண்டவ னென்றபடி.

முன்னைவல்வினைகள் முழுதுடன்மாள என்னையாள்கின்ற வெம்பெருமான்—கீழே தமக்குப் பிறந்த அச்சத்தைப் போக்கினபடியைச் சொல்லுவது இங்கு விவக்ஷிதம்.

நான்காமடியில் "சரண் நினைப்பிலும்" சரணம் நினைப்பிலும்" என்பன பாட பேதங்கள். 'சரணம்' என்று பாடமாம்போது "அடியல்லால்" என்பது "அடிய லால்" என்று தொகுத்தலாகக் கொள்க. ... .... ... 3

3483 பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகும்நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த *
குறியமாணெம்மான்குரைகடல்கடைந்த கோலமாணிக்கமேன்னம்மான் *
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன் றூர்த்திருச்சிற்று
றறிய * மெய்ம்மையேநின்றவெம்பெருமான் அடியிணையல்லதோரரணே. 4

| | |
|---|---|
| பெரிய மூ உலகும் நிறைய | இடமுடைத்தான மூவுலகும் நிறையும்படியாக |
| பேர் உருவம் ஆய் நிமிர்ந்த | பெரிய வடிவை யுடையனாய்க் கொண்டு வளர்ந்த |
| குறிய மாண் எம் மான் | வாமனப் பிரமசாரியான என் ஸ்வாமியாய் |
| குரை கடல் கடைந்த | கோஷிக்கின்ற கடலைக் கடைந் தவனாய் |
| கோலம் மாணிக்கம் என் அம் மான் | அழகிய ரத்னம் போன்ற திரு வடிவை எனக்குக் காட்டிதந் தருளின உபகாரகனாய், |
| செறி குலை வாழை கமுகு தெங்கு அணி சூழ் | செறிந்த குலைகளையுடைய வாழை கமுகு தெங்குகளின் திரள்கள் சூழ்ந்த |
| திருச் செங்குன் றூர் திருச்சிற் றாறு | திருச்சிற்றாற்றுத் திருப்பதியி லுள்ளவர்கள் |
| அறிய | தன்னை உள்ளபடியறியும்படி |
| மெய்ம்மையே நின்ற | உண்மைப் பெருமையோடே நின்றருளுமவனை |
| எம் பெருமான் | அஸ்மத்ஸ்வாமியினுடைய |
| அடி இணை அல்லது | திருவடியிணைகளல்லது |
| எனக்கு ஓர் அரண் பிறிது இல்லை | எனக்கு வேறொரு ரக்ஷகமு மில்லை. |

* * *—மஹாபலியின் வலியை யடக்கியும் கடல் கடைதலாகிற அரிய பெரிய காரியத்தைச் செய்தும் அடியார்களது துன்பங்களைத் தொலைத்துத் திருச்சிற்றாற்றுப் பதியிலே நின்றருளினவனது திருவடிகளல்லது வேறெனக்கு அரணில்லை யென்கிறார்.

பெரிய மூவுலகும் நிறையப் பேருருவமாய் நிமிர்ந்த=மூவுலகின் பெருமைக்குத் தக்க படி தன்னுருவத்திலும் பெருமை கொண்டானென்க. திருவுருவம் பெருமை கொண் டது மூவுலகங்களையும் ஆக்ரமிக்கைக்காகவேயன்று ; அகடிதகடநாஸமர்த்தனான அவன் சிறிய திருவுருவத்தாலும் மூவுலகையும் ஆக்ரமிக்க முடியாமையில்லையே ; பின்னை எதற்காகப் பேருருவமான தென்னில் ; தொடங்கின கார்யம் வென்ற ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே வளர்ந்தபடி" என்பர் நம்பிள்ளை. உலகில் ஒருவனுக்கு அபீஷ்டம் நிறைவேறப் பெற்றால் உடல் பூரிக்குமன்றோ ; அப்படி இங்கும் தன் பக்கலிலே பல்லைக் காட்டிப் பரிதாபம் தோன்ற நின்ற இந்திரனுக்குக் காரியம் செய்யப் புகுந்து அது நிறைவேறப் பெறுகையாலே உடல் பூரித்ததாயிற்று.

குறியமாண் எம்மான்=*கொண்டகோலக் குறளுருவாய்* என்று ஆண்டாள் ஈடு படும்படி அழகே வடிவெடுத்ததாகக் கொண்ட வாமனவேஷத்தையும் யாசகனாய் நின்ற நிலையையுங் காட்டித் தம்மை யடிமைப்படுத்திக் கொண்டவ னென்னுங்கருத்து இதில் உய்த்துணரத்தக்கது.

குரைகடல் கடைந்த கோலமாணிக்கம்—ஐயோ! இப்படி பரம ஸௌகுமாரமான திருமேனியைக் கொண்டா கடலைக் கடைவது; தேவருமசுரருமான முரட்டாண்கள் பலகோடி நூறாயிரவர் இல்லையோ? அவர்கள் *நெருங்க நீ கடைந்தபோது நின்ற சூரரென் செய்தார்?* (772) என்னும்படியாகச் சோர்ந்து துவண்டுநின்றால் நீ கடையவேணுமென்று என்ன தலைவிதியோ? கோலமாணிக்க மென்னும்படியான திருமேனியின் ஸௌகுமார்யத்தைச் சிறிதும் பாராதே இப்படியும் ஒரு அதிப்ரவ்ருத்தியுண்டோ? என்று நெஞ்சிளகிச் சொல்லுகிறபடி.

இப்படிப்பட்ட வெம்பெருமான் பரம போக்யமான திருச்சிற்றாற்றிலே யுள்ளாரடங்கலும் இவன் ஸர்வேச்வரனென்றறியும்படியாக, தன்னுடைய பெருமையை மறைத்துக் கொள்ளாதே நிஜஸ்வரூபத்தோடே நின்றருளினான்; அவனது திருவடியிணையல்லது எனக்கு வேறொரு ரக்ஷகமில்லை. ... ... ... 4

3484 அல்லதோரரணுமவனில்வேறில்லை அதுபொருளாகிலும் * அவனை
யல்லதென்னாவியமர்ந்தணைகில்லாது ஆதலாலவனுறைகின்ற *
நல்லநான்மறையோர்வேள்வியுள்மடுத்த நறும்புகைவிசும்பொளிமறைக்கும் *
நல்லநீண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்குநல்லரணே. 5

| | | | |
|---|---|---|---|
| அல்லது ஓர் அரணும் அவனில் வேறு இல்லை | திருச்சிற்றாறு தவிர்ந்த மற்ற கோவில்களில் ரக்ஷகனாயிருக்கின்றவனும் அவனிற் காட்டில் வேறுபட்டவனல்லன்; | வேள்வியுள் மடுத்த | யாகத்திலிட்ட ஹவிஸ்ஸுக்களிலுண்டான |
| அது பொருள் ஆகிலும் | என்கிறவதுவே உண்மைப் பொருளானாலும் | நறு புகை | பரிமளம் மிக்க புகையானது |
| என் ஆவி | என் உயிரானது | விசும்பு ஒளி மறைக்கும் | ஆகாசத்திலுள்ள (ஸூரியன் முதலிய) சுடர்ப் பொருள்களை மறைக்கும்படியா யுள்ளதும் |
| அவனை அல்லது அமர்ந்து அணைகில்லாது | அத்திருச்சிற்றாற்றெம் பெருமானை யொழிய வேறொருவனைப் பொருந்தி விரும்பமாட்டாது; | நல்ல நீள் மாடம் | விலக்ஷணமாகவோங்கின மாடங்களையுடையதுமான |
| ஆதலால் | ஆகையினாலே | திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு | திருச்சிற்றாற்றுப் பதியானது |
| அவன் உறைகின்ற | அப்பெருமான் நித்யவாஸம் பண்ணுமிடமானதும், | எனக்கு நல் அரண் | எனக்கு நிர்ப்பயமான புகலிடம் |
| நல்ல நான்மறையோர் | வைதிகோத்தமர்கள் | | |

* * *—மற்றும்பல திருப்பதிகளு முண்டாயிருக்க, ஆழ்வீர்! நீர் சிற்றாற்றிலே இவ்வளவு நிர்ப்பந்தம் கொள்வதேன்? என்று சிலர் கேட்பதாகக் கொண்டு அதற்கு மறுமொழி கூறுகின்றாரிதில். அல்லதோரரணும் அவனில் வேறில்லை அது பொருள்=திருச்சிற்றாறு தவிர்ந்த மற்ற புகலிடமான அர்ச்சாஸ்தலங்களும் திருச்சிற்றாற்றுப் பெருமானுகந்தவையே; இது பரமார்த்தம். இதில் எனக்கு இறையேனும் ஸந்தேஹமில்லை; எல்லாத் திருப்பதிகளும் ஒன்றுதான்; அத்திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களெல்லாரும் ஒருவரேதான் என்கிற தத்துவம் நானறியாததன்று என்றபடி.

அப்படியாகில் திருச்சிற்றாற்றுப் பெருமானையல்லது அறியேனென்று இந்த நிர்ப்பந்தம் எதற்காக? என்கிறீர்களோ? ஆகிலும் அவனை யல்லது என்னாவி அமர்ந்தணைகில்லாது—வஸ்து ஸ்திதி இங்ஙனே யிருந்ததேயாகிலும் திருச்சிற்றாற்றுப் பெருமானையல்லது மற்றொரு பெருமானை என்மனம் சேர்ந்தணையாது. சிறிய திருவடி *ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டிதஃ, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி* என்று பரம பதநாதனையும் வேண்டேனென்றான்; பரமபதநாதன் ஈச்வரனல்லனோ? ப்ராப்த சேஷியல்லனோ? எதற்காக பாவோ நாந்யத்ர கச்சதி யென்றான்; அவ

னவன் மனமேயன்றே ப்ரமாணம். அப்படியே என் விஷயத்திலும் கொள்ளுங்கோ ளென்கிறார். அமர்ந்து அணைகை—உள்வெதுப்பற்றுப் பொருந்துகை. ஆதலால்—என் மனமிருக்கும்படி இதுவாதலாலென்றபடி. இதற்கு, 'திருச்சிற்றாறெனக்கு நல்லரணே' என்றவிடத்து அந்வயம். "திருச்சிற்றாறே எனக்கு நல்லரண்" என்று ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. அத்தலத்தின் வைதிக ஸம்ருத்தி சொல்லுகிறது மூன்றாமடி. நல்ல நான் மறையோ ரென்றது—காம்யகருமங்களைச் செய்பவரல்லர்; பகவத் கைங்கர்ய மென்னும் ப்ரதிபத்தியோடே செய்பவர்களென்றபடி. காம்யமாகச் செய்தாலும் குற்ற மில்லை யென்கிற திருவுள்ளமும் நம்பிள்ளைக்கு உள்ளது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"அநந்யப்ரயோஜநராகில் இவர்களநுஷ்டானத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில்; ஸ்வயம் ப்ரயோஜநமாதல். பகவத் ப்ரதிபக்ஷங்களையழியச் செய்யும் அபிசாரம் பல மாதல்; எம்பெருமானாரைப் போலேயாயிற்று அவ்வூரில் ப்ராஹ்மணரும்" என்று.

இங்கு அறியவேண்டிய இதிஹாஸமாவது—கொடுங்கோன்மை கொண்ட சோழ னுக்காக மேல்நாட்டுக் கெழுந்தருளின எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் பதி னொரு ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்தும் அவனுடைய வாழ்நாள் மாளக் காணாமை யாலே அவன் முடியும்படி, திருவேங்கட முடையானை அதிதேவதையாகப் பண்ணிக் கொண்டு அபிசாரகருமமொன்று அநுஷ்டித்து மனோரதம் தலைக்கட்டப் பெற்றா ரென்பது. ... ... ... ... ... ... 5

3485 எனக்குநல்லரணையெனதாருயிரை இமையவர்தந்தைதாய்தன்னை *
தனக்கும்தன் தன்மையறிவரியானைத் தடங்கடல்பள்ளியம்மானை *
மனக்கோள்சீர்மூவாயிரவர் வண்சிவனுமயனுந்தானுமொப்பார்வாழ் *
கனக்கோள்திண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள்கண்டேனே. 6

| | | | |
|---|---|---|---|
| எனக்கு நல் அரணை | எனக்கு நிர்ப்பயமான புகலிடமாயும் | மனம் கொள்சீர் | மனத்திலே கொண்ட பகவத் குணங்களை யுடையவர்களான |
| எனது ஆர் உயிரை | என்னுடைய ஸத்தையை நிர்வஹித்துப் போருமவனையும் | மூவாயிரவர் | மூவாயிர மந்தணர்கள் |
| இமையவர் தந்தைதாய்தன்னை | நித்ய ஸூரிகளுக்கும் ஸகலவித பந்துவானவனையும் | வண்சிவனும் அயனும் தானும் ஒப்பார் | சிவனையும் பிரமனையும் திருமாலையு மொத்தவர்களாய்க் கொண்டு |
| தனக்கும் தன் தன்மை அறிவு அரியானை | ஸர்வஜ்ஞனை தனக்கும் தனது தன்மைஅறியக்கூடாமலிருப்பவனையும் | வாழ் | வாழுமிடமாய் |
| தட கடல் பள்ளி அம்மானை | விசாலமான கடலிலே பள்ளி கொள்பவனையுமுள்ள ஸர்வேச்வரனை, | கனம் கொள் திண்மாடம் | செறிந்து திண்ணிதான மாடங்களையுடைத்தான |
| | | திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் | திருச்சிற்றாற்றுப்பதியிலே |
| | | கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன். |

* * *—பரிவர்களின் மிகுதியைக் காட்டும் பாசுரமிது. இப்பாட்டுக்கு மூன்றா மடி உயிரானது; *மனக்கொள்சீர் மூவாயிரவர் வண் சிவனுமயனுந்தானு மொப்பார் வாழ்* என்பது. எம்பெருமானுடைய திருக்கலியாண குணங்களை மனத்திலே கொண்டு 'இக்குணங்களை யுடையானுக்கு என்வருகிறதோ' என்று அஸ்தாநே பயசங்கை பண்ணி வர்த்திப்பார் மூவாயிரவருளராம், அதைக்காட்டி எம்பெருமான் ஆழ்வாரைத் தேற்றுவித்தபடியாலே அதைப் பாசுரத்திலே கூட்டி அநுஸந்தித்தாராயிற்று. அவர் களை வண்சிவனு மயனுந்தானு மொப்பார் என்றது—ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னத்தில் *த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதி ப்ரணாச ஸம்ஸார விமோசநாதய: பவந்தி லீலா:* என்றருளிச் செய்தபடி ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிகளை இவர்களே நிர்வஹிக்க வல்லரா யிருக் கையைச் சொன்னபடியாம். இங்கே நம்பிள்ளையீடு;—"ஸ்ரீபரத்வாஜமஹாமுனியோ டொக்கு மவர்கள்; தன்னைப் பிரிந்தவன்றுமுதல் ராவணவதம்பண்ணி மீளுமளவுஞ்

செல்ல 'இவர்களுக்கு என் வருகிறதோ' என்று இத்தையே நினைத்திருந்தவனிறே ஸ்ரீ பரத்வாஜபகவான்" என்று. ... ... ... ... 6

3486 திருச்சேங்குன்றூரில்திருச்சிற்றாறதனுள்கண்ட அத்திருவடியென்றும் *
திருச்செய்யகமலக்கண்ணும்செவ்வாயும் செவ்வடியும்செய்யகையும் *
திருச்செய்யகமலவுந்தியும்செய்யகமலைமார்பும் செய்யவுடையும் *
திருச்செய்யமுடியுமாரமும்படையும் திகழவென்சிந்தையுளானே. 7

| | | | |
|---|---|---|---|
| திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் கண்ட அத் திருவடி | திருச்சிற்றாற்றுப் பதியிலே நான் காணப்பெற்ற அந்தப் பெருமானவன், | கமலை செய்ய மார்பும் | பெரிய பிராட்டியாரையுடைத்தாய்ச் சிவந்ததான திருமார்வும் |
| செய்யகமலம் திருகண்ணும் | செந்தாமரைப் போன்ற திருக்கண்களும் | செய்ய உடையும் | திருப்பீதகவாடையும் |
| செம்வாயும் | சிவந்த திருப்பவளமும் | செய்ய திருமுடியும் | சிவந்த திருவபிஷேகமும் |
| செம் அடியும் | சிவந்த திருவடிகளும் | ஆரமும் | சோலமாமணியாரங்களும் |
| செய்ய கையும் | சிவந்த திருக்கைகளும் | படையும் | திவ்யாயுதங்களும் |
| செய்ய கமலம் திரு உந்தியும் | சிவந்த கமலத்தை யுடைத்தான திருநாபியும் | திகழ | விளங்க |
| | | என்றும் என் சிந்தை உளான் | எந்நாளும் என்னெஞ்சினுள்ளே யுறைகின்றான். |

* * *—திருச்சிற்றாற்றெம்பெருமானுடைய வடிவழகை வாயாரப் பேசுகிறுரிதில். அழகுபொருந்திச் சிவந்தவையாய், விகாஸம் செவ்வி முதலானவற்றால் தாமரையையொத்திருப்பவையான திருக்கண்களும், அத்திருக்கண்ணோக்காலே பிறந்த உறவை ஸ்தாபித்துக்கொள்ளும் புன்முறுவல் பொலிந்த திருப்பவளமும், அந்தப் புன்முறுவலுக்குத் தோற்றவர்கள் விழுந்து வணங்கத்தக்க திருவடிகளும், திருவடிகளில் விழுந்தவர்களை யெடுத்தணைக்கும் திருக்கைகளும், அப்படி அணைக்கப்பெற்றவர்களுக்கு நித்யமும் அநுபவிக்கத் தக்கதாய் அழகுக்கெல்லையாய் ஸர்வோத்பத்திஸ்தானமென்று தோற்றும்படியிருக்கிற திருநாபியும், பகவத்ஸம்பந்தமில்லாதவர்களுக்கும் பற்றுசான பிராட்டிக்கு இருப்பிடமாய்க் கொண்டு சிவந்திருக்கின்ற திருமார்வும், திருமேனிக்குப் பரபாகமான திருப்பீதாம்பரமும், அச்சம் தீரும்படி ரக்ஷகத்வ ஸூசகமாயிருந்துள்ள திருவபிஷேகமும் திவ்யாயுதங்களும் விளங்க என்றும் என் சிந்தையிலே வர்த்திக்கையாலே அச்சம் தலைகாட்ட வழியில்லை யென்றாராயிற்று. ... ... 7

3487 திகழவென்சிந்தையுளிருந்தானைச் செழுநிலத்தேவர்நான்மறையோர் *
திசைகைகூப்பியேத்தும் திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாற்றங்கரையானை *
புகர்கோள்வானவர்கள்புகலிடந்தன்னை அசுரர்வன்கையர்வெங்கூற்றை *
புகழுமாறறியேன்பொருந்துமூவுலகும் படைப்பொடுகெடுப்புக்காப்பவனே. 8

| | | | |
|---|---|---|---|
| என் சிந்தையுள் திகழ இருந்தானை | என்னெஞ்சினுள்ளே விளங்கிக் கொண்டிருப்பவனும் | புகர்கொள் வானவர்கள் புகல் இடம் தன்னை | சிறந்த தேவர்களுக்கும் புகலிடமாயிருப்பவனும் |
| நால்மறையோர் செழு நிலம் தேவர் | நான்கு வேதங்களையு மோதின விலக்ஷண ப்ராஹ்மணர்கள் | வன்கையர் அசுரர் வெம் கூற்றை | மிடுக்கரான அசுரர்களுக்குவெவ்விய யமன் போன்றவனும் |
| திசை கைகூப்பி ஏத்தும் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங் கரையானை | திசைகள்தோறும் நின்று கை கூப்பித் துதிக்கும்படியான திருச்சிற்றாற்றுப் பதியிலுள்ளவனும் | பொருந்து மூ உலகும்படைப்பொடுகெடுப்பு காப்பு அவன் | தன்னோடு பொருந்திய மூவுலகத்தினுடையவும் ஸ்ருஷ்டி ப்ரளய ரக்ஷணங்களுக்குக் கடவனுமான பெருமானை |
| | | புகழும்ஆறு அறியேன் | புகழும்விதம் இன்னதென்று அறிகின்றிலேன். |

* * *—இப்படி யென்னெஞ்சிலே திகழாநிற்கிற திருச்சிற்றாற்றெம்பெருமானைப் புகழும்படியறிகின்றிலே னென்கிறார். செழுநிலத்தேவர் நான்மறையோர் திசை கைகூப்பி யேத்தும்=நாலு வகைப்பட்ட வேதங்களையோதி நிபுணர்களாய் நிலத்தேவர்களாயிருக்குமவர்கள் திக்குக்கள்தோறும் நின்று கைகூப்பியேத்தும்படியான திருச்சிற்றாற்றிலே வர்த்திக்கிறவனை யென்றது—உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடியாய் உகந்தவர்களே புடைசூழ விருக்கிறபடியைச் சொன்னவாறு.

புகர்கொள்வானவர்கள் புகலிடந்தன்னை=வானவர்க்குப் புகராவது—தங்களை வந்து பணிகின்றவர்களுக்குத் தாங்கள் புகலாயிருக்கையாம்; அப்படிப்பட்டவர்களுக்கும் ஆபத்து வந்தால் அவர்களுக்குப் புகலிடமாயிருப்பவனெம்பெருமான். *வேதாபஹார குருபாதகதைத்ய பீடாத்யாபத் விமோசநம் பண்ணிக் கொடுப்பார் இவனை யொழிய வேறொருவருமில்லையே. அப்படிப்பட்ட தேவர்களுக்கு விரோதிகளாய்க் கனமிடுக்கர்களான அசுரர்களுக்கு மிருத்யுவாயிருப்பவன் எம்பெருமான். கூற்றை என்றால் போராதோ? 'வெங்கூற்றை' யென்னவேணுமோ? யமன் வெவ்வியனாகவல்லாமல் ஸாதுவாகவுமிருப்பனோ வென்று சங்கை தோன்றும்; இதற்கு நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்—"அந்தகன் தண்ணீரென்னும்படி வெவ்விய கூற்றமாயுள்ளவனை" என்று. அசுரர்களை யழிக்கும் விஷயத்தில் யமனுடைய வெம்மையிற் காட்டில் பன்மடங்கு அதிகமான வெம்மையை யுடையவன் என்றவாறு. இப்படிப்பட்ட எம்பெருமானைப் புகழுமாறறியேன்—நான் புகழ்ந்து அப்பெருமானுக்கு ஆகவேண்டுவதொன்றுமில்லை; என் குறைதீரப் புகழவேண்டுவதுண்டே; அங்ஙனே புகழும் பரிசு அறிகின்றிலேன்; புகழாதொழியவும் மாட்டுகிறிலேன்; பின்னை என் செய்வதென்ன; பொருந்து மூவுலகும் படைப்பொடு கெடுப்புக் காப்பவனே—தனக்கு விதேயமான ஸகல லோகங்களினுடையவும் ஸ்ருஷ்டி முதலானவற்றைப் பண்ணுமவனென்று திரளச் சொல்லுமத்தனை; பிரித்து வகையிட்டுச் சொல்லப்புகுந்தால் சொல்லிமுடிக்கப் போகாதென்றபடி. .... 8

3488 படைப்பொடுகெடுப்புக்காப்பவன் பிரமபரம்பரன்சிவப்பிரானவனே *
இடைப்புக்கோருருவுமொழிவில்லையவனே புகழ்வில்லையாவையுந்தானே *
கோடைப்பெரும்புகழாரினையர் தன்னானார் கூரியவிச்சையோடொழுக்கம் *
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்தநாதனே. 9

| | |
|---|---|
| கோடை பெரு புகழார் | ஔதாரியத்தால் மிக்க புகழை யுடையராய் |
| இனையர் | இன்னாரின்னா ரென்று ப்ரஸித்தி பெற்றவர்களாய் |
| தன்னானார் | எம்பெருமான்றன்னோ டொத்த ஜ்ஞாந சக்திகளை யுடையரா யிருக்குமவர்கள் |
| கூரிய விச்சையோடு ஒழுக்கம் நடை பலி | கூர்மையான ஞானமும் (அதற்குத் தக்க) அனுட்டானமும் நித்யயாத்ரையான பகவதாராதனமும் |
| இயற்கை | இயல்வாகப் பெற்றிருக்குமிடமான |
| திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு | திருச்சிற்றாற்றுப்பதியில் |
| அமர்ந்த நாதன் | எழுந்தருளியிருக்கு மெம்பெருமான் |
| படைப்பொடு கெடுப்பு காப்பு அவன் | ஸ்ருஷ்டி ஸம்ஹார ரக்ஷணங்களுக்கு நிர்வாஹகனாயிருக்குமவன்; |
| பிரமன் பரம்பரன் | ப்ரஹ்மஸ்வரூபியா யிருக்கிற பாரத்பரன்; |
| சிவபிரான்அவனே | சிவஸ்வரூபியுமானவன்; |
| இடை புக்கு | மேற்சொன்ன இருவர்க்குமிடையிலே ரக்ஷகனாய்ப் புகுந்து |
| ஓர் உருவும் ஒழிவு இல்லை அவனே | ஒரு பதார்த்தத்தையும் விட்டு நீங்காமல் ஸர்வாந்தர்யாமியா யிருக்குமவன்; |
| யாவையும் தானே | சேதநாசேதந விபாகமின்றிக்கே எல்லாம் தன்னதீனமாயிருக்கப் பெற்றவன்; |
| புகழ்வு இல்லை | இதில் அதிசயோக்தியானது ஒன்றுமில்லை. |

* * *—பிரமன் முதல் எறும்பளவாகவுள்ள ஸகல ஜந்துக்களினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணுவான் திருச்சிற்றாற்றெம்பெருமானே யென்னுமிடம் அர்த்தவாதமன்று, மெய்யே யென்கிறார். படைப்பொடு கெடுப்புக்காப்பவன்—படைத்தல் அழித்தல் காத்தல் ஆகிய இவையெல்லாம் தன் அதீனமாம்படியிருக்குமவன். பிரமபரம்பரன்—மநுஷ்யர் முதலானவர்களிற்காட்டிலும் இந்திரனுக்கு எவ்வளவு ஏற்றமுண்டோ, அவ்வளவு ஏற்றம் இந்திரனிற்காட்டில் பிரமனுக்குண்டு; அவனிற்காட்டில் எம்பெருமானுக்கு அத்தனை யேற்றமுண்டு என்பது இங்கு அறியத்தக்கது. "பிரமனும் அவனே, சிவனும் அவனே" என்றதன் கருத்து—அவர்களெல்லாரும் இவனிட்ட வழக்கே யென்பதாம். ஆத்மா இட்ட வழக்கான தேஹத்தை தேஹமே ஆத்மா என்பதுபோல. இடைப்புக்கு ஓருருவு மொழிவில்லை—பிரமனும் சிவனும் அவனிட்ட வழக்கென்று இப்படி தனிப்படச் சொல்லவேண்டிய அவசியமில்லை; மற்றுள்ள ஸகல பதார்த்தங்களும் அவனிட்ட வழக்கே யென்கை. புகழ்வில்லை யென்றது—அதிசயோக்தியன்று என்றபடி. இப்படி அர்த்தவாதமன்றிக்கே யதார்த்தமான புகழையுடைய எம்பெருமான் திருச்சிற்றாறமர்ந்த நாதன் என்கிறார்.

அத்தலம் எப்படிப்பட்ட தென்ன; அத்தலத்திலுள்ளாரது பெருமையைச் சொல்லும் முகத்தால் அத்தலத்தின் பெருமை சொல்லுகிறன பின்னடிகள். [கொடைப் பெரும்புகழார் இத்யாதி.] அவ்வூரிலுள்ளார் ஔதார்யத்தில் பெரும்புகழ் பெற்றவர்கள்; எதிரிகளையும் கொடையினால் வசீகரிக்க வல்லவர்களென்றபடி. பெரும்புகழாவது—ஜ்ஞான ப்ரதானம் பண்ணிப் படைத்த புகழ். இனையர்—இன்னாரின்னாரென்று ப்ரஸித்தி பெற்றிருக்குமவர்கள். 'எனையர்' என்னும் பாடமும் வியாக்கியானங்களில் காட்டப்பட்டுள்ளது; இப்படியிருப்பார் பலரென்றபடி. தன்னானார்—எம்பெருமானைப் போன்று தட்டுத் தடங்கலில்லாத சக்தியையுடையவர்கள். "அவன்றன்னைப் போலே அதிகரித்த காரியத்தில் வெற்றிகொண்டல்லது மீளாதவர்கள்" என்பது ஈடு.

கூரிய விச்சையோடொழுக்கம் நடைப்பலியியற்கை='வித்யா' என்னும் வடசொல் விச்சையென விகாரப்பட்டது; ஞானத்தைச் சொன்னபடி. கூர்மையான ஞானமும் அதற்கேற்ற அனுட்டானமும், அனுட்டானங்களில் தலையான பகவதாராதனமும் இயல்வாகப் பெற்றவர்கள். இப்படிப்பட்ட பரம பாகவதர்கள் மலிந்த திருச்சிற்றாற்றுப்பதியில் அமர்ந்த நாதன் முன்னிரண்டடிகளிற் சொன்ன பெருமை பொலிந்தவன்.

3489 அமர்ந்தநாதனையவரவராகி அவர்க்கருளருளுமம்மானை *
அமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை *
அமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கள் தம்பதிஅவனிதேவர்வாழ்வு *
அமர்ந்தமாயோனைமுக்கணம்மானை நான்முகனையமர்ந்தேனே. 10

| | |
|---|---|
| அமர்ந்தநாதனை — நாதனென்றால் தகும்தகுமென்னும்படியான நாதனாய் | அமர்ந்த சீர் மூவாயிரவர் வேதியர்கள் தம் பதி — ஸ்ரீமான்களான மூவாயிரம்பிராமணர்களுக்கு வாஸஸ்தானமாய் |
| அவர் அவர் ஆகி — தன் பக்கலில் அர்த்திகளாக வருவாரெல்லார்க்கும் அபிமாநியாய் | அவனி தேவர் வாழ்வு — நிலத்தேவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் வாழுமிடமான அப்பதியிலே |
| அவர்க்கு அருள் அருளும் அம்மானை — அவர்கட்கு அபீஷ்டங்களையளித்தருளும் ஸ்வாமியாய் | அமர்ந்த மாயோனை — பொருந்தியெழுந்தருளி யிருக்குமாச்சர்ய பூதனுமாய் |
| அமர்ந்த தண் பழனம் — செறிந்து குளிர்ந்த நீர் நிலங்களையுடைய | முக்கண் அம்மானை நான்முகனை — சிவனுக்கும் பிரமனுக்கும் அந்தர்யாமியுமான பெருமானை |
| திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை — திருச்சிற்றாற்றுப் பதியிலெழுந்தருளியிருப்பவனுமாய் | அமர்ந்தேன் — கிட்டப்பெற்றேன். |

* * *—ஸர்வேச்வரனாயிருந்துவைத்து ஸகல ப்ராணிகளும் ஆச்ரயிக்கலாம்படி திருச்சிற்றாற்றுப்பதியிலே நின்றருளும் பெருமானைப் பொருந்தப் பெற்றேனென்கிறார். அமர்ந்த நாதனை=எம்பெருமானைத் தவிர்த்துப் பிறர்களை இவ்வுலகுக்கு நாதரென்றால் 'ஐயோ? இது தகாத பேச்சாயிருந்ததே' என்று பரிதபிக்கவேண்டியிருக்கும்; எம்பெருமானை நாதனென்று சொன்னால் 'தகும் தகும்' என்னும்படியாயிருக்குமாம்; "அமர்ந்த நாதனை" என்றதற்கு இதுவே கருத்து. *த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாத் நாதவத்தரம்* என்ற ஸ்ரீராமாயண ச்லோகம் இவ்விடத்திற்கு மிகப் பொருத்தமானது. "ஆனைப்பிணங்களைக் குதிரை சுமக்கவற்றோ என்னாதபடி உபய விபூதிக்கும் நாதனென்றால் தக்கிருக்குமவனை" என்று இருபத்திநாலாயிரம். அவரவராகி=இதற்குக் கீழே 'நாதனை' என்று வந்தபடியாலே அதற்குச்சேர இதற்குப் பொருள் கொள்ளவேண்டும்; நாதன் என்பதற்கு—அர்த்திக்கப்படுமவன் என்று பொருளாகையாலே அர்த்திகள் நினைவுக்கு வரக்கூடியவர்கள்; மேலே "அவர்க்கருளருளுமம்மானை" என்றிருக்கையாலே அதற்குச் சேரவும் பொருள் கொள்ள வேணும்; ஆகவே, அவரவராகி யென்றது—அந்தந்த அர்த்திகளாகியென்று பொருள்படும். இதற்கு இரண்டு வகையாகக் கருத்தருளிச் செய்வர்; அவர்கள் 'இது நமக்கு வேணும்' என்றிருப்பதுபோல எம்பெருமான் 'இவர்களுக்கு இது வேணும்' என்றிருப்பனாம்—அதைச் சொல்லுகிறதென்று முதற் கருத்து. அவர்கள் அர்த்திகளாயிருக்குமாபோலே இவனும் அர்த்தியாயிருக்கும்; கொடுக்கவேணுமென்று அவர்கள் அர்த்தித்தால் கொள்ளவேணுமென்று இவன் அர்த்திப்பனென்பது இரண்டாங்கருத்து. அவரவர்களது அபேக்ஷிதங்களைத் தன்பேறாகக் கொடுக்குமவனென்றதாயிற்று.

கீழ் ஆறாம்பாட்டிலே *மனக்கொள்சீர் மூவாயிரவர் வண்சிவனுமயனுந்தானு மொப்பார்வாழ்* என்றருளிச் செய்ததுபோல இங்கும் *அமர்ந்தசீர்மூவாயிரவர் வேதியர்கள் தம்பதி* என்றருளிச் செய்கிறார். "முக்கணம்மானை நான்முகனை" என்றது—முக்கண்ணனுக்கும் நான்முகனுக்கும் உயிரானவனை யென்றபடி. ... 10

3490 தேனைநன்பாலைக்கன்னலையமுதைத் திருந்துலகுண்டவம்மானை *
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ் மலர்மிசைப்படைத்தமாயோனை *
கோனைவண்குருகூர்வண்சடகோபன் சொன்னவாயிரத்துளிப்பத்தும் *
வானின்மீதேற்றியருள்செய்துமுடிக்கும் பிறவிமாமாயக்கூத்தினையே. 11

| | | | |
|---|---|---|---|
| தேனை நன்பாலை கன்னலை அமுதை | தேனும் பாலும் கன்னலும் அமுதும் போலப் பரம போக்யனாய் | கோனை | ஸர்வேச்வரனைக் குறித்து |
| திருந்து உலகு உண்ட அம்மானை | கட்டளைப்பட்ட ஜகத்தைக் காத்தருளின பெருமானாய் | வண் குருகூர் வண்சடகோபன் | ஆழ்வார் |
| வானம் நான் முகனை | வானுலகத்தவனான சதுர்முகனை | சொன்ன ஆயிரத்துள் | அருளிச்செய்த ஆயிரத்தினுள்ளும் |
| மலர்ந்த தண் கொப்பூழ் மலர் மிசைபடைத்த மாயோனை | மலர்ந்து குளிர்ந்த திருநாபிக் கமலத்திலே யுண்டாக்கின ஆச்சர்ய பூதனுமான | இப் பத்தும் | இத்திருவாய்மொழியானது |
| | | வானின்மீது ஏற்றி | பரமபதத்திலே ஏறவிட்டு |
| | | அருள்செய்து | பகவத் கைங்கர்ய ப்ராப்தியாகிற அருளைச் செய்வித்து |
| | | பிறவி மா மாயம் கூத்தினை முடிக்கும் | ஸம்ஸாரமாகிற ஆச்சர்ய நாடகத்தை முடித்துவிடும். |

* * *—இத்திருவாய்மொழி கற்கைக்கு, ஸம்ஸார நிவ்ருத்தியையும் பரமபத ப்ராப்தியையும் பயனாகவருளிச் செய்கிறார். ஆழ்வார்க்கு எம்பெருமான் விஷயத்திலுண்டான அச்சத்தைத் தீர்ப்பது இத்திருவாய்மொழியேயாதலால், அச்சமுண்டாவதற்குக் காரணமும் இங்கே ஒருவாறு தெரிவிக்கப்படுகின்றது—தேனை நன்பாலைக் கன்னலை யமுதை யென்று. இப்படி ஸர்வவித போக்யவஸ்துவாயிருக்கையாலே இதற்கென்

வருகிறதோவென்று அச்சமுண்டாகக் கூடுமன்றோ. அவ்வச்சம் கெட்டதற்கான ஹேதுவும் அடுத்தபடியாகச் சொல்லுகிறது—திருந்துலகுண்டவம்மானை யென்று. ஜகத்தைப் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கி அச்சங்கெடுத்த பெருமான் திறத்திலேயோ நாம் அச்சங்கொள்வது! என்று அச்சந்தவிர்ந்தபடி. இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்தினுள்ளும் இப்பதிகமானது தன்னைக் கற்கவல்லவர்களை முந்துறமுன்னம் திருநாட்டிலே யேற்றிப் பிறகு ஸம்ஸார மஹாநாடகத்தையுமறுக்கும். முன்னம் ஸம்ஸாரத்தை யறுத்துப் பின்னை திருநாட்டிலே யேற்றுமென்று சொல்லவேண்டுவது முறைமையாயிருக்க இங்ஙனே சொன்னதன் சுவையை நம்பிள்ளை வெளியிடுகிறார் காண்மின்—"நாடு அராஜகமானால் முன்னம் ராஜபுத்ரன் தலையிலே முடியை வைத்துப் பின்னை விலங்கு வெட்டுவிடுமா போலே" என்று. அதாவது, ராஜகுமாரன் ஏதோ குற்றங்கள் செய்திருந்ததற்காகச் சிறையிலடைக்கப்பட்டு விலங்கிடப் பெற்றிருந்தான்; திடீரென்று அரசன் முடிந்துபோக, சிறையில் கிடக்கும் ராஜபுத்திரன் தலையிலே முடிவைக்க வேண்டியதாயிற்று; அப்போது, ஒரு நொடிப்பொழுதும் நாடு அராஜகமாயிருக்கக் கூடாதாகையாலே முன்னம் அவன் தலையிலே முடியை வைத்துப் பின்னை சிறை விடுவிப்பார்களாம். அதுபோலவென்க. ஸ்தநந்தயப்ரஜைக்கு சிகித்ஸைபண்ணவேண்டிவந்தால், முலையை வாயிலேகொடுத்துச் சிகித்ஸை பண்ணுமாபோலே யென்கிற த்ருஷ்டாந்தமும் இங்குப் பொருந்தும். ... .... ... ... ... 11

எட்டாம்பத்து நான்காந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஐந்தாந்திருவாய்மொழி—மாயக்கூத்தா

உரையவதாரிகை:—கீழே 'அங்குமிங்கும்,* வார்கடாவருவி என்கிற இரண்டு திருவாய்மொழிகளாலும் எம்பெருமானுக்கு ரக்ஷைதேடி ஸ்மாஹிதராய் நின்றார். *வார்கடாவருவியில் "திருச்செய்ய கமலக்கண்ணும் செவ்வாயும் செவ்வடியும் செய்ய கையும் திருச்செய்ய கமலவுந்தியும் செய்ய கமலை மார்பும் செய்யவுடையும் திருச்செய்யமுடியும் ஆரமும் படையும் திகழ என் சிந்தையுளானே" என்று உள்ளம் பூரித்து உடல் பூரித்து அநுஸந்தித்த வடிவழகு திருவுள்ளத்திலே வேரூன்றியிருந்தபடியாலே அவ்வடிவழகைக் கண்ணாரக்கண்டு பாஹ்யஸம்ச்லேஷம் பண்ணவேணுமென்று அபேக்ஷை பிறந்து, அது பெருமையாலே 'கீழ்ப்பல திருவாய்மொழிகளிலும பட்ட க்லேசங்களும் இதற்கு ஈடல்ல; ஆழ்வாருடைய க்லேசங்களிலே இது நிகரற்ற க்லேசம்' என்னும்படியாக நொந்து காட்டுத்தீகதுவினரைப் போலே தப்தராய், தம்மிற்காட்டிலும் ஆகுலங்களான கரணங்களையுடையராய் 'என் விடாயெல்லாம் தீரும்படி திவ்யாவயவங்களோடே வரவேணும், அழகிய திருவபிஷேகத்தோடே வரவேணும், அழகிய வடிவோடே வரவேணும், மேகம் போலே வரவேணும், உதய காலத்து ஆதித்யனைப் போலே பெரிய புகரோடே வரவேணும்' என்றிப்படி கூப்பிட்டு, பின்னையும் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே 'நாம் இந்த க்லேசத்தோடே முடிந்து போமித்தனையன்றோ' என்று இழவோடே தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழி. ... *

3491 மாயக்கூத்தாவாமனா வினையேன்கண்ணாகண்கைகால் *
தூயசெய்யமலர்களா சோதிச்செவ்வாய்முகிழதா *
சாயல்சாமத்திருமேனி தண்பாசடையாதாமரைநீள் *
வாசத்தடம்போல்வருவானே ஒருநாள்காணவாராயே.

| | | | |
|---|---|---|---|
| மாயக் கூத்தா | ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடையவனே ! | சாமம் சாயல் திருமேனிதண் பாசு அடையா | சாமளமான சாயலையுடையதிருமேனி குளிர்ந்து பசுமை தங்கிய இலையாகவும்பெற்று |
| வாமனு | வாமனவேஷங்கொண்டவனே! | நீள் வாசம் தாமரை தடம் போல் வருவானே | பெரியதாய் நறுமணம் மிக்கதான தாமரைத் தடாகம் போல் வருமவனே! |
| வினையேன் கண்ணு | மஹாபாபியான என்கைக்கு எட்டாத க்ருஷ்ணனே ! | | |
| கண் கை கால் தூய செய்ய மலர்களா | திருக்கண்களும் திருக்கைகளும் திருவடிகளும் சிவந்தலர்ந்த பூக்களாகவும் | | |
| சோதிசெம்வாய் முகிழதா | அழகிய சிவந்த திருவதரம் முகுளமாகவும் | ஒருநாள் காண வாராய் | ஒரு நாளாகிலும் நான் காணும்படி வருவாயாக. |

* * *—கண்டவளவிலே விடாயெல்லாம் தீரும்படியான தொரு தாமரைத் தடாகம் போலே நான் காணும்படி வந்தருள வேணுமென்று வேண்டுகிறார். தமக்கு இப்படிப்பட்ட கிலேச முண்டானதற்கு ஹேதுவையருளிச் செய்கிறார் முதலடியில். மாயக் கூத்தா வாமனு !=உன்னுடைய ஆச்சர்ய குணங்களையும், மநோஹாரி சேஷ்டிதங்களையும், இந்திரனுக்காக இரப்பாளனாய்ச் சென்று செய்த செயல்களையும் நெஞ்சார நினைத்தேன்; நினைத்த மாத்திரத்திலே அவ்வடிவுதன்னை நாம் கட்கூடாகக் கண்டே தீர வேணுமென்று ஆவல் கிளர்ந்தது; அதனால் இப்படி அலற்றுகிறேன்காண் என்பது குறிப்பு.

வினையேன் கண்ணு வென்பதற்கு நம்பிள்ளையருளிச் செய்யும் விசேஷார்த்தங் காணீர்—“ ஸ்ரீவாமனனாய் வந்து அவதரித்தது இந்த்ரனுக்கானாற்போலே க்ருஷ்ணனாய் வந்தவதரித்தது தமக்காக வென்றிருக்கிறார் ” என்று. க்ருஷ்ணாவதார ஸமாப்திக்கும் ஆழ்வாருடைய திருவவதாரத்துக்குமிடையிலே சில நாட்களே சென்றனவாக ஸம்ப்ரதாயமாதலால் இங்ஙனே யருளிச் செய்வது மிகப்பொருந்தும். பல்லிலே பட்டுத் தெறித்தாற்போலே அவ்வவதாரத்திற்குச் சிறிது பிற்பட்டபடியாலே வெறுத்துச் சொல்லுகிறார் வினையேன் என்று.

இங்ஙனே அவனையழைத்து, ஒரு தாமரைத் தடாகம்போல் வரவேணுமென்கிறார் மேல். தடாகத்திற்கு மெம்பெருமானுக்கு முண்டான ஒற்றுமையைத் தாமே நிருபணம் செய்தருளுகிறார் [கண் கை கால் தூய செய்ய மலர்களா இத்யாதியால்.] கிட்டினாரோடு முதலுறவு பண்ணும் திருக்கண்களும், அத்திருக்கண்ணுக்குக்குத் தோற்றவர்களை அணைக்கும் திருக்கைகளும், திருக்கைத்தல ஸ்பர்சத்துக்குத் தோற்று விழுந்திருவடிகளுமாகிய இவ்வவயவங்கள் இத்தடாகத்திற்குரிய தாமரைகளாம். முகுந்தமாலையில் *கரசரணஸரோஜே ஹரிஸரஸி* என்றதும் இங்கே அநுஸந்தேயம். தடாகத்தில் தாமரைப் பூக்கள் மாத்திரமேயோ இருப்பது? முகுளமுமிருக்குமே, அதுவும் இங்கு உண்டென்கிறார் சோதிச்செவ்வாய்முகிழதா என்பதனால். புகரையுடைத்தாய்ச் சிவந்திருக்கிற திருப்பவளமே முகுளமாகக் கொள்ளத்தக்கது. காம்பீர்யாதிசயத்தாலே பரிபூர்ணஸ்மிதம் பண்ணாமல் விகாஸோந்முகமான ஸ்மிதமே யிருப்பது கொண்டு திருவதரத்தை முகுளாவஸ்தையோடு ஒப்பிட்டுச் சொல்லுகிறது.

இனி, தாமரையிலையின் ஸ்தானத்திலே இங்கு எதுவென்னில்; சாயல்சாமத்திருமேனி தண்பாசடையா என்கிறார். மேலே ஒன்பதாம்பத்திலே *அக்கமலத் திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே* என்ற பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. பச்சைமாமலை போன்ற மேனியானது தாமரையிலைக் கொப்பாகுமென்க. பசுமை அடை, பாசடை; (அடை—இலை.) ஆக இப்படிகளாலே, தாமரைமயமாய் அபரிச்சேத்யமான பரப்பையுடைத்தாய்ப் பரிமள ப்ரசுரமாயிருப்பதொரு தடாகம் கைகால் முளைத்து நடந்து வருமாபோலே வரவேணும் பிரானே! என்கிறார். ‘வாசத்தடம்போல் வரவேணும்’ என்னாதே ‘வாசத்தடம் போல் வருவானே! வாராய்’ என்று சொல்லியிருப்பது—இங்ஙனே முன்பு தம்பக்கல் வந்தபடியைத் தெரிவிக்கும். இது அபூர்வ ப்ரார்த்தனை

யன்று; ஏற்கெனவே இப்படிப்பட்ட அநுபவம் எனக்கு நேர்ந்திருக்கிறது, அதனையே இப்போதும் ப்ரார்த்திக்கிறேனென்றபடி. ... ... ...

3492 காணவாராயென்றென்று கண்ணும்வாயும்துவர்ந்து * அடியேன்
நாணிநன்னாட்டலமந்தால் இரங்கியொருநாள்நீயந்தோ *
காணவாராய்கருநாயிறுதிக்கும் கருமாமாணிக்கம் *
நாணன்மலைபோல்சுடர்ச்சோதி முடிசேர்சென்னியம்மானே.

| | | | |
|---|---|---|---|
| கரு நாயிறுஉதிக்கும் | கறுத்ததொரு ஸூர்யன் உதித்துக் கிளம்பியிருப்பதாய் | கண்ணும் வாயும் துவர்ந்து | பார்க்கிற கண்களும் கூப்பிடுகிற வாயும் பசையற வுலர்ந்து |
| மாகருமாணிக்கம் | மஹத்தான நீல ரத்னமாய் | நாணி | வெட்கமுமடைந்து |
| நாள் நல் மலை போல் | அப்போதுண்டான அழகியமலை போலே | நல் நாடு | இந்த நல்ல நாட்டிலே |
| சுடர் சோதி | பரம்புகிற சுடரையுடைத்தான தேஜஸ்ஸையுடைய | அடியேன் அலமந்தால் | அடியேன் இப்படித் தளர்ந்தால் |
| முடி சேர் | மயிர் முடியோடே சேர்ந்த | ஒருநாள் இரங்கி நீ காணவாராய் அந்தோ | ஒரு நாளாகிலும் நீ க்ருபை பண்ணி நான் காண வருகிறிலையே, ஐயோ. |
| சென்னி அம்மானே | திருமுடியையுடைய பெருமானே! | | |
| காண வாராய் என்று என்று | நான் காணும்படி வாராயென்று பலகாலுஞ் சொல்லி | | |

* * *—என் விடாய் கெடும்படி அழகிய மயிர் முடியுடனே வந்து தோற்றியருள வேணுமென்கிறார். கீழ்ப்பாட்டில் 'காணவாராய்' என்று ஒரு காலே சொல்லியிருந்தாலும் பலகால் வாயாரக் கூப்பிட்டிருப்பரே; பாட்டிலே சொல்லுகிறவளவேயோ உள்ளது? ஆழ்வாருடைய கூக்குரல்களெல்லாம் பாட்டிலே யடங்குமோ? இப்பாட்டில் "காணவாராய் என்றென்று" என்ற இரட்டிப்பினால் பலகால் கூப்பிட்டமை ஸூசிதமாகிறது. ஒருகால் காணவாராயென்று சொல்லியும் நீ வரக் காணாமையாலே ஆறியிருக்கமாட்டாமல் பின்னையும் 'காணவாராய், காணவாராய்' என்றேன்; [கண்ணும் வாயும் துவர்ந்து] எந்த வழியாக வருகிறாயோவென்று திசைகள் தோறும் பார்த்துக் கண்களும் பசையறவுலர்ந்தன; *கண்ணநீர்கைகளாலிறைக்கும்* என்னும்படியான நிலைமையும் போயிற்று; கூவிக்கூவி வாயும் பசையற வுலர்ந்தது. [அடியேன் நாணி] உடனே எனக்கு லஜ்ஜையுமுண்டாயிற்று. எதற்காக வென்னில்; இரண்டு விதத்தாலே லஜ்ஜையாகக்கூடும்; ஒரு க்ஷுத்ரபலனுக்காகவல்லாமல் காண்கைக்காகவே முறையறிந்து நாம் கூப்பிடச்செய்தேயும் நமக்கு வந்து தோன்றவில்லையேயென்று உண்டான லஜ்ஜையொன்று; 'ஆழ்வார் இப்படி கூப்பிடாநிற்கச் செய்தேயும் வந்து தோன்றாமலிருக்கிறானே, இப்படியும் ஒரு நிர்க்ருணனுண்டோ; என்று நாட்டார் உன்மேல் பழிசொல்லக்கூடுமே; நம்மாலன்றோ இந்த அவத்யம் அவனுக்குண்டாகிறது' என்றுண்டான லஜ்ஜை மற்றொன்று.

[நன்னாட்டு அலமந்தால்] *இருள்தருமாஞாலமென்று வெறுத்து இகழப்படுகின்ற இந்த நாட்டை நல்ல நாடென்றதற்கு இரண்டு வகையாகக் கருத்துக் கூறுவர்; எதிர்மறையிலக்கணையினால் தீயநாடு என்றதாகவே கொள்ளலாம்; அன்றியே, ஆழ்வார் தம்மைப்போலே இந்நாட்டினர் இப்படி அலமந்து கூப்பிடக்காணாமையாலே இந்நாடு எம்பெருமானைப்பெற்று அநுபவிக்கின்றதென்றே கொண்டு நல்லநாடென்றதாகவுங் கொள்ளலாம்.

பின்னடிகளால் விலக்ஷணமான உத்ப்ரேக்ஷை பண்ணுகிறார்; கருநிறத்தனான ஸூர்யன் அப்ரஸித்தன்; கரியமாணிக்கமும் அப்ரஸித்தம்; இற்பொருளுவமை முறையில் அப்படிப்பட்ட இரண்டு வஸ்துக்களைக் கற்பனை செய்து கொள்ளுகிறார்; கரிய ஸூர்யன் உதிக்கப்பெற்ற கரியமாணிக்கமலைபோலே யென்கிறார். மிக்க புகரையுடைய மயிர்முடிக்குக் கரியஸூர்யன் உவமை; கரிய திருமேனிக்குக் கரியமாணிக்கம் உவமை.

3493 முடிசேர்சென்னியம்மா நின்மொய்பூந்தாமத்தண்டுழாய் *
கடிசேர்கண்ணிப்பெருமானே என்றென்றேங்கியழுதக்கால், *
படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும் *
துடிசேரிடையுமமைந்ததோர் தூநீர்முகில்போல்தோன்றாயே. 3

| | |
|---|---|
| முடி சேர் சென்னி அம்மா | திருவபிஷேகத்தோடு சேர்ந்த திருமுடியையுடைய ஸ்வாமியே ! |
| நின் மொய் பூ தாமம் தண் துழாய் கடி சேர்கண்ணி பெருமானே | உனக்கு அஸாதாரணமாய்ச் செறிந்து அழகிய ஒளியையுடைய குளிர்ந்த திருத்துழாயாகிற நறுமண மாலையையுடைய ஸர்வாதிகனே! |
| என்று என்று | என்றிப்படி பலகாலுஞ்சொல்லி |
| ஏங்கிஅழுதக்கால் | பொருமிப் பொருமியழுதால் |
| படி சேர் மகரம் குழைகளும் | வடிவுக்குச் சேர்ந்த மகர குண்டலங்களும் |
| பவளம் வாயும் | பவளம் போன்ற திருவதரமும் |
| நால் தோளும் | நான்கு திருத்தோள்களும் |
| துடிசேர் இடையும்அமைந்தது | துடிபோலே யிருக்கிற இடையுமாயமைந்த |
| தூ நீர் ஓர் முகில் போல் தோன்றாயே | தூய நீரையுடைய ஒரு காளமேகம் போலேவந்து தோன்றமாட்டேனென்கிறாயே. |

* * *—ஆபரணசோபையும் அவயவசோபையுமுடையவொரு காளமேகம் நடந்து வருகிறதோவென்னலாம்படி வந்து தோன்றவேணுமென்கிற ஆவலைக் காட்டுகிறாரிதில். 'உலகுக்கெல்லாம் அதிபதி இவனே' என்று கோட்சொல்லித்தருகின்ற திருவபிஷேகமணிந்த சென்னியையுடைய ஸர்வேச்வரனே! என்றும், *தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந் துழாயுடையம்மானே! என்றும் சொல்லிச்சொல்லி அப்படிப்பட்ட அழகைக் கண்ணாரக் காணவேணுமென்று விரும்பி நான் பொருமிப் பொருமியழுகிறேனே, என்னழுகைக் குரல் உனது செவியில் விழவில்லையோ? அழுகைக்குரலில் தளர்த்தியையறிந்தால் விரைந்தோடி வந்து நிற்கவேண்டாவோ?

எங்ஙனே வந்து தோன்றவேணுமென்கிறாயோ; ஓர் தூநீர் முகில்போல் தோன்ற வேணும்; அது எப்படிப்பட்ட முகிலாயிருக்கவேணுமென்னில்; மகரகுண்டலங்களும் பவளவாயும் நான்கு தோள்களும் நுண்ணியஇடையும் அமைந்ததாயிருக்க வேண்டும். இப்படியல்லாமல் ஆகாசத்திலே திரிகிற நிரவயவமான மேகம் போல் வரில் வேண்டேன்—என்றாராயிற்று.

படிசேர் மகரக்குழைகளும்=படிசேர் என்றது இயற்கையாகச் சேர்ந்த என்றபடி. 'திருமேனியிலே பொருந்தின' என்றுமாம். தோன்றாய்—உடன்பாட்டுப் பொருளும் எதிர்மறைப் பொருளும் கொள்ளலாம். ... ... ... ... 3

3494 தூநீர்முகில்போல்தோன்றும் நின்சுடர்கொள்வடிவுங்கனிவாயும் *
தேநீர்க்கமலக்கண்களும் வந்தென்சிந்தைநிறைந்தவா *
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போல *
தூநீர்க்கடலுள்துயில்வானே எந்தாய்சொல்லமாட்டேனே. 4

| | |
|---|---|
| மா நீர் வெள்ளி மலை தன்மேல் | ஆழ்ந்த நீரினுள்ளே கிடப்பதொரு வெள்ளி மலையின் மேலே |
| வண் கார் நீலம் முகில்போல | அழகிய கார்காலத்துக் காளமேகம் போலே |
| தூ நீர் கடலுள் | வெளுத்த நீரையுடைய பாற்கடலில் |
| துயில்வானே | திருக்கண் வளர்ந்தருளுகிறவனே ! |
| எந்தாய் | என் ஸ்வாமியே! |
| தூ நீர் முகில் போல் தோன்றும் | தெளிந்த நீர் நிறைந்த மேகம் போலே விளங்குகின்ற |
| நின் சுடர்கொள் வடிவும் | உன்னுடைய ஒளி பொருந்திய வடிவும் |
| கனி வாயும் | கனிந்த திருவதரமும் |
| தேன் நீர் கமலம் கண்களும் | மது ஜலத்தையுடைய கமலம் போன்ற திருக்கண்களும் |
| வந்து என் சிந்தைநிறைந்த ஆ | இங்கே வந்து என் நெஞ்சு நிறைந்திருக்கிறபடியை |
| சொல்லமாட்டேன் | இன்னதென்று சொல்லகில்லேன். |

* * *—இப்பாட்டும் மேற்பாட்டும் சந்தோஷமாகச் சொல்வனபோல் தோன்றும்; கீழ் மேற்பாட்டுக்களில் நிர்வேதம் காணுநிற்க, இடையில் சந்தோஷம் வந்து புக ப்ரஸக்தியில்லை; இவ்விரண்டு பாசுரங்களுங்கூட நிர்வேதமாகவே சொல்லப்படுவன. உன்னுடைய வடிவழகுவந்து என்னெஞ்சிலே நிறைந்து நலிகிறவிதம் என்னால் சொல்லப்போகிறதில்லை யென்று நொந்து சொல்லுகிறபடியே யிது.

எம்பெருமானுடைய வடிவு எப்படிப்பட்டதென்றால், தூநீர்முகில்போல் தோன்றும்—கண்ட மாத்திரத்திலே விடாய்கெடும்படியான காளமேகம் போன்றது; அப்படிப்பட்ட திருவடிவு என் சிந்தையுள்ளே நிறைந்து நலியாநின்றதே!; கனிவாயும் தேனீர்க் கமலக்கண்களும்=வாயும் கண்ணுமான அவயவங்கள் வடிவிலே அந்தர்க்கதமாயிருக்கவும் தனிப்படச் சொல்லுகிறது—இவை தனித்தனி யுருவமாய்க் கொண்டு நலிகிறபடியினாலே. கையில் கிடைத்தபோதே நுகரலாம்படியிருக்கிற கனிபோன்ற வாயும், தாமரைபோன்ற திருக்கண்களும் என் சிந்தையிலே நிறைந்து நலிகிறபடியைச் சொல்லகில்லேன். தேன் நீர்=தேனினுடைய தன்மையை யுடைத்தான கண்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

பின்னடிகளில் ஒரு விலக்ஷணமான உத்ப்ரேக்ஷையுள்ளது; திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான்மேலே எம்பெருமான் திருக்கண் வளர்ந்தருள்வதானது நீர்க்குள்ளே யழுந்தினதொரு வெள்ளிமலையின் மீது காளமேகம் படிந்தாற்போன்றுள்ளது என்கிறார். மேலே ஒன்பதாம்பத்தில் *காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போல்* என்கிறார்; பொன்னிறத்தனான புள்ளரையன்மீது எம்பெருமானிருப்பது பொன்மலையின்மீது காளமேக மிருக்குமாபோலேயுள்ளதென்றார் அங்கு; இங்கு, திருப்பாற்கடலும் வெண்ணிறத்தது; அதில் திருவனந்தாழ்வானும் வெண்ணிறத்தனன்; அவன்மீது கரிய கோலப்பிரான் சயனித்திருப்பது கைலாஸகிரியில் காளமேகம் கிடந்தாற்போன்றுள்ளது என்றாயிற்று. மூலத்தில் திருவனந்தாழ்வானுக்கு வாசகமான சொல் இல்லையாயினும் ஆழ்வார் திருவுள்ளத்தை நோக்கி அதுவும் கொள்ளத்தக்கதே. “திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மேலே யென்கை” என்பது இருபத்திநாலாயிரம். ... ... .... ... 4

3495 சொல்லமாட்டேனடியேன் உன்துளங்குசோதித்திருப்பாதம் *
எல்லையில்சீரிளநாயிறு இரண்டுபோலென்னுள்ளவா *
அல்லலென்னுமிருள்சேர்தற்கு உபாயமென்னே ஆழிசூழ் *
மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்க்கொண்டல்வண்ணனே. 5

| | | | |
|---|---|---|---|
| ஆழி சூழ் மல்லை ஞாலம் முழுது உண்ட | கடல் சூழ்ந்த பெரிய ஜகத்தை யெல்லாம் பிரளயங் கொள்ளாமல் திருவயிற்றிலடக்கினவனும் | உன் துளங்கு சோதி திரு பாதம் | உன்னுடைய விளங்குஞ் சோதியுடைய திருவடிகளானவை |
| மா நீர் கொண்டல் வண்ணனே | நிரம்பின நீரையுடைய காளமேகம்போன்ற வடிவையுடையனுமிருக்கின்ற பெருமானே! | எல்லை இல் சீர் இளஞாயிறு இரண்டுபோல் | அளவிறந்த அழகையுடைய இரண்டு பாலாதித்யர்களைப் போல |
| அடியேன் சொல்லமாட்டேன் | (என்னுள்ளத்திலுள்ள வெளிச்சத்தைப்பற்றி) அடியேன் ஒன்றும் சொல்லத் தெரியாதவனாயிருக்கின்றேன்; (ஆனாலும் சிறிது சொல்லுகின்றேன்;) | என் உள்ள வா | என்னுள்ளத்துள்ளே யிராநின்றன |
| | | அல்லல் என்னும் இருள் சேர்தற்கு உபாயம் என்னே | துக்கமென்று சொல்லப்படுகிற மறப்பென்கிற இருள் வந்து சேருவதற்கு எது வழியோ, அதைச் சொல்லவேணும். |

* * *—இப்பாட்டும் கீழ்ப்பாட்டுப் போலே வருந்திச் சொல்லுகிறதாகவே யுள்ளது. உன்னுடைய வடிவழகு என்னுடைய ஹ்ருதயத்திலே இடைவீடின்றி நினைவுக்கு வந்து நலியாநின்றது; இதை மறக்க நேர்ந்துவிட்டால் நான் பிழைத்திடுவேன்;

இதுவோ மறக்கப் போகிறதில்லை; மறக்க ஒரு விரகு சொல்லவேணும் பிரானே! என்றார்; என்னுடைய ஸன்னிதான மில்லாமையே மறக்கைக்குக் கருவியன்றோ வென்றானெம் பெருமான்; அதற்கு ஆழ்வார் "எம்பிரானே! முன்னமே நான் சொன னதை மறந்தாயோ? * மறக்குமென்று செந்தாமரைக் கண்ணொடு, 'மறப்பற வென்னுள்ளே மன்னினான்தன்னை, மறப்பனோவினியானென்மணியையே * என்று சொல்லி வைத்திருக்கிறேனல்லவா? நீ மயர்வறுக்கையாலே துயரறு சுடரடி என் மனஸ் ஸிலேபுகுந்து நலியாநின்றது, மறக்கைக்கு வழியேது? உண்டாகில் நீயே சொல்ல வேணும் என்கிறார்.

உன் துளங்குசோதித் திருப்பாதம் இளநாயிறிரண்டுபோல் என்னுள்ளவா சொல்லமாட்டேனடி யேன் = ஒளிவிளங்குமுன் திருவடிகள் அளவிறந்த வழகையுடைய பாலாதித்யர்களிரு வரைப்போலே என் ஹ்ருதயத்திலேநின்று நலிகிறபடியை என்னவென்று சொல்லு வேன்? நலிவதாக மூலத்திலில்லையே யென்னவேண்டா; 'சொல்லமாட்டேனடியேன்' என்பதில் அஃது உறைந்துகிடக்கும். 'இளநாயிறு' என்றதும் ஸாபிப்ராயம். ஸூர்யன் உதிக்கும்போதே கண்ணைக் குத்துகிறாப்போலே உதிப்பனன்றோ.

பின்னடிகளில் "அல்லலென்னுமிருள் சேர்தற்கு உபாயமென்னே" என்பதற்குப் பலர் பொருளில் மயங்குவர்கள்; இரண்டு திருவடிகள் இரண்டு ஸூரியர்கள்போலே உள்ளே பிரகாசித்துக்கொண்டிருக்க இருள் எப்படிவந்து சேரும்? வந்துசேரவேமாட் டாது என்பதாகப் பொருள் கொள்வது கூடாது. (அது பிரகரணத்திற்குச் சேராது.) மறப்பாகிற இருள் வந்து சேருகைக்கு உபாயம் சொல்லவேணு மென்று மறப்பை அபேக்ஷிக்கிறாராயிற்று. இருள் என்பது அஜ்ஞானத்திலே ஒருவகையாகையாலே, இருள் சேர்தற்கு உபாயமென்னே? என்றது—மறந்து பிழைப்பதற்கு வழியென்ன? என்று கேட்கிறபடி. இங்கே இருபத்தினாலாயிரப்படி ஸ்ரீஸூக்திகாண்மின்;—" அநர்த்த ரூப மான விஸ்ம்ருதி தேட்டமாம் படியிறே வடிவழகு ஹ்ருதயத்திலே நின்று நலிகிறபடி. ஏதேனுமாக இவர்க்கு துக்கநிவ்ருத்தியே இப்போது வேண்டுவது; திருவடிகள் நெஞ் சிலே ப்ரகாசியாநிற்க, அஜ்ஞானம்வந்து சேருகைக்கு ப்ரஸங்கமின்றியிருக்க அத்தை யபேக்ஷிக்கிறாரிறே,"

இங்கே ஈட்டில் பட்டருடைய நிர்வாஹமொன்றும் அம்மாளுடைய நிர்வாஹ மொன்றும் அருளிச்செய்யப்படுகிறது. "உன்னைக் காட்டாதே அருமைப்படுத்தப் பார்த் தாயாகில், நாட்டார் மிகவும் நிஹீனமாகக் கொள்ளுகிற அஜ்ஞானம் வருவதோருபாயம் சொல்லாய் என்பதாக பட்டருடைய நிர்வாஹம்; மறந்து பிழைக்கலாமென்கிற எண்ணத்தினால் இதுகேட்பதாகக் கொள்வது. இனி அம்மாளுடைய நிர்வாஹமாவது- திருவடிகள் என் ஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்க துக்கரூபமான அஜ்ஞானம் வருகைக்கு உபாயமுண்டோ? என்று. அது உண்டானால் ஸம்ஸாரிகளைப்போலே உண்டியே உடையே உகந்தோடித்திரியலாமே யென்று. ... .... ... 5

3496 கொண்டல்வண்ணாகுடக்கூத்தா வினையேன்கண்ணாகண்ணா * என்
அண்டவாணாவென்றென்னை ஆளக்கூப்பிட்டழைத்தக்கால் *
விண்டன்மேல்தான்மண்மேல்தான் விரிநீர்க்கடல்தான்மற்றுத்தான் *
தோண்டனேனுன்கழல்காண ஒருநாள்வந்துதோன்றாயே. 6

| | | | |
|---|---|---|---|
| கொண்டல் வண்ணா குடக் கூத்தா | காளமேக வண்ணனே! குடக் கூத்தாடினவனே! | கண்ணா | ஸ்ரீ க்ருஷ்ணனே! |
| வினையேன் கண்ணா | அக்குடக் கூத்தைக் கண்டனு பவிக்கப்பெறாத பாவியேனுக் னுக்குக் கண்ணானவனே! | என் அண்ட வாணா | என்னையடிமைப்படுத்திக்கொள் ளுகைக்காகப் பரமபத நிலய னானவனே! |
| | | என்று | என்றிங்ஙனே உன் படிகளைச் சொல்லி |

என்னை ஆள கூப்பிட்டு அழைத்தக்கால் — என்னை அடிமை கொள்ளுமாறு கூவியழைத்தால்
விண் தன் மேல் தான் — பரமபதத்தில் நின்ருே
மண்மேல் தான் — பூமியில் நின்ருே
விரி நீர் கடல் தான் — பரம்பின நீரையுடைய கடலில் நின்ருே
மற்று தான் — அந்தர்யாமியாயிருக்குமிடத்தில் நின்ருே
தொண்டனேன் உன் கழல் காண ஒருநாள் வந்து தோன்ருயே — அடியேன் உன் திருவடிகளைக் காணும்படியாக ஒருநாள் கூட வந்து தோன்றமாட்டேனென்கிருயே.

* * *—பிரானே! உன்னுடைய வடிவழகை நினைத்து காணவேணும் காணவேணு மென்று கூப்பிடுகிற நான் காணும்படி ஏதேனுமோரிடத்தில் நின்றும் சடக்கெனவோடி வந்து தோன்றக்கூடாதாவென்று மிகுந்த ஆர்த்திதோற்ற வருளிச் செய்கிருர். மாநீர்க் கொண்டல் வருமாகாசத்தில் நின்றும் வந்துதோற்றலாம்; பரமபதத்திலிருக்கிற விருப் போடேவந்து தோற்றலாம்; மண்மீது விபவாவதாரங்கள் பண்ணின திருவயோத்தி திரு வடமதுரை முதலான விடங்களிலிருந்து வந்து தோற்றலாம்; * சீரார்திருவேங்கடமே திருக்கோவலூரே மதிட்கச்சியூரகமே பேரகமேயென்னும்படியான திருப்பதிகளில் நின்றும் வந்து தோற்றலாம்; 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன்' என்னும்படி ஸர்வ பதார்த்தங்களினுள்ளும் கரந்துபரந்துளனை நீ எங்கிருந்தும் புறப்பட்டுத் தோற்ற லாம்; திருவுள்ள முண்டாகில் வழிதானு இல்லை? என் ஸத்தைகிடக்கைக்கு எங்கிருந் தாவது ஒரு நாளாகிலும் வந்து தோற்றவேணும் என்கிருர். ... ... 6

3497 வந்துதோன்ருயன்றேல் உன்வையந்தாயமலரடிக்கீழ் *
முந்திவந்துயான்னிற்ப முகப்பேகூவிப்பணிகொள்ளாய் *
செந்தண்கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு *
அந்தமில்லாக்கதிர்பரப்பி அலர்ந்ததொக்குமம்மானே. 7

செம்தண் கமலம் — சிவந்து குளிர்ந்த தாமரை போன்ற
கண் கை கால் சிவந்த வாய் — கண்களையும் கைகளையும் கால்களையும் சிவந்த வாயையு முடைய
ஓர் கரு நாயிறு — ஒரு கரிய ஸூர்யன்
அந்தம் இல்லா கதிர் பரப்பி — முடிவில்லாத கிரணங்களைப் பரப்பி
அலர்ந்தது ஒக்கும் அம்மானே — பரம்பினுற்போன்ற வடிவழகை யுடைய ஸ்வாமியே!
வந்து தோன்ருய் அன்றேல் — (கீழே விரும்பினபடி) வந்து தோன்ருவிட்டாலும்
வையம்தாய உன் மலர் அடிகீழ் — பூமியையளந்துகொண்ட உனது பாதாரவிந்தங்களின் கீழே
யான் முந்தி வந்து நிற்ப — நான் முற்பட்டு வந்து நிற்கும் படியாக
முகப்பே கூவி பணிகொள்ளாய் — திருமுன்பேயழைத்து அடிமை கொண்டருளவேணும்.

* * *—கீழ்ப்பாட்டில் * தொண்டனேன் உன் கழல் காண வொரு நாள் வந்து தோன்ருய் * என்ருர்; இங்கேற வந்து தோற்றுவது முடியாதென்னில், என்னை அங்கே யழைத்து அடிமை கொள்ளவாவது வேண்டுமென்கிருரிப்பாட்டில். "வந்து தோன்ரு யன்றேல்" என்று ஒரே வாக்கியமாகக் கொள்வதும், "வந்து தோன்ருய், அன்றேல்" என்று பிரித்துக் கொள்வதும் பொருந்தும். கீழ்ப்பாட்டில் பிரார்த்தித்ததையே மறு படியும் பிரார்த்திக்கிருர் வந்து தோன்ருய் என்று. நானிருந்த விடத்தே உன்னைக் கொண்டு வந்து காட்டியருளாய் என்றபடி. அன்றேல்—அது முடியாதாகில்; என் ஆர்த்தியின் கனத்தைப் பார்த்துத் திருவருள் சுரந்து வந்து முகங்காட்டப் பார்த்திலையாகில் என்ற படி. * ஈங்கோர் பெண்பால் பொருளோ வெனுமிகழ்வோ இவற்றின் புறத்தாளென் றெண்ணுே * (திருவிருத்தம்.) என்கிறபடியே உன்னுடைய பெருமையையும் என் னுடைய சிறுமையையும் பார்த்து இங்கு வந்து முகங்காட்டத் திருவுள்ளமில்லையாகிலு மென்னவுமாம். உன் வையந் தாயமலரடிக்கீழ் முந்திவந்து யான்நிற்ப முகப்பே கூவிப் பணி கொள்ளாய்=வஸிஷ்ட சண்டாள விபாகம் பாராத திருவடிகளின் கீழ் அடியேனை வர

வழைத்துக்கொண்டு திருவுள்ளத்திற்கு உகப்பான கைங்கரியத்தை நியமித்துப் பணி கொள்ளாய் என்கிறார். பரதாழ்வானைப் போலே பிரிந்து தரித்திருக்கும் ப்ரக்ருதி யல்லேன்; * முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ * என்ற இளையபெருமாள்படியான வென்னைக் கூவி ஏவி அடிமை கொண்டருளவேணுமென்கிறார்.

இப்படி நிர்ப்பந்திக்கைக்குக் காரணமென்னென்ன; பிரிந்து பிழைக்கமுடியாத வடிவழகு படுத்தும்பாடிது காண் என்கிறார்—பின்னடிகளால். சிவந்து குளிர்ந்த தாமரைபோன்ற திவ்யாவயவங்களையுடையையாய், நீல நிறத்தனான வொரு ஸூர்யன் அளவிறந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு விகஸிதனானுப் போலே யிருக்கிறாயாகை யாலே, நீயாவது இங்கு வரவேணும், என்னையாவது அங்கு அழைத்துக்கொள்ளவேணு மென்று நிர்ப்பந்திக்கிறேன் என்றாராயிற்று. ... ... ... 7

3498 ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்துநாணாளும் *
தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறுந்தொலைவன்நான் *
தக்கவைவர்தமக்காயன்று ஈரைம்பதின்மர்தாள்சாய *
புக்கநல்தேர்த்தனிப்பாகா வாராயிதுவோபொருத்தமே. 8

| | |
|---|---|
| தொக்க மேகம் பல் குழாங்கள் காணும்தோறும் | திரண்ட மேகங்களின் பல திரள்களைக் காண்கிற போதெல்லாம் |
| அம்மான் உருவம் ஒக்கும் என்று | எம்பெருமானுடைய வடிவழகுக்குப் போலியாயிருக்குமென்று |
| உள்ளம் குழைந்து | நெஞ்சுருகி |
| நாள் நாளும் நான் தொலைவன் | நாடோறும் நான் கிலேசப் படுவேன்; |
| அன்று | பாரதப்போர் நடந்த வக்காலத்திலே |
| தக்க ஐவர் தமக்கு ஆய் | உன்னுறவுக்குத் தகுதியான பஞ்ச பாண்டவர்களுக்காக |
| ஈர் ஐம்பதின்மர் | துரியோதனாதிகள் நூற்றுவரும் |
| தாள் சாய | காலற்றுப் போம்படியாக |
| புக்க | சேனையிடையே புகுந்த |
| நல் தேர் தனி பாகா | சிறந்த அத்விதீயனான ஸாரதியானவனே! |
| வாராய் | (அவ்வழகோடே) வருகின்றிலை; |
| பொருத்தம் இதுவோ | அடியார் பக்கலில் பொருந்தியிருந்தபடி இதுவோ? |

* * *—பிரானே! போலிகண்டு வருந்துமவனாய் நானிருக்க, ஆச்ரிதபக்ஷபாதியான நீ வந்து தோன்றுகின்றிலையே, இது உன் ஸ்வபாவத்திற்குச் சேருமோ? என்கிறார். நாமெல்லாரும் நீர் கொண்டெழுந்த நீலமேகத்தைக் கண்டால் 'நன்றாக மழைபெய்யப் போகிறது, நம்முடைய நிலம் இருபோகமும் முப்போகமும் விளையப்போகிறது' என்று இதுவே நினைவாக மகிழ்ந்திடுவோம்; * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றிருக்கிற ஆழ்வார்க்கு இந்த நினைவு உண்டாக ப்ரஸக்தியில்லையே; * பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற காவிமலரென்றுங் காண்டோறும், பாவியேன் மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை யெல்லாம் பிரானுருவே யென்று * (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரப்படியும், * மண்ணையிருந்து துழாவி* யென்கிற பதிகத்தின்படியும் எதையும் பகவதாத்மகமாகவே பார்க்கிறவராகையால் மேகங்களைப் பார்க்கும்போது "ஒக்குமம்மானுருவம்" என்று நினைக்கிறாராயிற்று. அன்னலுந் துன்னலுமான மேகமெங்கே, எம்பெருமானுடைய திருவடிவமெங்கே! இது ஆழ்வார்க்குத் தெரியாததன்றே; ப்ரமிக்கைக்குச் சிறிது காரணம் போதுமன்றோ. [உள்ளங்குழைந்து நாணாளும் தொலைவன் நான்] தோற்புரையேயன்றியே அகவாயும் சிதிலமாய் இடைவிடாமல் கிலேசியாநிற்பேன். நான் உன்னை மறந்திருக்க வொண்ணாதபடி மேகம் உன்னை நிச்சலும் நினைப்பூட்டி மாய்க்கின்றதே! என்செய்வேன்! என்று வருந்துகிறபடி.

இதற்கு என்னை என் செய்யச் சொல்லுகிறீர் என்று எம்பெருமான்னினைவாக; ஆச்ரிதபக்ஷபாதியென்று பேர்பெற்றநீ வந்தாலாகாதோ வென்கிறார். நான் ஆச்ரிதபக்ஷ

பாதியென்பதை நீர் அறிந்தவிதம் எங்ஙனேயென்று அவன் கேட்க, கதை சொல்லுகிறார்—தக்கவைவர்தமக்கா யென்று தொடங்கி. போலிகண்டு இரங்கவறியாத பஞ்சபாண்டவர்களுக்குக் கையாளாயிருந்து நீ செய்த காரியம் ஒருபாரதத்துக்குப் போதுமே; * ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய * என்று, இரண்டு சேனைகளுக்கும் நடுவே தேரைக்கொண்டு நிறுத்து என்றால் அப்படியே செய்தது முதலிய காரியங்கள் ஒன்றிரண்டோ? நூற்றுவரைத் தொலைக்க ஐவர்க்கு அத்தனை செய்தநீ என்னொருவனுக்கு வெறுமனே [ஒரு காரியமுஞ் செய்யாதே] வந்து தோன்றினலாகாதோ வென்கிறார்.

[இதுவோ பொருத்தமே] அடியார்களோடு முன்பு நீ பொருந்திப் போந்தபடி இதுவோ? அடியார்களுக்குத் தூது போயும் சாரதியாய் நின்றும், ஆயுத மெடேனென்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும் இப்படி யெல்லாஞ்செய்து ஆச்ரிதபக்ஷபாதத்தைக் காட்டினுயென்பது பொய்யோ? ரிஷிகளுக்குக் கைக்கூலி கொடுத்து எழுதுவித்துக் கொண்டதோ? என்று கேட்கிறாராயிற்று. ... ... ... 8

3499 இதுவோபொருத்தமின்னாழிப்படையாய் ஏறுமிருஞ்சிறைப்புள் *
அதுவேகொடியாவுயர்த்தானே என்றென்றேங்கியழுதக்கால் *
எதுவேயாகக்கருதுங்கொல் இம்மாஞாலம்பொறைதீர்ப்பான் *
மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்தமாயனே. 9

| | |
|---|---|
| மின் ஆழி படையாய் | ஒலிபொருந்திய திருவாழியைப் படையாக வுடையவனே! |
| ஏறும் இரு சிறைப்புள் அதுவே கொடி ஆ உயர்த்தானே | வாஹனமானவனும் பெரிய சிறகை யுடையவனுமான பெரிய திருவடியையே கொடியாக எடுத்தவனே! |
| இதுவோ பொருத்தம் என்று என்று | இப்படி உபேக்ஷிப்பதோ பொருத்தம் என்று பலகாலுஞ் சொல்லி |
| ஏங்கி அழுதக்கால் | பொருமியழுதால், |
| இ மா ஞாலம் பொறை தீர்ப்பான் | இப்பெரிய நிலவுலகின் பாரத்தைப் போக்குகைக்காக |
| மது வார் சோலை உத்தர மதுரை பிறந்த மாயன் | தேன் வெள்ளமிடா நின்ற சோலைகளையுடைய வடமதுரையிலே பிறந்த மாயப் பெருமான் |
| எதுவே ஆக கருதும் கொல் | என்ன திருவுள்ளம்பற்றி யிருக்கிறபடியோ? |

* * *—ஒருவர்தப்பாமல் எல்லாருடைய ஆர்த்திகளையும் போக்கி ரக்ஷித்தருளுகைக்காக வடமதுரையிலே வந்து திருவவதாரம் பண்ணியருளின ஆச்சர்ய குணசாலியான கண்ணபிரான், தன்னைக் காணவாசைப்பட்டு நோவுபடுகிற வென்திறத்திலே என்ன செய்வதாக நினைத்திருக்கிறானே வென்று தம்முடைய ஹ்ருதயத்துக்குள்ளே தாம் சிந்திக்கிறபடியை வெளியிடுவது இப்பாட்டு. கீழ்ப்பாட்டில் பஞ்சபாண்டவர்களுக்கு உதவினபடியைச் சொல்லிக் கூப்பிட்டார்; அவர்களுக்கு உதவினபடி கிடக்கட்டும்; திருவாழியாழ்வான் பெரிய திருவடி முதலானுரோடு கலந்து பழகுகிற பொருத்தமும் இவ்வளவேயோ என்கிறார் என்னவுமாம்.

இதுவோ பொருத்தம்=இப்படி கூப்பிடச் செய்தேயும் வரக்காணாமையாலே கண்ணுஞ் சுழலையிட்டு மீண்டும் 'இதுவோ பொருத்தம்' என்கிறார். மின்னாழிப்படையாய்!=மேகத்திலே மின்னல் மின்னினாப்போலே மின்னாநின்ற திருவாழிப்படையை யுடையவனே யென்றது-அத்திருவாழியைக் கொண்டு என னுடைய பிரதிபந்தகங்களைப் போக்கலாகாதோ வென்றபடி. அத் திருவாழியாழ்வானோடு பொருந்தி வர்த்திப்பதும் என்னோடு பொருந்தி யிருக்குமளவேயோ? என்கிறாராகவுமாம். ஏறுமிருஞ் சிறைப்புள்ளதுவே கொடியாவுயர்த்தானே!=நீ வந்துசேர நினைத்தால் அருமையுண்டோ? ஒரு நொடிப்பொழுதில் கொண்டு சேர்க்கவல்ல பரிகரமில்லையோ என்றவாறு. * தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ் தே விதாநம் வ்யஜநம் * என்று ஸ்தோத்ரரத்னத்தி லருளிச்செய்தபடியே பெரிய திருவடிபக்கலில் பல வகையடிமைகளையுங் கொள்வதாகச் சொல்லப்படு

வதும் இப்படிதானே? என்னோடு எவ்வளவு பொருத்தமோ அவ்வளவு பொருத்தந் தானே அவனோடும்? என்று கேட்கிறபடியாகவுமாம். என்றேன்றேங்கி யழுதக்கால் எதுவேயாகக் கருதுங்கோல்=இப்படிச் சொல்லிச் சொல்லிப் பொருமியழுதால் இக்கூப்பீட்டுக்கு முகங்காட்ட நினைக்கிறானோ? இப்படியே கூப்பிட்டுக்கொண்டு கிடக்கட்டு மென்றிருக்கிறானோ? [இம்மானுலம் இத்யாதி.] மண்ணின் பாரம் நீக்குதல் என்றொரு வியாஜமிட்டு இங்கே வந்துபிறந்து ஸாதுபரித்ராணம் பண்ணிப் போருகிறவன் நம்கூப்பீட்டுக்கு என்ன நினைத்திருக்கிறானோ வென்கிறார். மாயனே! என்றவிடத்து ஏகாரம் விளியுருபன்று, ஈற்றசை. ... ... ... ... ... 9

3500 பிறந்தமாயாபாரதம்பொருதமாயா நீயின்னே *
சிறந்தகால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே *
கறந்தபாலுள்நெய்யேபோல் இவற்றுளெங்கும்கண்டுகோள் *
இறந்துநின்றபெருமாயா உன்னையெங்கேகாண்கேனே. 10

| | |
|---|---|
| பிறந்த மாயா | அவதாரங்களைச் செய்தருளும் மாயனே! |
| பாரதம் பொருத மாயா | பாரதப்போர் புரிகையில் பல ஆச்சரியங்களைக் காட்டினவனே! |
| நீ இன்னே | நீ இப்படி எளியனாயிருக்கச் செய்தே |
| சிறந்த கால் தீ நீர் வான் மண் பிறவும் ஆய பெருமானே | சிறந்த பஞ்ச பூதங்களையும் அந்த பூதங்களில் நின்று முண்டான பதார்த்தங்களையும் சரீரமாகவுடைய ஸர்வாதிகனாய் |
| கறந்த பாலுள் நெய்யேபோல் | கறந்த பாலினுள்ளே நெய் போலே |
| கண்டுகோள் இறந்து | கண்டு கொள்ளுதல் இல்லாதபடி |
| இவற்றுள் எங்கும் நின்ற பெரு மாயா | மேலே சொன்ன வஸ்துக்களெல்லாவற்றிலும் உறைகின்ற ஆச்சர்ய பூதனே! |
| உன்னை எங்கே காண்கேன் | உன்னை எவ்விடத்திலே காணக்கடவேன்?. |

* * *—எம்பெருமானே! நீ அவதாரங்கள் பண்ணி ஸௌலப்யத்தைக் காட்டி நிற்கச் செய்தேயும் அக்காலத்திற்குப் பிற்பட்டேன்; பொருள்தோறும் வியாபித்து நின்றாயாகிலும் அந்தர்யாமியைக்காண அசக்தனாயிராநின்றேன்; பின்னை எங்கே காணக்கடவேனென்கிறார். பிறந்தமாயா!—பிறக்கையாகிற மாயத்தைச் செய்தவனே! என்றபடி. பிறவாதவனென்றிருக்கச் செய்தேயும் கர்மவச்யர்களைப் போலேவந்து பிறப்பதும், எல்லாரும் தன்னைக்கண்டு அஞ்சி யொளிக்க வேண்டியிருக்க, தான் கம்ஸாதிகளுக்கும் அஞ்சி யொளிக்கையுமாகிற இவை * மாயமென்ன மாயமே * என்று வியக்கத்தக்க மாயமன்றோ. பாரதம் பொருதமாயா!=பிறந்த ஆச்சரியம்போலவே பாரத யுத்தம் நடத்திவைத்ததும் ஒரு ஆச்சரிய மென்கிறார்; ஸத்யப்ரதிஜ்ஞனைதான் அஸத்ய ப்ரதிஜ்ஞனை ஆச்சரியம். ஆயுதமெடே னென்று ஆயுதமெடுக்கையும் பகலை இரவாக்குகையும எதிரிகளின் உயிர் நிலையைக் காட்டிக் கொடுக்கையும் முதலான ஆச்சரியங்களை நினைப்பது. நீயின்னே என்றது—நீ இப்படி ஸுலபனாயிருக்கச் செய்தே என்றபடி. சிறந்தகால் தீ நீர்வான் மண் பிறவுமாய பெருமானே!=பிறந்து கண்ணுக்குப் புலப்படுகிறவனாயிருக்கச் செய்தேயும் பஞ்சபூதங்கள் முதலியவற்றில் அநுப்ரவேசித்திருந்து கண்ணுக்குப் புலப்படாமலு மிருப்பவனே! என்றபடி. கண்ணுக்குப் புலப்படாதிருக்கும் போது அவற்றினுள்ளே யிருக்கிறானென்று எப்படி தெரிந்து கொள்ளவதென்ன, அதற்கொரு த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் கறந்தபாலுள் நெய்யேபோல் என்று. *க்ருதமிவ பயஸி நிகூடம்* என்று ப்ரஹ்மவிதுபநிஷத்தில் கூறியதையடியொற்றி யருளிச்செய்தபடி. பாலைக்கடைந்து வெண்ணெயாக்கி நெய்யாக்குகிறோம்; பாலில் இல்லாத வஸ்து அபூர்வமாக உண்டாய்விட மாட்டாதன்றோ; நெய்யும் பாலினுள்ளே யிருக்கச் செய்தே அது கறந்தபாலில் நமக்குத் தெரியாமலன்றோ இருக்கிறது. அதுபோல வென்க.

மூன்றுமடியின் முடிவில் " கண்டுகொள் " என்றல்ல ; ' கண்டுகோள் ' என்றே வேணும். " பனிக்கடலிற் பள்ளிகோளை " என்றவிடத்து ' பள்ளிகோள் ' என்ற போன்றதாமிது. கீழே ஐந்தாம்பத்தில் (5—2—7) * நிறுத்தி நும் முள்ளத்துக்கொ ளுந் தெய்வங்களுமுமை யுய்யக் கோள்* என்றவிடமும் இத்திறத்ததே. கண்டுகோ இறந்து நின்ற—கண்டு கொள்ளுதல் இல்லாமலிருக்கின்றனென்றபடி. உன்னையெங்கே கான் கேனே—கண்ணாலே காண்கிற பாலினுள்ளே நெய்யுண்டா யிருக்கக் காணவரிதானு போலே ஸகல பதார்த்தங்களினுள்ளு மிருந்துவைத்தும் காணவொண்ணாதபடி நிற்கி ஆச்சர்யபூதனே ! உன்னை எங்கே காணக்கடவேன் ? பரமபதத்தில் காண்பதற்கு இந் சரீரஸம்பந்தம் குலையவேணும் ; ஸ்ரீராம க்ருஷ்ணாதியவதாரங்களுக்கோ பிற்பட்டவ னேன் ; அர்ச்சாவதாரமோ நான் நினைக்கிறபடி பேசவும் தழுவவும் யோக்யதையற்றது அந்தர்யாமித்வம் கண்ணுக்கு இலக்காகாதது ; இனி இழவோடே முடிந்து போக வேண்டியதேயோ நான் ? என்றாராயிற்று. ... ... ... 10

3501 எங்கேகாண்கேனீன்துழாயம்மான்தன்னை யானேன்றேன்று *
அங்கேதாழ்ந்தசொற்களால் அந்தண்குருகூர்ச்சடகோபன் *
செங்கேழ்சொன்னவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
இங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே. 11

| | | | |
|---|---|---|---|
| ஈன் துழாய் அம்மான் தன்னை | பரமபோக்யமான திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேச்வரனை | செம் கேழ் சொன்ன ஆயிரத்துள் | மிகவும் செவ்விதாகச் சொன்ன ஆயிரத்தினுள்ளே |
| யான் எங்கே காண்கேன் என்று என்று | நான் எங்கே காணக் கடவேனென்று பலகாலுஞ் சொல்லி | இவையும் பத்தும் வல்லார்கள் | இவைபத்தையும் ஓத வல்லவர்கள் |
| அங்கே தாழ்ந்த சொற்களால் | அவ்விஷயத்திலேயே ப்ரவணமான சொற்களினாலே | இங்கே காண | இந்நிலத்தே எல்லாரும் காணும்படி |
| அம் தண் குருகூர் சடகோபன் | ஆழ்வார் | இப் பிறப்பே | இந்த ஜன்மத்திலேயே |
| | | எல்லியும் காலை மகிழ்வர் | இரவும் பகலும் இடைவீடின்றி மகிழ்ந்திருக்கப் பெறுவர்கள். |

* * *—இத்திருவாய்மொழிவல்லார் தாம்பட்ட துக்கம்படாதே இவ்வுலகில் இப் பிறப்பிலே எம்பெருமானைப் பெற்று நிரந்தரமாக இன்புறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். ஸர்வேச்வரனென்னுமத்தை நிலைநாட்டவல்ல திருத்துழாய் மாலையையுடைய எம்பெருமானைக் கண்டல்லது தரிக்கமாட்டாதபடி சபலனான நான் எங்கே காணக்கடவேனென்று பலகாலுஞ் சொல்லி, தோளும் தோள்மாலையுமான வழகிலும் மேன்மையிலும் ஈடுபட்ட சொற்களாலே ஆழ்வாரருளிச் செய்ததாய் மன மொழி மெய்கள் ஒருங்கேநின்று சொன்னதான ஆயிரத்தினுள்ளும் இப்பத்தையும் ஓதவல்லவர்கள் இஹலோகத்திலே இந்த ஜன்மத்திலே பகலுமிரவும் படிந்து குடைந்து பகவதநுபவம் பண்ணிக் களிக்கப் பெறுவர்கள். " ஆளக்கூப்பிட்டழைத்தக்கால் " என்று ஆழ்வார் கூப்பிடச்செய்தேயும் வந்து முகங்காட்டாத குற்றத்தை இப்பதிகங் கற்பாரிடத்திலே எம்பெருமான் தீர்த்துக் கொள்வனும்; இவர்களுக்குச் சடக்கெனவந்து முகங்காட்டுவனென்க. ... ... ... ... ... 11

எட்டாம்பத்து ஐந்தாந்திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஆறாந்திருவாய்மொழி—எல்லியுங்காலையும்.

உரையவதாரிகை :—கீழே * மாயக்கூத்தா வென்கிற பதிகத்திலே ஆழ்வார்க்குண்டான விடாய் பேச்சுக்குநிலமன்று என்று நினைப்போம் நாம்; உண்மையில், ஆழ்வார் விஷயத்தில் எம்பெருமானுக்குண்டான விடாய்தான் அபரிமிதமானது. ‘இப்படி கூப்பிடுகிற ஆழ்வார்க்கு உதவப் பெற்றிலோமே!’ என்று மிகவும் தபித்து ஆகுலனாய் லஜ்ஜையுமுடையனாய் இனிநாம் என்ன செய்வதென்று ஆலோசித்தான்; ‘உடனே சென்று நாம் கடுக முகங்காட்டினோமாகில் ஆழ்வார் ஸந்தோஷாதிசயத்தாலே உடலுமுயிருமுக்கி சிதிலராய்ப்போவர்; ஆகவே ஸந்தோஷத்தைப் பொறுப்பித்து உளராக்கிப் பரிமாறவேணும்’ என்று துணிந்து, பதினாலாண்டு பிரிவாலே நொந்த பரதாழ்வானைத் தரிப்பித்து முகங்காட்டுகைக்காகத் திருவடியை முன்னே செல்லவிட்டுத் தான் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமத்திலே யிருந்தாப் போலவும், பாண்டவர்களுக்காகத் தூது போகிறபோது ப்ரேமபரவசர்களான விதுரர் முதலானோருடைய ப்ரீதியை ஸாத்மிப்பிக்கைக்காக * குசஸ்தலே நிவஸதி ஸச ப்ராதரிஹேஷ்யதி * என்றபடியே குசஸ்தலத்திலே தங்கியிருந்து மறுநாள் ஹஸ்திநபுரத்திலே யெழுந்தருளினாப் போலவும், ஆழ்வார்தம்மோடே ஸம்ச்லேஷிக்க விரும்பிய ஸர்வேச்வரன் தம்முடைய ப்ரீதியை ஸாத்மிப்பித்துத் தம்மோடே கலக்கைக்காகத் திருக்கடித்தான மென்னும் மலைநாட்டுத் திருப்பதியிலே யெழுந்தருளி யிருந்தான்; இதனையறிந்த ஆழ்வார் இப்படியாக எம்பெருமான் தம் பக்கலில் பண்ணுகிற வ்யாமோஹத்தை அநுஸந்தித்து இனியராய் அத்தைப் பேசியநுபவிக்கிறார் இத்திருவாய்மொழியில். ... ... ... ... *

3502 எல்லியுங்காலையும் தன்னைநினைந்தெழ * நல்லவருள்கள் நமக்கேதந்தருள்செய்வான் *
அல்லியந்தண்ணந்துழாய்முடி அப்பனூர் * செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமே. 1

| | | | |
|---|---|---|---|
| எல்லியும் காலையும் தன்னை நினைந்து எழ | இரவும் பகலும் உபகாரகனான தன்னையே நினைந்து உஜ்ஜீவிக்கும்படியாக | அல்லி அம் தண் அம் துழாய் முடி | பூந்தாரை யுடைத்தாய் அழகிய குளிர்ந்த திருத்துழாயணிந்த திருமுடியை யுடையனான |
| நல்ல அருள்கள் | பரம க்ருபைகளை | அப்பன் | எம்பெருமானுடைய |
| நமக்கே தந்து | நமக்கே அஸாதாரணமாகச் செய்து | ஊர் | திவ்ய தேசம் (எது வென்னில்;) |
| அருள் செய்வான் | அனுக்கிரஹம் செய்வானாய் | செல்வர்கள் வாழும் திருக்கடித்தானம் | பகவத் கைங்கர்ய ஸம்பந்நர்கள் வாழப்பெற்ற திருக்கடித்தானமாகும். |

* * *—என்னுடைய ஆர்த்தியைத் தீர்த்தருள்பவன் ஸர்வேச்வரனே; அவனூர் திருக்கடித்தானம் என்கிறார். ஐயோ! எம்பெருமானுடைய அருளை என்ன சொல்லுவேன்! பகலென்றும் இரவென்றும் பாராமல் எக்காலத்திலும் தன்னையே நினைத்து உஜ்ஜீவிக்கும்படி செய்து போருமிவ்வருளை என் சொல்லவல்லேனென்வாய் கொண்டே யென்று தணறுகிறார். என்னுடைய குற்றங்களைப் பார்த்தானாகில் அவன் அருளுகைக்கு ப்ரஸக்தியுண்டோ? நான் அகிஞ்சநன் என்று என்னுடைய வெறுமையையே பார்த்துத் தன்பேறாக அருளுமிவ்வருள் என்னோவென்கிறார். கீழே * மாயக்கூத்தன் பதிகத்திலே தாம்பட்ட வ்யஸனத்திற்காக அருள் செய்கிறானென்று நினைக்கின்றிலர்; தன்பேறாக அருள் செய்வதாகவே நினைக்கிறார். உண்மையில் இப்படித்தானே நினைக்கவேண்டும். இதுவுமன்றி, இப்படிப்பட்டவருள் வேறொருவர்க்குமன்றிக்கே தம்மொருவர்க்கே செய்வதாகவும் காட்டுகிறார் நமக்கேதந்தருள் செய்வான் என்று. தாம்பெற்றபேறு நித்யஸூரிகளும் பெற்றிலர் என்பதே ஆழ்வாருடைய திருவுள்ளம்.

கீழ்த் திருவாய்மொழியில் * மொய்பூந்தாமத் தண்டுழாய்க் கடிசேர்கண்ணிப் பெருமானே! * என்று இவர் ஆசைப்பட்டபடியே காட்டிக் கொடுத்தருளினதைப்

பேசுகிருர் அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பன் என்று. இப்படிப்பட்ட மஹோபகாரகன்
எழுந்தருளியிருக்குமிடமாகையாலே நமக்கு உத்தேச்ய ஸ்தலம் திருக்கடித்தானம் என்
கிருர். செல்வர்கள் வாழும்—தனிகர்கள் வாழுமிடம் என்கிறதன்று ; நிரந்தரபகவதநுபவ
மேயாய்க் காலங்கழிக்கையே செல்வமாம் ; இளையபெருமாளை யொத்தவர்கள் வாழு
மிடம் என்றபடி. ... ... ... ... ... 1

திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும் * ஒருக்கடுத்துள்ளே உறையும்பிரான்கண்டீர் *
செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை * உருக்கெட வாளிபொழிந்தவொருவனே. 2

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன் பொரு காலத்தில் | திருக்கடித்தானமும் என்னுடை சிந்தையும் | திருக்கடித்தானப்பதியையும் எனது நெஞ்சையும் |
| செரு கடுத்து | யுத்தத்திலே செருக்கு விஞ்சி | ஒருக்கடுத்து | ஒருசேரப்பிடித்து |
| திகைத்த அரக்கரை | ஆரைச் சண்டைக்கிழுக்கலாமென்று திகைத்திருந்த ராக்ஷஸர்கள் | உள்ளே உறையும் பிரான் | இரண்டினுள்ளும் வர்த்திக்கிற பெருமான். |
| உரு கெட | உருவம் கெடும்படியாக | | |
| வாளி பொழிந்த ஒருவன் கண்டீர் | அம்புகளைப் பொழிந்த மஹாவீரனன்றோ | | |

* * *—என்னிடத்தே வருகைக்கு இடையூறு யுள்ளவற்றையும் தானே தவிர்த்து,
திருக்கடித்தானத்திலும் என்னுடைய ஹ்ருதயத்திலும் ஒருங்கே அபிநிவேசத்தைப்
பண்ணி என்னுள்ளே யெழுந்தருளியிரா நின்ருனென்கிருர். திருக்கடித்தானப்பதி
யையும் இவருடைய திருவுள்ளத்தையும் ஒக்க நினைக்கையாவது என்னென்னில் ;
ஸ்ரீவசந பூஷணத்தில்—(171.) "அங்குத்தைவாஸம் ஸாதநம், இங்குத்தை வாஸம்
ஸாத்யம். * கல்லுங் கனைகடலு மென்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றில் ஆதரம்
மட்டமாயிருக்கும். * இளங்கோயில் கைவிடேலென்று இவன் ப்ரார்த்திக்கவேண்டும்
படியா யிருக்கும். ப்ராப்யப்ரீதி விஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பு அவை
அபிமதங்களாயிருக்கும்" என்றருளிச் செய்யப் படுகிறது. இந்த ஸ்ரீஸூக்திகளின்
கருத்தாவது—திவ்யதேசங்களிற் காட்டிலும் ஞானிகளின் திருமேனியில் எம்பெருமான்
பண்ணும் ஆதரம் அளவற்றது ; எம்பெருமான் திவ்ய தேசங்களில் எழுந்தருளி
யிருப்பதானது தக்கவுபாயங்களாலே சேதநரை அகப்படுத்திக்கொள்ளுகைக்காகவாகை
யாலே அந்த திவ்ய தேச வாஸம் ஸாதனம் ; இந்த சேதநன் திருந்தி இவனுடைய
ஹ்ருதயத்தினுள்ளே தான் வஸிக்கப்பெற்றவது அத்திவ்யதேச வாஸமாகிற க்ருஷியின்
பயனாகையாலே ஞானிகளிடத்தில் வாஸமே எம்பெருமானுக்குப் பரமப்ரயோஜனம்.
* மலைமேல் தான்னின்று என்மனத்துளிருந்தானை * என்றும், * பனிக்கடலில் பள்ளி
கோளைப் பழக விட்டோடிவந்து என் மனக்கடலில் வாழவல்ல மாய மணாளநம்பி *
என்றுமுள்ள பாசுரங்களினால் இவற்றின் ஸாதந ஸாத்யத்வங்கள் நன்கு விளங்கும்.
ஆழ்வார்போல்வாருடைய உள்ளத்திலே எம்பெருமானுக்கு வாஸம் ஸித்தித்துவிட்டால்
திருப்பாற்கடல் பரமபதம் முதலான விடங்களில் அவனுக்கு ஆதரம் மட்டமாம்
என்பது * கல்லுங் கனைகடலும் வைகுந்த வானாடும் புல்லென்றொழிந்தன கொல்
ஏபாவம், வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான் அடியேனதுள்ளத்
தகம் * என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தினால் விளங்கும். எம்பெருமான் புராதன
திவ்ய தேசங்களில் நெடுநாளாகப் பண்ணிக் கொண்டிருந்த ஆதரத்தைக் குலைத்துக்
கொண்டு இன்று தன் ஹ்ருதயத்திலே அளவுகடந்த ஆதரத்தைப் பண்ணிக்கொண்
டிருக்கும்படியைக் காணும் ஞானியானவன் "பிரானே ! என்னுள்ளத்தினுள் புகுரு
கைக்கு பாலாலயம் போன்றிருந்த திருப்பாற்கடல் முதலியவற்றில் ஆதரத்தைக்
குறைத்துக் கொள்ளக்கூடாது" என்று எம்பெருமானை நோக்கிப் பிரார்த்திக்க
வேண்டும்படியாகும். பரமபதம் திருப்பாற்கடல் அர்ச்சாவதாரங்கள் முதலிய ஸ்தானங்
களிற் காட்டிலும் ஞானிகளின் ஹ்ருதயமே எம்பெருமானுக்குப் பரமபுருஷார்த்தமாகில்,
பரமபதம் முதலியவற்றை எம்பெருமான் விட்டுவிட வேண்டாவோ ? அப்படி விட்டு

விட்டதாகத் தெரியவில்லையே; அவற்றிலும் உகந்து வர்த்திப்பதாகத் தெரிகிறதே; இதற்கு ஹேதுவென்? என்னில்; எம்பெருமான் தனக்கு ப்ராப்யபூதரான ஞானிகள் அந்த ஸ்தலங்களிலே போரவுகப்புக் கொண்டிருப்பதனாலே அவர்களுகந்த ஸ்தலம் நமக்கு முத்தேச்யமாகவேணும் என்கிற எண்ணத்தினாலும், 'இத்தேசங்களில் நாம் வாஸம் செய்தபடியாலன்றோ நமக்கு ஞானிகளின் ஹ்ருதயத்தில் வாஸமாகிற மஹத்தான லாபம் கிடைத்தது' என்கிற நன்றியுணர்ச்சியினாலும் எம்பெருமானுக்கு திவ்ய தேசவாஸமும் அபிமதமாகின்றது—என்பதாம். ஆகவே திருக்கடித்தானப் பதியையும் தம்முடைய உள்ளத்தையும் ஒக்க நினைத்துப் பரிமாறுவதாக இங்கு அருளிச் செய்யப் பட்டதென்க.

தம்முடைய உள்ளத்திலே எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுவதற்கு இடையூறாக இதுவரையில் இருந்த விரோதிகள் அரக்கர்பட்டது பட்டமையைத் தெரிவிப்பன பின்னடிகள். சக்ரவர்த்தி திருமகனை வெல்லலாமென்று நினைத்த மதிகேடரான ராக்ஷஸரைத் தாழாதே சார்ங்க முதைத்த சரமழைகளினாலே பொடிபடுத்தின மஹாவீரன் என்னுள்ளத்துள்ளே யுறைகின்றானென்றாராயிற்று. ... ... 2

3504 ஒருவரிருவரோர் மூவரெனநின்று * உருவுகரந்து உள்ளுந்தோறுந்தித்திப்பான் *
திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை * மருவியுறைகின்ற மாயப்பிரானே. 3

ஒருவர் இருவர் ஓர் மூவர் என நின்று { (இலங்கையில் மூல பலத்தை முடிக்குமிடத்து) முதலில் ஒருவனாய்; பின்பு இருவராய், பின்னையும் மூவராய்த் தோன்றி நின்று (பின்னையும்)

உருவு கரந்து { ரூபம் இலக்குக் குறிக்கவொண்ணாதபடி இந்திரியத்திற்கு அவிஷயமாகி

செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை உருக்கெட வாளி பொழிந்த வொருவன்—;

திரு அமர் மார்வன் { லக்ஷ்மியைத் திருமார்பிலேயுடையனைக் கொண்டு

திருக்கடித்தானத்தை மருவி உறைகின்ற மாயப்பிரான் { திருக்கடித்தானத்தே பொருந்தி நித்யவாஸம் பண்ணுகிற ஆச்சர்ய சீலனான எம்பெருமான்

உள்ளுந்தோறுந் தித்திப்பான் { நினைக்குந்தோறும் இனியனாகா நின்றான்.

* * *—இப்பாட்டு தனிப்பட அந்வயிக்கமாட்டாது; கீழிரண்டாம் பாட்டுக்கு சேஷபூதமாகியே அந்வயிக்கும். அப்பாட்டின் பின்னடிகள் "செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை உருக்கெட வாளிபொழிந்த வொருவனே" என்றுள்ளது. அப்படி வாளிபொழிந்த காலத்தில் சக்ரவர்த்தி திருமகனார் இருந்தவிதம் இப்படிப்பட்டதென்கிறது இப்பாட்டில். "வாளிபொழிந்தபடி எங்ஙனே யென்ன இங்ஙனே யென்கிறார்" என்பது ஈட்டு அவதாரிகை.

ஒருவரிருவரோர் மூவரென நின்று உருவு கரந்து=ஸ்ரீ ராமாயண யுத்தகாண்டத்தில் (ஸர்க்கம்—94.) மூல பல வதம் சொல்லுமிடத்து இந்த நிலை தெறிவிக்கப்பட்டுள்ளது. பெருமாள் காந்தர்வாஸ்த்ர ப்ரயோகம் பண்ணின வளவிலே (ச்லோ—26.)* நதே தத்ருசிரே ராமம் தஹந்த மரிவாஹிநீம், மோஹிதா: பரமாஸ்த்ரேண காந்தர்வேண மஹாத்மநா.* என்று அரக்கர்கள் இராமனை அடியோடு காணவில்லையென்று முதலிலே சொல்லிற்று. உடனே *தே து ராமஸஹஸ்ராணி ரணே பச்யந்தி ராக்ஷஸா: * என்று ஆயிரம் ஸ்ரீராமமூர்த்திகளைக் கண்டதாகச் சொல்லிற்று. உடனே *புந: பச்யந்தி காகுத்ஸ்தம் ஏகமேவ மஹாஹவே* என்று ஒரு ராமமூர்த்தியையே கண்டதாகச் சொல்லிற்று.

இங்கு இருபத்திநாலாயிரப்படி வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகள் காண்மின்;— "ஒருவரிருவரோர் மூவரென நின்று உருவுகரந்து உருக்கெட வாளிபொழிந்த வொருவன் என்று கீழோடே அந்விதமாகக் கடவது. மூல பலம் சாகும்படி அருளுகிறவன்று முந்துறவொருவனாய்த் தோற்றி, சாரிகையில் வேகம் மிகமிக இருவரும் மூவரு

மாய்த் தோற்றி, வேகம் மிக்கவாறே இந்த்ரிய ஸம்யோகத்துக்கு இடமில்லாதபடியா
கையாலே ரூபக்ரஹணம் அரிதாய்—உருக்கெட வாளிபொழிந்த வொருவன் என்று
அங்வயம்.”

[திருமவர் மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்ற மாயப்பிரான் உள்ளுந்தோறும்
தித்திப்பான்.] பெரிய பிராட்டியாரோடு கூடியிருக்கச் சேய்தேயும் அவளைவிட்டு அவள்
பரிகரமான என்னிடத்திலே ப்ராவண்யங்கொண்ட பெருமான் நானுகந்தவிடமென்று
திருக்கடித்தானப் பதியை யுகந்து எனக்குப் பரமபோக்யனுயிரா நின்றுனென்கை. 3

3505 மாயப்பிரான் எனவல்வினைமாய்ந்தற * நேசத்தினல் நெஞ்சநாடுகுடிகொண்டான் *
தேசத்தமரர் திருக்கடித்தானத்தை * வாசப்பொழில்மன்னு கோயில்கோண்டானே. 4

தேசம் அமரர் — தேஜஸ்விகளான நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யமாய்

வாசம் பொழில் மன்னு — பரிமளம் மிக்க பொழில்கள் சேர்ந்ததான

திருக்கடித்தானத்தை — திருக்கடித்தானமென்னும் தலத்தை

கோயில் கொண்டான் மாயப்பிரான் — கோயிலாகக் கொண்டவனை எம்பெருமான்

என வல் வினை மாய்ந்து அற — என்னுடைய வலிய கருமங்கள் ஒழிந்து போம்படியாக

நேசத்தினல் — அன்புடனே

நெஞ்சம் நாடு குடி கொண்டான் — என்னெஞ்சாகிற நாட்டைத் தனக்குக் குடியிருப்பாகக் கொண்டான்.

* * *—எம்பெருமான் திருக்கடித்தானத்தைப் பகலிருக்கை மாத்திரமாகக்
கொண்டு என்னெஞ்சை நிரந்தரவாஸஸ்தானமாகக் கொண்டருளினனென்கிறார். ஆச்
சரியமான குணசேஷ்டிதங்களையுடைய பெருமான் தன்னைப்பிரிந்து நான் பட்ட க்லேச
மெல்லாம் தீரும்படி, (அதாவது) கீழ் * மாயக்கூத்தாவென்கிற பதிகத்தில் * காண
வராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்துபட்ட விடாயெல்லாம் தொலையும்படி
என்னுடைய நெஞ்சமாகிற நாட்டிலே குடிகொண்டான்—நித்யவாஸம் பண்ணுகின்
றுன்; நானுகந்த விடமென்று திருக்கடித்தானத்தையும் கோயில்கொண்டிராநின்றுன்.
திவ்யதேசங்களில் பகலுமிரவும் பூர்த்தியாக ஸேவை தந்தருளாமையாலே பகலில் மாத்
திரமே அங்கு வாஸமென்னவேண்டியிருந்தது. என்னெஞ்சில் அப்படியன்றிக்கே நிரந்
தரவாஸமுள்ளது.

நெஞ்சநாடு=சோழநாடு தொண்டைநாடு பாண்டி நாடு மலைநாடு தென்னுடு வட
நாடு என்கிறாப்போலே நெஞ்சநாடென்றும் ஒரு நாடு உண்டாயிற்றுப்போலும். இங்கு
ஈடு:— “ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஒரு த்ரிபாத்விபூதியாக்கினுயிற்று இவர்
திருவுள்ளத்தை.” மூன்றுமடியில் தேசம்—தேஜஸ் என்னும் வடசொல் விகாரம். 4

3506 கோயில்கோண்டான் தன்திருக்கடித்தானத்தை *
கோயில்கோண்டான் அதனோடு மேன்னேஞ்சகம் *
கோயில்கோள் தேய்வமேல்லாந்தோழ * வைகுந்தம்
கோயில்கோண்ட குடக்கூத்தவம்மானே. 5

கோயில் கொள் தெய்வம் எல்லாம் தொழ — தங்களுக்கென்று விமானங்களையுடையரான நித்ய ஸூரிகளெல்லாரும் தொழும்படியாக,

வைகுந்தம் கோயில் கொண்ட — ஸ்ரீ வைகுண்டத்தை வாஸஸ்தானமாக வுடையனாய்

குடக் கூத்த அம்மான் — (அவதரித்தவிடத்தே) குடக்கூத்தாடும் பெருமானானவன்

திருக்கடித்தானத்தை தன் கோயில் கொண்டான் — என்னெஞ்சையும் தனக்குக் கோயிலாக ஸ்வீகரித்துக் கொண்டவனாய்

அதனோடும் என் நெஞ்சகம் கோயில் கொண்டான் — அது தன்னோடே என்னெஞ்சையும் தனக்குக் கோயிலாகக் கொண்டான்.

* * *—என்பக்கலிலுண்டான ப்ரேமாதிசயத்தாலே திருக்கடித்தானத் திருப்பதியோடே கூடவந்து என் ஹ்ருதயத்திலே புகுந்தருளினனென்கிறார். திருக்கடித்தானத்தைத் தனக்கு அஸாதாரணமான கோயிலாகக் கொண்டவன் ஆழ்வார்நெஞ்சினுள்ளே வந்து புகவிரும்பினன்; அப்போது திருக்கடித்தானத்தைவிட்டுத் தான்மாத்திரமே வந்து புகுவதாக முதலில் நினைத்தானும்; அப்படியாகில் [1]செருப்புவைத்துத் திருவடி தொழுவாரைப போலேயாகுமென்று தோன்றிற்றும். அப்படியாகவொண்ணாதென்று அத்திருப்பதியையுங் கூட்டிக்கொண்டு வந்து புகுந்தானும். * அரவத் தமளியினோடு மழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையுந்தானும் அகம்படிவந்து புகுந்து, பரவைத் திரைபலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானை * என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கே அநுஸந்திக்கத்தக்கது. திருக்கடித்தானத்தோடு மாத்திரமே வந்தானல்லன்; ஸ்ரீ வைகுண்டத்து வைபவங்களோடும் க்ருஷ்ணாவதாரவைபவங்களோடுங் கூடிவந்து புகுந்தா னென்கிறார் பின்னடிகளில்.

"தெய்வமெல்லாந் தொழ வைகுந்தங் கோயில்கொண்ட" என்றதும். "குடக்கூத்தவம்மான்" என்றதும் ஸாபிப்ராயம். நித்யஸூரிகளோடுகூட வைகுந்தத்தையுங் கூட்டிக்கொண்டுவந்தான்; குடக்கூத்து முதலான அவதார சேஷ்டிதங்களுக்குக் கருவியாயுள்ளவற்றையும் கையிலே கொண்டுவந்தான் என்பது உட்கருத்து. ... 5

3507 கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவும் * மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை *
பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை * ஏத்தநில்லா குறிக்கொண்மினிடரே. 6

| | | | |
|---|---|---|---|
| கூத்த அம்மான் | மநோஹாரி சேஷ்டிதங்களையுடைய ஸர்வேச்வரனாய் | உறை | எழுந்தருளியிருக்குமிடமாய் |
| கொடியேன் இடர் முற்றவும் மாய்த்த அம்மான் | பாவியேனுடைய துக்கங்களையெல்லாம் போக்கின ஸ்வாமியாய் | பூத்த பொழில் | பூத்த சோலைகளையுடைத்தான |
| மதுசூதஅம்மான் | மதுஸூதனப்பெருமானானவன் | தண் திருக்கடித்தானத்தை | குளிர்ந்த திருக்கடித்தானப் பதியை |
| | | ஏத்த | துதித்த வளவிலே |
| | | இடர் நில்லா | துக்கங்கள் நிலைகுலைந்துபோம்; |
| | | குறிக்கொண்மின் | இதைத்திண்ணமாக அறிமின். |

* * *—திருக்கடிதத்தானத் தோடும் எம்பெருமான் தம் திருவுள்ளத்திலே புகுந்தானென்றவாறே அத்திருப்பதியானது ஆழ்வார் திருவுள்ளத்திலே அந்தர்த்தானமாகிவிட்டதென்றும் தனியே அத்திருப்பதி கிடையாதென்றும் சிலர் நினைக்கக் கூடுமாதலால் அந்த நினைவு நீங்குமாறு, திருக்கடித்தானத்தை எல்லோரும் ஆச்ரயியுங்கோளென்கிறார். "ப்ராப்ய ப்ரீதி விஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பு அவை அபிமதங்களாயிருக்கும்" என்கிற ஸ்ரீ வசநபூஷண திவ்ய ஸூக்தியின்படியே எம்பெருமானுக்கு திவ்ய தேசாபிமானமும் குறையற்றதேயன்றோ. ... ... 6

3508 கொண்மினிடர்கெட உள்ளத்துக்கோவிந்தன் *
மண்விண்முழுதும் அளந்தவொண்டாமரை *
மண்ணவர்தாந்தொழ வானவர்தாம்வந்து *
நண்ணுதிருக்கடித்தானநகரே. 7

| | | | |
|---|---|---|---|
| கோவிந்தன் | கோவிந்தனான பெருமானுடைய | வானவர் தாம் வந்து நண்ணு | பரமபதத்திலுள்ளார் தாங்களும் (சீலகுணநுபவம் பண்ண) வந்துசேருமிடமான |
| மண் விண் முழுதும் அளந்த ஒண் தாமரை | மண்ணுலகையும் விண்ணுலகையும் ஒன்றொழியாமல் அளந்துகொண்ட அழகிய திருவடித்தாமரைகளை | திருக்கடித்தானம் நகர் | திருக்கடித்தானப்பதியை |
| | | இடர் கெட | துக்கமெல்லாம் தொலைய |
| மண்ணவர் தாம் தொழ | இந்நிலத்திலுள்ளார் தொழாநிற்க, | உள்ளத்து கொண்மின் | நெஞ்சிலே கொண்டு சிந்தியுங்கோள். |

1. பாதரக்ஷையுடன் கோயிலுக்குச் சென்ற வொருவர் பாதரக்ஷையைக் கோபுரவாசலிலே விட்டு விட்டு உள்ளே பெருமாளை ஸேவிக்கப்போனாராம். அங்கும் அவர்க்குப் பாதரக்ஷயின் மேலேயே நினைவு குடிகொண்டிருந்ததனால் 'தீர்த்தம் ஸாதிக்க' என்கைக்கு 'செருப்புஸாதிக்க' என்றாராம்.

* * *—திருக்கடித்தானத்தை ஏத்துங்கோளென்றார் கீழ்ப்பாட்டில்; ஏத்த வேண்டா; அத்தலத்தை நெஞ்சாலே நினைத்தாலும் போது மென்கிறார் இதில். கோவிந்தன் மண்ணின் முழுதுமளந்த வொண்டாமரை மண்ணவர்தாம்தொழ வானவர் தாம் வந்து நண்ணுதிருக்கடித்தான நகரை இடர்கெட உள்ளத்துக் கொண்மின் என்று அந்வயிப்பது.

கோவிந்தன் என்பது ஸர்வஸுலபனென்னும் பொருளில் பிரயோகிக்கப்பட்டது. தாமரைபோன்ற திருவடியென்ன வேண்டுமிடத்து, திருவடியைச் சொல்லாதே தாமரை யென்றே சொல்லிவைத்தது—உவமவாகுபெயர்; *தாவி வையங்கொண்ட தடந்தாமரை கட்கே * (6—9—10) என்றார் கீழும்.

மண்ணவர்தாந் தொழ வானவர்தாம்வந்து நண்ணு = இடக்கை வலக்கையறியாத ஸம்ஸாரிகள் தொழ அவர்களுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிற நீர்மையைக்காண வாசைப் பட்டு நித்ய ஸூரிகளும் வந்துகிட்டுகிற திருப்பதியாமிது. "பரமபதம் நித்யர்க்கேயா யிருக்குமாபோலே உகந்தருளின தேசம் ஸம்ஸாரிகளுக்கேயா யிருக்கை" என்பது நம்பிள்ளையீடு. "இங்குள்ளார் அங்குப்போவது மேன்மையை யநுபவிக்க; அங்குள்ளார் இங்கு வருவது சீல குணநுபவம் பண்ணுகைக்கு" என்கிற ஸ்ரீ ஸூக்தியுங் காண்க. ... ... .... ... ... .... 7

3509 தானநகர்கள் தலைச்சிறந்தெங்கெங்கும் * வானிந்நிலங்கடல் முற்றுமெம்மாயற்கே * ஆனவிடத்துமென்னெஞ்சும் திருக்கடித்,தானநகரும் * தனதாயப்பதியே. 8

| | | | |
|---|---|---|---|
| வான் இ நிலம் கடல் எங்கெங்கும் | பரமபதம் இவ்வுலகம் திருப்பாற்கடல் ஆகிய எல்லாவிடத்தும் | எம்மாயற்கே ஆனஇடத்தும் | எம்பெருமானுக்கே ஆயிருக்கச் செய்தேயும் |
| தானம் நகர்கள் முற்றும் | வாஸஸ்தானமான நகரங்கள் முற்றவும் | என் நெஞ்சும் | எனது நெஞ்சமும் |
| தலை சிறந்து | மிக்க சிறப்பமைந்து | திருக்கடித்தான நகரும் | திருக்கடித்தான மென்கிற திருப்பதியும் |
| | | தன தாயம் பதியே | தனக்கே அஸாதாரண ப்ராப்தமான தலமாயிரா நின்றது. |

* * *—எம்பெருமானுக்கு ஸ்தானமான விலக்ஷண நகரங்கள் பல பல வுண்டாயிருக்கச் செய்தேயும் என்னுடைய நெஞ்சையும் திருக்கடித்தானத் திருப்பதியையும் நன்கு தாய ப்ராப்தமான ஸ்தானமாகக் கொண்டு விரும்பி யிருப்பதாக அருளிச் செய்கிறாரிதில். எம்பெருமானுக்குப் பரமபோக்கியமாக அமைந்த வாஸ ஸ்தானங்களுக்கு ஒரு குறையுண்டோ? கணக்கு வழக்குண்டோ? மேலுலகங்களிலும் இந்நிலவுலகத்திலும் கடலிலும் ஆகக் கண்டவிடங்களிலுமெல்லாம் மிகச் சிறந்த இருப்பிடங்கள் இருக்கச் செய்தேயும் அவற்றில் ஆதரமுடையனல்லன் எம்பெருமான்; என்னெஞ்சையும் என்னெஞ்சில் வாஸத்திற்கு ஸாதனமாயிருந்த திருக்கடித்தானப் பதியையுமே தனக்கு தாயப்ராப்தமான ஸ்தானமாக விரும்பியிரா நின்றான் என்றாராயிற்று. முறையிலே வந்ததாய் அவச்யமநுபவிக்கத் தக்கதான பொருள் தாயப்ராப்தமெனப்படும்.

3510 தாயப்பதிகள் தலைச்சிறந்தெங்கெங்கும் * மாயத்தினால்மன்னி வீற்றிருந்தானுறை * தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் * ஆயர்க்கதிபதி அற்புதன்தானே. 9

| | | | |
|---|---|---|---|
| தேசம் அமரர் திருக்கடித்தானத்துள் உறை | தேசுபொலிந்த நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யமான திருக்கடித்தானப் பதியிலே வாழ்பவனாய் | தாயப் பதிகள் எங்கெங்கும் தலை சிறந்து | தனக்கு அஸாதாரணமான திருப்பதிகள் எல்லாவிடத்திலும் சிறப்பமைந்து |
| ஆயர்க்கு அதிபதி | கோபாலர் தலைவனாய் | மாயத்தினால் | தன்னுடைய இச்சையினாலே |
| அற்புதன் தான் | ஆச்சர்யபூதனான பெருமான் தான் | மன்னி வீற்றிருந்தான் | பொருந்தி யெழுந்தருளி யிருப்பவன். |

* * *—திருக்கடித்தானமொன்றேயோ அவனுக்கு தாயப்ராப்தம்? எல்லாத் தலங்களுமே தாயப்ராப்தமன்றோவென்ன, அன்றென்று சொல்லமுடியாது; ஆனாலும், என்னோடே கிட்டுகைக்குறுப்பான தலமென்று திருக்கடித்தானத்திலே விசேஷாபிமானங்கொண்டிருக்கிறானென்கிறார்.

தலைச்சிறந்த தாயப்பதிகள் எங்கெங்கும் மாயத்தினால் மன்னி வீற்றிருந்தான்=திவ்ய தேசங்களில் சிறியது பெரியதென்கிற வாசியின்றிக்கே எந்தத்திருப்பதியானாலும் அது மிகச் சிறந்ததே; அவை ஒவ்வொன்றும் தாயப்பதியே; (அதாவது—அஸாதாரணஸ்தலமேயென்றபடி.) அப்படிப்பட்ட எல்லாத் திருப்பதிகளிலுமே பொருந்தி வாழ்பவன்தான் எம்பெருமான்; ஆனாலும், திருக்கடித்தானத்திலிருப்பு அத்புதம்! அத்புதம்!! என்ன வேண்டு மத்தனை. ... ... ... .... ... 9

3511 அற்புதன்நாராயணன் அரிவாமனன் * நிற்பதும்மேவி யிருப்பதென்னெஞ்சகம் *
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர் * கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே. 10

| | |
|---|---|
| அற்புதன் நாராயணன் | அத்புத சேஷ்டிதனாய் நாராயணனாய் |
| அரி வாமனன் | ஹரியாய் வாமனனான எம்பெருமான் |
| மேவி இருப்பது என் நெஞ்சகம் | பொருந்தியிருப்பது என்னெஞ்சினுள்ளே; |
| நிற்பது | அதற்காகவந்து நிற்பது (எவ்விடத்திலென்னில்) |
| நல்புகழ் வேதியர் | புகழ்மிக்க வைதிகருடைய |
| நால் மறை | நான்கு வேதங்களும் |
| நின்று அதிர் | நிலைநின்று முழங்கும்படியாய் |
| கற்பகம் சோலை | கற்பகம்போன்ற மரங்கள் நிறைந்ததான |
| திருக்கடித்தானம் | திருக்கடித்தானத்திலே. |

* * *—ஆழ்வார்தம்மைப் பெறுமளவும் எம்பெருமான் திருக்கடித்தானத்திலே நின்றருளினான்; இவர்தம்மைப் பெற்று ஸம்ச்லேஷித்த பிறகு நிற்பதுமிருப்பதும் இவர்தம் நெஞ்சிலேயாயிற்று என்கிறது இப்பாட்டு.

அற்புதன் நாராயணன் அரி வாமனன் நிற்பது-(எங்கேயென்றால்) நற்புகழ் வேதியர் நான்மறை நின்றதிர் கற்பகச் சோலைத் திருக்கடித்தானமே; (அவன்றான்) மேவியிருப்பது-(எங்கேயென்றால்) என்னெஞ்சகம்=என்றிங்ஙனே ஒரு அந்வயக்ரமம். நற்புகழ்வேதியர் நான் மறை நின்றதிர் கற்பகச் சோலைத் திருக்கடித்தானத்து அற்புதன் நாராயணன் அரிவாமனன் நிற்பதும் மேவியிருப்பதும் என்னெஞ்சகம்—என்றிங்ஙனே மற்றோரந்வயக்ரமம். மூன்றாவதான வொரு யோசனையுமுண்டு; அற்புதன் நாராயணன் அரி வாமனன் நிற்பதும் மேவியிருப்பதும் என்னெஞ்சகத்திலும் திருக்கடித்தானத்திலும்=என்று. ... ... ... ..... ... 10

3512 சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை * மதிட்குருகூர்ச் சடகோபன்சொல் *
பாலோடமுதன்ன ஆயிரத்திப்பத்தும் * மேலைவைகுந்தத்து இருத்தும்வியந்தே. 11

| | |
|---|---|
| சோலை திருக்கடித்தானத்து உறை திருமாலை | சோலைமிக்க திருக்கடித்தானப் பதியில் வாழும் திருமாலைக் குறித்து |
| மதிள் குருகூர் சடகோபன் | நம்மாழ்வார் |
| சொல் | அருளிச்செய்ததாய் |
| பாலோடு அமுது அன்ன | பாலும் அமுதும் கலந்தாற் போல் பரம போக்யமான |
| ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளே |
| இ பத்தும் | இப்பதிகம் |
| மேலை வைகுந்தத்து | ஸர்வோத்தமமான ஸ்ரீ வைகுண்டத்திலே |
| வியந்து இருத்தும் | உகந்து இருக்கச்செய்யும். |

* * *—இப்பதிகமானது தன்னைக் கற்றவர்களைத் தானே திருநாட்டிலே கொண்டு போய்வைக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப்பாட்டின் ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி பரம போக்யம்;—“சோலைத் திருக்கடித்தானத்துறை திருமால் கவிக்கு ப்ரதிபாத்யன், மதிள் குருகூர்ச்சடகோபன் கவிபாடுகிறானாகில் இவை எங்ஙனே யிருக்கின்றன!, இவை வல்லாரை எம்பெருமான் ஒரு க்ஷணம் பிரியில் தரிக்கமாட்டானென்கிறார்.” என்று.

பாலோட்முதன்ன என்ற விடத்திற்கு ஆளவந்தார் அருளிச் செய்வதொரு இன் சுவைப் பொருள்கேளீர்; எம்பெருமான் விஷயமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியுமாகவன்றோ திருவாய் மொழியுள்ளது; இதில் எம்பெருமான் விஷயமானது பால்; ஆழ்வார் ஸ்ரீஸூக்தியானது அமுது. இப்படி வாச்யவாசகங்கள் சேர்ந்திருப்பதானது பாலுமமுதும் சேர்ந்தாற்போன்றதாம்.

இப்பத்தும் வியந்து மேலைவைகுந்தத்திருத்தும்=‘ஸம்ஸார நிலத்திலே இத்தை அப்யஸிப்பாரொருவனுண்டாவதே!’ என்று வியப்பாம். அசேதநமாகிய பதிகத்திற்கு வியப்புண்டாகுமோவென்று சங்கிக்கவேண்டா; பதிகத்தினால் ப்ரஸன்னனாகின்ற எம்பெருமானுடைய செயலே பதிகத்தின் மேலேற்றிக் கூறப்பட்டதென்க. ... 11

எட்டாம்பத்து—ஆறாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—இருத்தும் வியந்து.

உரையவதாரிகை;—இத்திருவாய்மொழியில் ஆழ்வார் பேறுபெற்றுக் களிக்கும் விதம் பரம விலக்ஷணமாகவுள்ளது. இவ்விஷயத்தில் இப்பதிகத்தோடொத்த பதிகம் இத்திருவாய்மொழியாயிரத்தினுள் வேறில்லையென்று சொல்லலாம்.

எம்பெருமானைப் பெறுவதில் ஆழ்வாருடைய விருப்பம் அதிகமா? ஆழ்வாரைப் பெறுவதில் எம்பெருமானுடைய விருப்பம் அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குங்கால், எம்பெருமானுடைய விருப்பமே அதிகமென்று தேறிநிற்கும். * ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம் * என்றும் * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்றும் சொல்லிவைத்திருக்கிற எம்பெருமான்படியைப்பார்த்தால், ஒரு சேதநனைப் பெறுகை எம்பெருமானுக்குப் பரமலாபமாகக் காணுநின்றதன்றோ. ஆகவே ஆழ்வாரைப் பெறுகையே எம்பெருமானுக்குப் பரமலாபமாகையாலும், அதற்குரிய க்ருஷி பண்ணுவானும் அவனேயாகையாலும், அவன் தானும் ஆர்த்தியே செப்பேடாக வந்து உதவுமவனாகையாலும் தானே அர்த்தியாய்த் தன்பேறாக வந்து கலந்தான். அதனைக் கண்ட ஆழ்வார் “அந்தோ! நம்மோடு கலப்பதற்கு எம்பெருமான் இரப்பாளனாயிருக்க, நாம் இரப்பாளராய்க் கூப்பிட்டோமே!” என்று வருந்தி ‘ஒரு ஸம்ஸாரி சேதநன்பக்கலிலே ஸர்வேச்வரன் தான் செய்தருளும் விஷயீகாரம் என்னே!’ என்று ஈடுபடுகிறாராய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. ... ... ... ... ... *

3513 இருத்தும்வியந்தென்னைத் தன்பொன்னடிக்கீழென்று *
அருத்தித்தெனைத்தோர் பலநாளழைத்தேற்கு *
பொருத்தமுடை வாமனன் தான்புகுந்து * என் தன்
கருத்தையுறவீற்றிருந்தான் கண்டுகொண்டே. 1

| | | | |
|---|---|---|---|
| என்னை | அடியேனை | அழைத்தேற்கு | அழைத்துக் கூப்பிட்டவென் விஷயத்தில் |
| வியந்து | திருவுள்ளமுவந்து | பொருத்தம் உடைவாமனன் தான் புகுந்து | ப்ராவண்யமுடையனான எம்பெருமான் தானே வந்து புகுந்து |
| தன் பொன் அடி கீழ் இருத்தும் என்று | தன் திருவடிகளின் கீழே இருத்தியருள்வானாகவென்று | என் தன் கருத்தை உற | என்னுடைய கருத்தைத் தானுடையனாய்க்கொண்டு |
| அருத்தித்து | பிரார்த்தித்து | கண்டு கொண்டு | என்னையே பார்த்துக்கொண்டு |
| எனைத்தோர் பல நாள் | அனேக காலம் நாள்தோறும் | வீற்றிருந்தான் | எழுந்தருளியிராநின்றான். |

* * *—நான் அர்த்தியாய்க் கூப்பிட்டழைத்த விடாயெல்லாம் தீரும்படி தான் அர்த்தியாய் என்னெஞ்சிலே பெறும்பேறு பெற்றானாகப் புகுந்திராநின்றானென்கிறார். அடியேனைத் தன்னுடைய திருவடிகளின் கீழே சேர்த்துக் கொண்டருள வேணுமென்று அவனைப் பிரார்த்தித்து நான் பலகாலும் கதறிக்கொண்டிருந்தேன்; என்னுடைய இரப்பு இப்படி யிருக்க, தான் பண்டு மாவலிதன் பெருவேள்வியில் இரப்பாளனாய்ச் சென்றதுபோல இன்று என் பக்கலிலே, என்னுடைய அர்த்தித்வத்தைத் தான் ஏறிட்டுக் கொண்டு வந்து என்னுள்ளே புகுந்து, என்னைப் பெற்றதனாலுண்டான வேறுபாடு தன் வடிவிலே தோற்ற விருந்து க்ருதக்ருத்யனாய் நின்றான். [கண்டுகொண்டே வீற்றிருந்தான்] மஹா வ்யாதிக்குத் தப்பிப்பிழைத்த புத்திரனைப் பார்த்துக்கொண்டிருக்கும் பிதா போலே, கீழே * மாயக்கூத்தாவென்னுந் திருவாய்மொழியிலாற்றாமைக்குத் தப்பிப் பிழைத்தவரென்று வைத்தகண் வாங்காதே பார்த்துக்கொண்டிராநின்றான்.

மூன்றாமடியில் பொருத்தமுடை யென்றது ஸாபிப்ராயம்; ஐயோ! இவனையன்றோ நான் கீழே 'இதுவோபொருத்தமே' என்றேன் என்று நொந்து சொல்லுகின்றார் போலும். * * * * 1

3514 இருந்தான் கண்டுகொண்டு எனதேழைநெஞ்சாளும் *
திருந்தாதவோரைவரைத் தேய்ந்தறமன்னி *
பெருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தபெருமான் *
தருந்தானருள்தான் இனியானறியேனே. 2

| | | | |
|---|---|---|---|
| எனது ஏழை நெஞ்சு ஆளும் | என்னுடைய சபலமான நெஞ்சைத் தங்களிஷ்டப்படி நடத்திக் கொண்டு போருகிற | பெருதாள் களிற்றுக்கு அருள் செய்த பெருமான் தான் | பெரிய தாளையுடைய யானைக்கு அருள் செய்த ஸர்வாதிகனானவன் |
| திருந்தாத ஓர் ஐவரை | துஷ்டபஞ்சேந்திரியங்களும் | | |
| தேய்ந்து அற மன்னி | க்ஷயித்து முடியும்படியாக என்பால் பொருந்தியிருந்து | தரும் அருள்தான் | அந்த யானைக்குத் தந்த வருளை |
| கண்டு கொண்டு இருந்தான் | (நிதியெடுத்தவன் நிதியையே கண்டு கொண்டிருக்குமா போலே) என்னையே கண்டு கொண்டிருக்கின்றான்; | இனி யான் அறியேன் | என்பக்கல் பண்ணின வருளைக் கண்ட பின்பு அருளாக மதிக்கின்றிலேன். |

* * *—பிரபல விரோதிகளான இந்திரியங்கள் வலிமாண்டொழியும்படி தன்னழகாலே செய்து என்னை விஷயீகரித்தருளின பேருதவிக்கு, கஜேந்திராழ்வான் திறத்துச் செய்த உதவியும் ஒவ்வாதென்கிறார். "இருந்தான் கண்டு கொண்டே" என்று கீழ்ப் பாட்டிலுஞ் சொல்லிற்று; இப்போது மறுபடியும் அது சொல்லுகிறது அந்தாதித் தொடைக்காகவன்று; ஜன்மதரித்ரன் நிதிகண்டால் கண்ணிமைத்தலின்றியே பார்த்துக் கொண்டிருக்குமாபோலே பார்த்தபடியே யிராநின்றானென்கிறது. இராமபிரானும் ஸுக்ரீவனும் நட்பான பின்பு * அந்யோந்யமபிவீக்ஷந்தௌ ந த்ருப்தி முபஜக்மது: * [ஒருவரையொருவர் கண் கொட்டாமல் பார்த்தபடியேயிருந்து த்ருப்தியடையாமலேயிருந்தார்கள்] என்று சொல்லிற்று; இருவருமாகக் கண்டு கொண்டிருந்தபடி அங்கு; ஒரு தலையாயிங்கு. அவனாலே தாமடைந்த வுதவி யாதெனில், [எனதேழை நெஞ்சாளுந் திருந்தாத வோரைவரைத் தேய்ந்தற] கண்டதெல்லாவற்றிலும் சபலமாயிருக்குமே நெஞ்சு, அப்படிப்பட்ட நெஞ்சை இந்திரியங்கள் தம்வழியே இழுத்துக் கொண்டு கிடக்குமே; நமக்கு சேஷமான நெஞ்சை இந்திரியங்கள் பணி கொள்ளுகையாவதென்? என்று எம்பெருமான் அவற்றை முகஞ்சிதறப்புடைத்தானாயிற்று. தம்முடைய ஸர்வகரணங்களும் விஷயாந்தரவாஸனையுமறியாதே பகவத் விஷயத்திலேயே ப்ரவணமானபடி சொன்னவாறு. ஸர்வசக்தியான எம்பெருமான் அநாதிகாலமாகத் திருத்தப் பார்த்த விடத்திலும் திருந்தாமலிருந்தனவாம் அவை. அசேதனங்களான இந்திரியங்களை ஐந்து

என்று சொல்லவேண்டுமிடத்து ஐவர் என்றது—அவை அசேதனங்களைப் போலன்றிக்கே சேதநர்கள் போலவே நின்று நலியுந்தன்மையைப் பற்ற. திருமங்கையாழ்வாரும் * உடனின்றைவரென்னுள் புகுந்து * என்றருளிச் செய்தது காண்க.

இப்படிப்பட்ட வருளைத் தம்பக்கல் செய்ததைக் கண்ட ஆழ்வார், பண்டு கஜேந்திராழ்வானுக்குச் செய்த அருளும் இதற்கீடல்லவென்று துணிந்து பின்னடியருளிச் செய்கிறார். ஒரு முதலையின் வாய்ப்பட்டகளிறன்றோ அது; ஐந்து முதலைகளினுலன்றோ தாம் பட்டது; இவ்விடரைப்போக்கினது நிகரற்றவுபகாரமன்றோ. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"ஆனை நோவுபட்டது ஆயிரம் வத்ஸரம்; அகப்பட்ட பொய்கை பரிச்சிந்நம; முதலை ஒன்று; எனக்கோ காலம அநாதி; அகப்பட்டது ஸம்ஸாரார்ணவத்திலே; முதலை அஞ்சு; இத்தை மீட்டுக்கொண்ட மஹா குணத்துக்கு அதொரு குணமாயிற்றதோ?"

... ... ... ... 2

3515 அருள்தானினியானறியேன் அவனென்னுள் *
இருள்தானறவீற்றிருந்தான் இதுவல்லால் *
பொருள்தானெனில் மூவுலகும்பொருளல்ல *
மருள்தானீதோ மாயமயக்குமயக்கே. 3

| | | | |
|---|---|---|---|
| அருள் தான் இனி யான் அறியேன் | இவ்வருளல்லது மற்றோருளை நானோருளாக மதியேன்; | பொருள் தான் எனில் | (அவனுக்கு) வேறு புருஷார்த்தமுண்டோ வென்னில், |
| அவன் தான் | அப்பெருமான் | மூ உலகும் பொருள் அல்ல | த்ரிலோகாதிபதித்வமும் ஒரு பொருளாகவுள்ள தன்று; |
| என் உள் இருள் அற | எனது உள்ளிருள் தொலையும்படி | ஈது மருள் தானே | இதுதான் என்ன ப்ரமமோ! |
| வீற்றிருந்தான் | (என்னுள்ளே) எழுந்தருளியிரா நின்றான்; | மாயம் மயக்கு மயக்கே | அவன்தான் ஆச்சரியமான ப்ராமகசேஷ்டிதங்களாலே மயக்குகிறபடியோ? |
| இது அல்லால் | இவ்விருப்புத்தவிர | | |

* * *—ஸர்வேச்வரன் தம்பக்கலிலே இப்படி அளவு கடந்த வியாமோஹத்தைப் பண்ணுகையாகிறவிது, ஆலோசித்துப் பார்த்தால் அஸம்பாவிதம்போல் தோன்றுகையாலே இது மெய்யாயிருக்க வழியில்லையே, மருளோ? மாயமயக்கோ? என்று அலைபாய்கிறார். அருள்தான் இனியானறியேன்=என்னுடைய இந்த்ரியச் செருக்கையடக்கினதையும் ஓரருளாக மதிக்கமாட்டேனென்றபடி. "என்னுள்ளே யிருந்தருளின இவ்வருளல்லது மற்றோருளை நான் ஓரருளாக மதியேன்" என்பது ஆறுயிரப்படி.

அவன் என்னுள் இருள்தானற வீற்றிருந்தான்=அப்பெருமான் என்னுடைய ஹ்ருதயத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் போம்படி, பெரும்பேறு பெற்றானாய் அப்பெருமை தோற்ற விராநின்றான்; இனியெனக்கு வேறொன்று தோற்றுமோ வென்றபடி.

இதுவல்லால் பொருள்தானெனில் மூவுலகும் பொருளல்ல=இதற்கு இரண்டு வகையான நிர்வாஹங்களுள்ளன; மூவுலகங்களையும் ஆளப்பெறுகையாகிற செல்வத்தை நாட்டார் பெருஞ் செல்வமென்று நினைத்திருப்பர்கள்; எம்பெருமான் என் ஹ்ருதயத்திலே புகுந்த பின்பு இதையே பெருஞ் செல்வமாகக் கொண்டநான் அந்த த்ரிலோகாதிபத்தியத்தை ஒரு பொருளாக மதிக்கமாட்டேனென்கிறார்.—என்று திருமாலையாண்டானருளிச் செய்ததாம்; இப்படி ஆழ்வாருடைய எண்ணமாகச் சொல்லுவதிற்காட்டிலும் எம்பெருமானுடைய எண்ணமாகச் சொல்வதே பிரகரணத்திற்குச் சேருமென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமானார்—"என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்தெழுந்தருளியிருக்கிற விருப்பொழிய * வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்லவிருக்குமிருப்பையும் தனக்கொரு சரக்காக நினைத்திருக்கின்றிலன் எம்பெருமான்." என்றருளிச் செய்வராம்.

மருள்தானீதோ ?=ஸர்வேச்வரன் ஒரு ஸம்ஸாரி சேதநனைப்பெற்று இங்ஙனே களித்திருந்தானென்றால் இது கூடுவதன்றே, நம்பத்தகுந்ததன்றே; ஆகவே இது என் அவிவேகத்தாலே சொல்லுகிறேனோ ? * ஸ்வப்நோ நு மாயா நு மதிப்ரமோ நு. *

மாயமயக்குமயக்கே—அல்லது அந்த மாயப்பிரான் தானே தன்னுடைய மயக்குகளையிட்டு இங்ஙனே மயக்கிப் பேசுவிக்கிறானோ? இங்கே ஈடு;—"நெடுநாள் ப்ரக்ருதியையிட்டு அறிவு கெடுத்தான், இப்போது தன் வ்யாமோஹத்தாலே என்னை ப்ரமிப்பித்தான். ... ... .... .... ... ... 3

3516 மாயமயக்குமயக்கான் என்னைவஞ்சித்து *
ஆயனமரர்க்கரியேறு எனதம்மான் *
தூயசுடர்ச்சோதி தனதென்னுள்வைத்தான் *
தேசந்திகழும் தன்திருவருள்செய்தே. 4

| | | | |
|---|---|---|---|
| ஆயன் | கோபாலக்ருஷ்ணனும் | தனது தூய சுடர் சோதி | தன்னுடைய நிர்மல தேஜோமய திவ்யமங்கள விக்ரஹத்தை |
| அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு | | |
| அரி ஏறு | அளவிடமுடியாத மேன்மையையுடையனுமாயிருக்கிற | என் உள் வைத்தான் | எனது நெஞ்சினுள்ளே ஸுப்ரதிஷ்டிதமாக்கினன்; (இது மெய்யேயாதலால்) |
| எனது அம்மான் | எம்பெருமான் | என்னை வஞ்சித்து மாயமயக்கு மயக்கான் | என்னிடத்திலே வஞ்சகனும் ப்ரமிக்கச் செய்கிறனல்லன். |
| தேசம் திகழும் தன் திரு அருள் செய்து | தேசப்ரஸித்தமாம்படியான தன் அஸாதாரண க்ருபையைப் பண்ணி | | |

* * *—கீழ்ப்பாட்டில் * மருள்தானீதோ மாயமயக்கு மயக்கே * என்றாரே, ஆராய்ந்து பார்த்து 'இது மருளன்று, மயக்கன்று; மெய்யாகவே அவனென்னுள்ளே கலந்து களிப்புற்றான், இதிலொரு ஸந்தேஹமில்லையென்கிறார். ஆறாயிரப்படி யருளிச்செயல் காண்மின்;—"நிரவதிக வாத்ஸல்ய ஸௌசீல்யத்தையுடையனாயிருந்தவனே என்னுடைய நிகர்ஷத்தைப் பார்த்து என் திறத்துப் பொய் செய்தருளான்; ஹேய ப்ரத்யநீகமான தன் திருவடிவை என்னுள்ளே ஸர்வலோகமு மறியும்படி மெய்யே வைத்தருளினானென்கிறார்."

ஆயன் அமரர்க்கரியேறு எனதம்மான் தேசந்திகழும் தன் திருவருள்செய்து தனது தூயசுடர்ச்சோதி என்னுள் வைத்தான்; என்னை வஞ்சித்து மாயமயக்கு மயக்கான்—என்று அந்வயக்ரமம். அநாச்ரிதரான துர்யோதநாதிகள் திறத்திலே ஆயுதமெடேனென்று ஆயுத மெடுத்தும் பகலை யிரவாக்கியும் வஞ்சித்தானித்தனையல்லது பாண்டவர்கள் விஷயத்தில் அத்தைச்செய்தானோ? தனக்கே அற்றுத்தீர்ந்த என்னை வஞ்சிப்பனோ? ப்ரமஸாதனங்களாலே ப்ரமிக்கச் செய்வனோவென்னை? வஞ்சித்தானுமல்லன், ப்ரமிக்கச் செய்தானுமல்லன்.

வஞ்சிக்கமாட்டானென்பதற்கு ஹேது சொல்லுகிறார் ஆயனமரர்க்கரியேறு எனதம்மான் என்று. இப்படிப்பட்டவன் லோகமெல்லாமறியும்படி என் பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணி, ஹேயப்ரதிபடமாய் விலக்ஷண தேஜோரூபமாய் சுத்த ஸத்வமயமாய் தனக்கே அஸாதாரணமான வடிவை என்னுள்ளே வைத்தான்; இது மெய்யே, வஞ்சனையன்று, மருளன்று.... ... .... ... ... 4

3517 திகழுந்தன்திருவருள்செய்து உலகத்தார்
புகழும்புகழ் * தானதுகாட்டித்தந்து * என்னுள்
திகழும்மணிக்குன்றமொன்றே ஒத்துநின்றான் *
புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருளே. 5

| | |
|---|---|
| திகழும் தன் திரு அருள் செய்து | மிகப்பொலிகின்ற தன் திருவருளைப்பண்ணி |
| உலகத்தார் புகழும் புகழ் அது தான் காட்டி தந்து | லோகத்தார் இதுகண்டு புகழுகிற அப்புகழையும் பிரபலப் படுத்தி |
| என்னுள் திகழும் மணி குன்றம் ஒன்றே ஒத்து நின்றான்; | என்னுள்ளே, விளங்கா நின்ற ஒரு மாணிக்க மலைபோலே நின்றான்; |
| எனக்கு மற்று புகழும் புகழ் ஓர் பொருளே | எனக்கு இந்நிலையொழிய வேறு விதமாக அவனைப் புகழ்வதும் ஒரு பொருளோ. |

* * *—"தேசந் திகழுந்தன் திருவருள் செய்தே" என்று கீழ்ப்பாட்டிலருளிச் செய்ததை இதில் விவரித்தருளுகிறார். [திகழுந்தன் திருவருள்செய்து] உலகத்திலும் சிலர் சிலரிடத்தே அருள் செய்வதுண்டு; அதுதான் ஓரளவிலே நின்றிருக்குமே; என்பால் எம்பெருமான் செய்தவருள் இரண்டு தலைக்கும் நிறமாம்படியமைந்தது; அதாவது—இன்னானுக்கருள் செய்தோமென்று அவனும் பெருமைபொங்கி, 'இவ்வருளுக்கு நாமிலக்காகப் பெற்றோமே!' என்று நானும் பெருமைபொங்கி நிற்கை. ஆக இப்படிப்பட்ட மஹாக்ருபையைச் செய்ததனாலே என்னுடைய பேற்றைக்குறித்து உலகத்தார் செய்யும் புகழ்ச்சியைத் தான் காட்டித்தந்தான். அதாவது—* ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச் சடகோபன் * என்றும், * என்னில் மிகு புகழார் யாவரே? பின்னையும் மற்றெண்ணில் மிகுபுகழேன்யானல்லால் * என்றும் * பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம் * என்றும் என் வாயில் வரும்படி பண்ணிவைத்தானென்கை.

என்னுள் திகழும்மணிக்குன்றமொன்றே யொத்து நின்றான்=பளபளவென்று விளங்கா நின்றதொரு நீல மலைபோலே என்னுள்ளேவந்து புகுந்து நிலைபெற்றுக் கால்வாங்கிப் போக மாட்டாதே யிராநின்றான். புகழும் புகழ் மற்றெனக்குமோர்பொருளே—என்னுள்ளே நின்றருளுகையாகிற இந்த மஹா குணத்தையல்லது மற்றுள்ள புகழை ஒரு புகழாக மதிக்கமாட்டேனென்கை. ... ... ... ... .... 5

3518 பொருள்மற்றெனக்குமோர்பொருள் தன்னில்சீர்க்கத்
தருமேல் * பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும் *
கருமாணிக்கக்குன்றத்துத் தாமரைபோல் *
திருமார்வுகால்கண்கை செவ்வாயுந்தியானே. 6

| | |
|---|---|
| கரு மாணிக்கம் குன்றத்து | கருமாணிக்க மலையின் மேலே |
| தாமரை போல் | தாமரைக்காடு அலர்ந்தாற் போன்ற |
| திரு மார்வு கால் கண் கை செம் வாய் உந்தி யான் | திருமார்பு முதலிய திவ்யாவயவங்களையுடையனான பெருமான் |
| மற்று பொருள் தன்னில் | மற்றுள்ள புருஷார்த்தங்களிலே |
| எனக்கும் ஓர் பொருள் சீர்க்க தரும் ஏல் | எனக்கும் ஒரு புருஷார்த்தத்தைத் தந்து விட்டானாகில் |
| பின்னை அவன் தன்னை ஆர்க்கு கொடுக்கும் | பின்னை அவன் உயர்ந்த புருஷார்த்தமான தன்னை ஆருக்குக் கொடுப்பான். |

* * *—உலகத்தார் எம்பெருமான் பக்கலில் அபேக்ஷிப்பது இரண்டு வகைப்பட்டது; ஐச்வர்ய கைவல்யாதிகளான இதர புருஷார்த்தங்களை யபேக்ஷிப்பதென்பதொன்று; அவை யொன்றும் வேண்டாதே 'எமக்கு நீயே வேணும்' என்று அவன் றன்னையே அபேக்ஷிப்பது மற்றொன்று. இவ்விதமாகவே, எம்பெருமான் உபகரித்தருளுகிறவிதமும் இரண்டுவகைப் பட்டது; சிலர்க்கு இதர புருஷார்த்தங்களைக் கொடுத்துவிடுதல், சிலர்க்குத் தன்னையே கொடுத்துவிடுதல். ஆழ்வார்க்கு அவன் உபகரிப்பது இதரபுருஷார்த்தங்களையன்றே; தன்னையே யன்றோ கொடுப்பது, அது கிடைத்ததாகவன்றோ ஆழ்வாரும் களிப்பது. இப்படி, தன்னையே தமக்குத் தந்தருளின தானது, தன்னை வேறு யாரும் கொள்வாரில்லை யென்பதனாலன்று, என் பக்கலுள்ள அபிநிவேசத்தாலே தந்தானென்கிறாரிப்பாட்டில்.

பொருள் தன்னில் மற்றுமோர் பொருள் எனக்குச் சீர்க்கத் தருமேல்=எம்பெருமான் தந்தருளும் புருஷார்த்தங்கள் பலபலவுண்டே; அவற்றுள் வேறேயொரு கன்த்த புருஷார்த்தத்தை எனக்குத் தந்துவிட்டால்; அவன் பின்னை யார்க்குத் தன்னைக் கொடுக்கும்=தானுகிற பொருளைக் கொடுப்பதற்கு வேறுயாருமில்லையா என்ன? ஏனில்லை? அவனும் கொடுப்பன், கொள்வாரும் பலருளர்; அப்படியிருக்க எனக்குத் தன்னைக் கொடுத்தது தன்னுடைய அபிநிவேசாதிசயத்தாலே என்று சேஷபூரணம் செய்துகொள்க.

பின்னடிகள் எம்பெருமானுடைய இயற்கையழகைக் கூறுவனவல்ல; தம்மோடுண்டான கலவியாலே அவனுடைய திவ்யாவயவங்களிற் பிறந்த புதுக்கணிப்பைப் பேசுவன. "கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல்" என்றது இல்பொருளுவமை (அபூதோபமை.) ... ... ... ... .... 6

3529 செவ்வாயுந்தி வெண்பல்சுடர்க்குழைதம்மோடு *
எவ்வாய்ச்சுடரும் தம்மில்முன்வளாய்க்கொள்ள *
செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த *
அவ்வாயன்றி யானறியேன்மற்றருளே. 7

| | | | |
|---|---|---|---|
| செம் வாய் உந்தி வெண் பல் சுடர் குழை தம்மோடு | சிவந்தவாய் திருநாபி வெளுத்த திருமுத்து அழகிய மகரக் குழை ஆகிய அவற்றோடே கூட | செம் வாய் முறுவலோடு | சிவந்த திருப்பவளத்தின் முறுவலோடே கூட |
| எவ்வாய் சுடரும் | மற்றெல்லா அவயவங்களின் தேஜஸ்ஸும் | எனது உள்ளத்து இருந்த | என்னெஞ்சினுள்ளே யிருக்கின்ற |
| தம்மில் முன்வளாய்க் கொள்ள | ஒன்றுக்கொன்று முற்பட்டுச் சூழ்ந்து கொள்ள | அவ்வாய் அன்றி | அவ்வித மொழிய |
| | | மற்று அருள் யான் அறியேன் | வேறொன்றையும் நான் நினைக்கின்றிலேன். |

* * *—எம்பெருமான் ஆழ்வாரோடே கலந்து முறுவல் செய்து நிற்க, அத்திருப்பவளத்தினழகையனுபவித்துப் பேசுகிறார். இவ்வழகோடே என்னுள்ளே முறுவல் செய்திருக்கிறவிருப்பொழிய வேறொன்றையும் அறிகின்றிலேனென்கிறார். சிவந்த திருவதரமும் சிவந்த திருவுந்தியும் வெளுத்த திருமுத்தும் திருமகரக்குழையுமாகிற இவற்றோடே கூட மற்றைத் திவ்யாவயவ தேஜஸ்ஸும் ஒன்றுக்கொன்று முற்கோலி வந்து என்னை வளைத்துக்கொள்ள, இங்ஙனே பலபல அவயவங்களின் அழகு வில் வீசினாலும் என்னை நோக்கி அவன் முறுவல் செய்கையாகிறவிதொன்றே என்னுள்ளத்தை ஆகர்ஷியா நின்றது என்றாராயிற்று. ... .... ... 7

3520 அறியேன்மற்றருள் என்னையாளும்பிரானுர் *
வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து *
சிறியேனுடைச் சிந்தையுள்மூவுலகும் * தன்
நெறியாவயிற்றில் கொண்டுநின்றொழிந்தாரே. 8

| | | | |
|---|---|---|---|
| மற்று அருள் அறியேன் | வேறொன்றையும் உபகாரமாக நினைத்திருக்கின்றிலேன்; | உகந்து அருள் செய்வர் | திருவுள்ளமுகந்து க்ருபை பண் |
| என்னை ஆளும் பிரானுர் | என்னை அடிமை கொண்ட ஸ்வாமியானவர் | மூ உலகும் நெறி | மூவுலகங்களையும் முறைதப்பாதபடி |
| | | தம் வயிற்றில் கொண்டு | தமக்குள்ளே கூடக்கொண்டு |
| செய்வார்கட்கு | தாம் அருள் செய்ய நினைத்தவர்கட்கு | சிறியேனுடை சிந்தையுள் நின்றொழிந்தாரே | க்ஷுத்ரனான என்னெஞ்சிலே நின்று விட்டாரே. |
| வெறிதே | நிர்ஹேதுகமாகவே | | |

* * *—இப்படி தம்மிடத்திலே எம்பெருமான் நிர்ஹேதுகமாகச் செய்தருளின அருளையிட்டு 'நிர்ஹேதுகமாக அருள் செய்கையே அவனுக்கு இயல்பு' என்று அவன்றன்படியை நிஷ்கர்ஷிக்கிறாரிப்பாட்டில். என்னையாளும் பிரானார் செய்வார்கட்கு வெறிதே யருள்செய்வர்='என்னையாளும் பிரானார்' என்று எம்பெருமானுக்கு ஒரு திருநாமம் சாத்துகிறார்போலும். தம்மையடிமைகொள்ளுதலே அவனுக்கு நிரூபகமென்கிறார். செய்வார்கட்கு என்றது—தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு என்றபடி. எந்த வ்யக்தியை விஷயீகரிக்கவேணுமென்று தாம் திருவுள்ளம் பற்றுகிறாரோ அந்த வ்யக்தியினிடத்தில் [வெறிதே] நிர்ஹேதுகமாகவே அருள் செய்வர்.

ஸ்ரீ வசநபூஷணம் நான்காம் பிரகரணத்தில் பகவந்நிர்ஹேதுகக்ருபாவைபவ நிரூபண ஸ்தலத்தில்—(393) "*வெறிதேயருள் செய்வரென்று இவ்வர்த்தத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே; 'செய்வார்கட்கு' என்று அருளுக்கு ஹேது ஸுக்ருதமென்னா நின்றதேயென்னில், அப்போது வெறிதே என்கிற விடம் சேராது" என்றருளிச்செய்த சூர்ணைகள் இங்கே அநுஸந்தேயம். 'ஏதேனுமொரு நன்மையைச் செய்பவர்களுக்கு' என்னும்பொருளை விவக்ஷித்து 'செய்வார்கட்கு' என்று ஆழ்வார் பிரயோகித்தாரல்லர்; அப்படியாகில், வெறிதேயருள்செய்வர் என்றது பொருந்தாது என்க.

ஆழ்வார் இப்போது இந்த நிர்ஹேதுகக்ருபாவைபவத்தை அருளிச் செய்வதானது, தம்மிடத்தில் எம்பெருமான் இப்போது நிர்ஹேதுகமாக வருள் செய்தானென்பதைத் தெரிவிக்கவேயாதலால் அது பின்னடிகளில் தெரிவிக்கப்படுகிறது.

இப்படி நிர்ஹேதுகமாகவருள எங்கே கண்டீரென்ன, வேறொரிடம் தேடிப் போகவேணுமோ? என் பக்கல் செய்தமைபாரீர்; மிகவும் அற்பனான என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே அவன் பண்ணுமபிநிவேசம் ஒரு ஹேதுவைக் கொண்டோவென்கிறார். "சிறியேனுடைச் சிந்தையுள் நின்றொழிந்தாரே" என்று அந்வயம். த்ரிலோகாதிபதியான அவன் தம்முள்ளே நின்றொழிந்தால் உலகத்தையெல்லாம் நோக்கவேணுமேயென்ன, ஜகந்நிர்வாஹமும் என்னுள்ளே யாகிறது என்கிறார் மூவுலகுமித்யாதியால். கீழே "சிக்கனச் சிறிதோரிடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுகளொக்கவே விழுங்கிப் புகுந்தான்" என்றருளிச் செய்தது இங்கே நினைக்கத்தக்கது. .... ... 8

3521 வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும்யவரும் *
வயிற்றில்கொண்டு நின்றொருமூவுலகும் * தன்
வயிற்றில்கொண்டு நின்றவண்ணம்நின்றமாலை *
வயிற்றில்கொண்டு மன்னவைத்தேன்மதியாலே. 9

| | | | |
|---|---|---|---|
| வயிற்றில் கொண்டு நின்றொழிந்தாரும் | தாயானவள் வயிற்றிலே வைத்து நோக்குமாபோலே ரக்ஷகராகின்ற இந்நிலத்தரசர்களையும் | தன் வயிற்றில் கொண்டு நின்றவண்ணம் நின்றமாலை | தன்னுடைய வயிற்றிலே கொண்டு அநாயாஸமாக இருக்கின்ற திருமாலை |
| யவரும் | அவர்களுக்கும் மேலான பிரமன் முதலானோரையும் | மதியாலே | அவர் தந்த அநுமதியாலே |
| வயிற்றில் கொண்டு நின்று | தம்முடைய ஸ்வரூபைக தேசத்திலே கொண்டு நின்று | வயிற்றில் கொண்டு | என்னுள்ளேகொண்டு |
| ஒரு மூ உலகும் | மூவுலகங்களையும் | மன்ன வைத்தேன் | போராதபடி வைத்தேன். |

* * *—எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தம்மை விஷயீகரித்தமையைக் கீழ்ப் பாட்டிலருளிச் செய்த ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! ஒரு வ்யாஜமாத்ரமுமில்லாமல் எம்பெருமான் விஷயீகரிப்பனோ? ஏதேனுமொரு வ்யாஜமிருக்குமே, அதைச் சொல்லிக்காணீர், என்று சிலர் கேட்பதாகக் கொண்டு, அவனுடைய விஷயீகாரத்தை விலக்காமையாகிற அநுமதிமாத்திரமே நான் பண்ணினது, இவ்வளவேயென்கிறா

ரிப்பாட்டில். "மன்னவைத்தேன் மதியாலே" என்ற ஈற்றடி இப்பாட்டுக்கு உயிரானது. ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் (110) "மதியால் இசைந்தோமென்னும் அநுமதீச்சைகள் இருத்துவமென்றதை வென்னை இசைவித்த என்னிசைவினது" என்ற சூர்ணையின் பொருள் இங்கே அறியத்தக்கது.

முதலடியில் 'வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும்' என்பதனால் இந்நிலவுலகில் ரக்ஷகரென்று பேர்பெற்றுள்ள அரசர்கள் சொல்லப்படுகிறார்கள். எப்படியென்னில்; தாயானவள் ப்ரஜையை வயிற்றிலே வைத்து நோக்குமாபோலே ஜகத்தை நோக்குமவர்கள் என்னுங்காரணத்தினால். அதற்குமேல், யவரும் என்பதனால் அவர்களிற்காட்டிலும் மேம்பட்டவர்களான ப்ரஹ்மாதிகள் சொல்லப்படுகிறார்கள். இனி இரண்டாமடிக்குப் பொருள் இரண்டு வகையாகக் கொள்ளலாம்; "வயிற்றில் கொண்டு நின்றொரு மூவுலகும்" என்பதை, வயிற்றில் கொண்டு நின்று' என்று பிரித்துத் திருமாலிடத்திலே அந்வயிப்பது ஒருவகை. அன்றியே, நின்ற ஒரு+நின்றொரு என்று தொகுத்தல் விகாரமாகக் கொண்டு, முதலடியிலே சொன்ன க்ஷத்ரியாதிகளையும் ப்ரஹ்மாதிகளையும் தன்னுள்ளே கொண்டிருந்துள்ள மூவுலகையும் என்று கொள்ளுவது மற்றொருவகை.

ஆக இவ்வளவையும், தன்வயிற்றில் கொண்டு—தன்னுடைய ஸங்கல்பஸஹஸ்ரைகதேசத்தாலே நடத்திக்கொண்டு; (அல்லது) வயிற்றிலே கொண்டு. [நின்ற வண்ணம் நின்ற மாலை] இவற்றையெல்லாம் தம் வயிற்றிலே கொண்ட விடத்திலும் ஒரு விகாரமின்றிக்கே முன்புபோலே நின்ற ஸர்வேச்வரனை என்றபடி [வயிற்றில் கொண்டு மன்னவைத்தேன்] விபூதி விசிஷ்டனான ஸர்வேச்வரனை என்னுடைய ஹ்ருதயத்திலே பேராதபடி வைத்தேனென்கை. ... ... ... ... ... 9

3522 வைத்தேன்மதியால் எனதுள்ளத்தகத்தே *
எய்த்தேயொழிவேனல்லேன் என்றுமெப்போதும் *
மொய்த்தேய்திரைமோது தண்பாற்கடலுளால் *
பைத்தேய் சுடர்ப்பாம்பணைநம்பரனையே. 10

| | | | |
|---|---|---|---|
| மொய்த்து எய் திரை மோது | செறித்து எய்ந்த அலைகள் மோதப்பெற்ற | எனது உள்ளத்து அகத்தே | என்னெஞ்சினுள்ளே |
| தண் பாற் கடலுள் | குளிர்ந்த திருப்பாற்கடலிலே | வைத்தேன் | பொருந்த வைத்தேன்; |
| பைத்து எய் சுடர் பாம்பு அணை நம் பரனை | படமெடுத்துத் தகுதியான தேஜஸ்ஸையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடைய எம்பெருமானை | என்றும் எப்போதும் எய்த்தே ஒழிவேன் அல்லேன் | இனியொருநாளும் இளைத்துத் தளரமாட்டேன். |
| மதியால் | அனுமதியாலே | | |

* * *—இப்படி யென்னுள்ளே புகுந்தவனை நான் இனியொருநாளும் விட்டு வருந்தகில்லேனென்கிறார். பின்னடிகளை முன்னே அந்வயித்துக்கொண்டு பிறகு முன்னடிகளை அந்வயிப்பது. * அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப்பாவையுந்தானும் அகம்படி வந்து புகுந்து, பரவைத்திரை பலமோதப்பள்ளி கொள்கின்ற பிரான் * என்று பெரியாழ்வார் பெற்றபேறு இவ்வாழ்வார் தாமும் பெற்றதாக விளங்கிற்று. ... ... ... ... 10

3523 சுடர்ப்பாம்பணைநம்பரனைத் திருமாலை *
அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்து இப்பத்தும்சன்மம் *
விட * தேய்ந்தறநோக்கும் தன்கண்கள்சிவந்தே. 11

| | |
|---|---|
| சுடர் பாம்பு அணை நம் பரனை திருமாலை | தேசு மிக்க சேஷசயனனாய் அஸ்மத்ஸ்வாமியான திருமாலை |
| அடி சேர் வகை வண் குருகூர் சடகோபன் | திருவடி பணிகையையே இயல்வாகவுடையவரான ஆழ்வார் |
| முடிப்பான் சொன்ன | ஸம்ஸார ஸம்பந்தத்தை முடிப்பதற்காக அருளிச்செய்த |
| ஆயிரத்து | ஆயிரத்திலுள் |
| இ பத்தும் | இப்பதிகம் |
| சன்மம் அற தேய்ந்து விட | பிறப்பானது நன்ருகத் தொலைந்துபோம்படி |
| தன் கண்கள் சிவந்து நோக்கும் | தன் கண்கள் சிவக்கப்பார்க்கும். |

* * *—இத்திருவாய்மொழி கற்கைக்குப் பயனாக ஜன்மஸம்பந்த நிவ்ருத்தியை யருளிச் செய்கிறார். பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வான் மடியிலே பெரிய பிராட்டியாரோடே யெழுந்தருளி யிருக்கக் கண்டநுபவிக்கையே முக்தர்கள்பெறும் பேருதலால் அது முதலடியால் ஒருவாறு ஸூசிதமாகிறது.

'அடிச்சேர்வகை' என்பதைச் சடகோபனிடத்தே அந்வயித்து 'திருவடிகளிற் சேருகையே தமக்கு ஸ்வபாவமான ஆழ்வார்' என்பது ஒரு யோஜனை. "அடிச் சேர் வகை முடிப்பான் வண்குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்று இயைத்து, திருவடிகளிலே சேரும்படியைத் தலைக்கட்டிக் கொள்ளுகைக்காக அருளிச் செய்த ஆயிரம்-என்பது மற்றொரு யோஜனை.

அசேதநமான பதிகத்திற்குக் கண்களிருப்பதாக வைத்து "தன்கண்கள் சிவந்து நோக்கும்" என்றது—ஜந்மவிநாச ஹேதுத்வத்தால் திருவாய்மொழியைப் புருஷ ஸமாதியாலே சொன்னபடி. ... .... ... ... ... 11

எட்டாம்பத்து ஏழாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி—கண்கள் சிவந்து.

உரையவதாரிகை :—*மாயக்கூத்தாவென்கிற திருவாய்மொழியில் ஆழ்வாருடைய விடாய் அபரிமிதமாகவன்றே இருந்தது; அந்த விடாயெல்லாம் ஆறும்படி எம்பெருமான் வந்து கலந்து தன் விடாயுந் தீர்ந்து இவரைப்பெற்ற பேற்றாலே பரம்ப்ரீதனாயிருந்தான். கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் தம்முடைய பரமானந்தத்தைப் பேசும்போது "சிறியேனுடைச் சிந்தையுள்" என்றாரே; அந்தச் சொல்லை எம்பெருமான் மிகவும் ஆராய்ந்தான்; 'அந்தோ! இவர் சிறியேனென்று தம்முடைய நைச்சியத்தை யநுஸந்திக்கத் தொடங்கிவிட்டார், ஏற்கெனவே *வளவேழுலகு பதிகம் முதலானவற்றில் தலைகாட்டி ஒருவாறு மடிந்த நைச்யாநுஸந்தானம் மறுபடியும் தலைகாட்டத் தொடங்கிற்றுப்போலும்; இன்னமும் இது முற்றிவிட்டால் பிறகு பரிஹரிப்பது அரிதாகுமே; ஆதலால் இப்போதே அதனை வேரறக் களைந்திடுதல் நன்று' என்றெண்ணி, இவர் நைச்யத்திற்கு ஆஸ்பதமாக நினைத்திருக்கிற ஆத்மவஸ்துவினுடைய பெருமையை இவர் நெஞ்சிலே படுத்த வேணுமென்று பார்த்து அது செய்தருளுகிறான்; அது செய்யுமிடத்தில் 'உம்முடைய ஆத்மஸ்வரூப மிருக்கும்படி காட்டுகிறேன் வாரீர்' என்றால் 'மின்மினி போலே யிருக்கிறவிதனை நீ காட்டிடவும் நான் காணவும் வேணுமோ?' என்று சொல்லி இசையாதொழிவரிவர்; மேலும் *அவ்வாயன்றி யானறியேன் மற்றருளே* என்று இவர் நம் வடிவழகிலே துவக்குண்டிருக்கிறாராகையாலே நம்மை முன்னிட்டு அவ்வாத்ம ஸ்வரூபவைலக்ஷண்யத்தைக் காட்டிக்

கொடுப்போம் என்று பார்த்து 'வாரீர் ஆழ்வீர்! நம்முடைய வடிவழகிருக்கிறபடி கண்டீரே; நம்மைக்காணுங் காட்சியிலே உம்மையும் காணலாம்படியிருக்கின்றது காணும்' என்று சொல்லித் தன்னுடைய வடிவழகை முந்துறமுன்னம் அநுபவிப்பித்து, தனக்குத் திருவாபரணங்கள்போலே மிகவும் போக்யமுமாய் அத்யந்த சேஷமுமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுக்க, அதனை யநுபவித்துப் பேசுகிறதாயிற்று இத்திருவாய்மொழி. ... ... .... ... *

3525 கண்கள்சிவந்துபெரியவாய் வாயுஞ்சிவந்துகனிந்து * உள்ளே
வெண்பலிலகுசுடரிலகு விலகுமகரகுண்டலத்தன் *
கொண்டல்வண்ணன்சுடர்முடியன் நான்குதோளன்குனிசார்ங்கன் *
ஒண்சங்கதைவாளாழியானொருவன் அடியேனுள்ளானே. 1

| | | | |
|---|---|---|---|
| கண்கள் சிவந்து பெரிய ஆய் | திருக்கண்கள் சிவந்தும் பெருத்துமிருப்பனவாய் | கொண்டல் வண்ணன் | காள மேக நிறத்தனாய் |
| வாயும் சிவந்து கனிந்து | திருவதரமும் சிவந்து பழுத்து | சுடர் முடியன் | ஒளிமிக்க திருவபிஷேகத்தையுடையனாய் |
| உள்ளே | அகவாயிலே | நான்கு தோளன் | திருத்தோள்கள் நான்குமுடையனாய் |
| வெண் பல் இலகு சுடர் | வெளுத்த திருமுத்துக்களினுடைய விளங்குகிற சுடரையுடையனாய் | குனி சார்ங்கன் | வளைந்த சார்ங்கவில்லையுடையனாய் |
| இலகு விலகு மகர குண்டலத்தன் | மிக விளங்கி அசைகிற மகர குண்டலங்களையுமுடையனாய் | ஒண் சங்கு கதை வாள் ஆழியான் ஒருவன் | அழகிய சங்கும் கதையும் வாளும் ஆழியுமுடையனான வொருவன் |
| | | அடியேன் உள்ளான் | அடியேனுடைய உள்ளே விளங்கா நின்றான். |

* * *—எம்பெருமான் ஆழ்வாரோடு கலந்ததனால் தனக்குப் புதுக்கணித்த திவ்ய ஸௌந்தர்யத்தைக் காட்டக்கண்டு அநுபவித்து ஆனந்தம் பொங்கிப் பேசுகிற பாசுரமிது. கண்கள் சிவந்து என்றது எம்பெருமானது இயற்கையான கண்ணழகைச் சொல்லுகிறபடியன்று; *மாயக்கூத்தன் பதிகத்தில் *கண்ணும் வாயும் துவர்ந்தடியேன்* என்று, ஆழ்வார் வைவர்ணிய மடைந்திருந்தபடிக்கேற்ப எம்பெருமானும் வைவர்ணியமடைந்திருந்து, பிறகு *இருத்தும் வியந்து பதிகத்தில் ஆழ்வார் ஆனந்த மிகுதியினால் வைவர்ணியம் நீங்கித் தன்னிறம்பெற, எம்பெருமான்றானும் தன்னிறம் பெற்றபடி சொல்லுகிறது. ஆசார்யஹ்ருதயத்தில் (58) "மூவாறு மாஸம் மோஹித்து" என்றவிடத்து வியாக்கியானத்தில்—"*மாயக்கூத்தனில் தாம் கண்ணும் வாயும் துவர்ந்தாப்போலே தம்மைப் பிரிகையாலே அவன் கண்ணும் வாயும் துவர்ந்து தம்மோடு கலந்தபின்பு அவை தன்னிறம் பெற்றபடியை யநுஸந்தித்து 'ஈதென்ன ப்ரகாரம்!' என்று ஆறு மாஸம் மோஹித்து" என்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்தி இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

[பெரியவாய்] பெரிய ஆய் என்று பிரிக்க. திருக்கண்கள் தன்னிறம் பெற்ற வளவேயல்லாமல் பெருமையும் பெற்றனவாம். இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்—"*ஸதைகரூப ரூபாய என்கிறது கர்ம நிபந்தனமான விகாரங்களில்லையென்ற வித்தனையொழிய, ஆச்ரித ஸம்ச்லேஷத்தாலே பிறக்கும் விகாரமில்லையென்கிறதன்றே."

வாயும் சிவந்துகனிந்து—திருக்கண்களேயன்றிக்கே திருவதரமும் தன்னிறம் பெற்றபடி சொல்லுகிறது. உள்ளே வெண்பலிலகுசுடர்—திருவதரத்தில் சிவப்புக்குப் பரபாகசோபையான வெண்ணிறமுடைய திருமுத்துக்களிருக்கிறபடி. இலகுவிலகு மகரகுண்டலத்தன்=திருக்குழலில் இருட்சிக்கு ப்ரகாசகமாய் அலைந்துவருகிற திருமகர குண்டலங்கள் விளங்குகிறபடி. கொண்டல்வண்ணன் — கார்காலத்துக் காளமேகம்

போலே வடிவும் குளிர்ந்து கருமை பெற்றது. இதற்கு முன்பு ஆழ்வாருடம்பு வெளுத் திருந்தாப்போலே இவ்வடிவும் வெளுத்திருந்தாகவேணும். சுடர்முடியன்=தன்னழ காலே எல்லாவழகுகளையும் முட்டாக்கிடவல்ல திருவபிஷேகத்தையுடையவன். ஆழ்வார் * மாயக்கூத்தனில் பட்டவிடாய் தீர்ந்தபின்பே எம்பெருமான் திருமுடியில் திருவபிஷேகம் தரிப்புப்பெற்றதாயிற்று. *மாயக்கூத்தனில் *முடிசேர் சென்னியம்மா* என்று ஆழ்வார் கதறினது எம்பெருமான் திருவுள்ளத்தில் பட்டிருந்ததுபோலும். நான்கு தோளன் — ஆழ்வாரையணையப்பெற்றபின் திருத்தோள்களும் பணைத்தபடி. குனிசார்ங்க னென்று தொடங்கிப் பஞ்சாயுதாழ்வார்களின் சேர்த்தியை யநுபவித்துப் பேசுகிறார்; இவற்றை ஆயுதமாக நினையாதே ஆபரணங்களாகவே திருவுள்ளம்பற்றி யிருக்கிறபடி. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய வாசாமகோசரமான வைல க்ஷண்யத்தை நோக்கி ஒருவன் என்கிறார்.

சங்கு கதை + சங்குகதை என்றாக வேண்டுமிடத்து, 'சங்கதை' என்றானது கடைக் குறை.

ஆழ்வார் விஷயமான * யத்கோஸஹஸ்ரமபஹந்தி * என்னும் ச்லோகத்தில் * நாராயணோ வஸதி யத்ர ஸசங்கசக்ர: * என்கிற இரண்டாம் பாதத்தோடு இப்பாசுரத்தை யோஜித்துக் கொள்வது. ... ... ... ... ... ... 1

3525 அடியேனுள்ளானுடலுள்ளான் அண்டத்தகத்தான்புறத்துள்ளான் *
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன் பரம்பரன் *
கடிசேர்நாற்றத்துள்ளாலை இன்பத்துன்பக்கழிநேர்மை *
ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரோருவனே. 2

| | | | |
|---|---|---|---|
| அண்டத்து அகத்தான் | அண்டத்துக்குட்பட்ட ஸகல பதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய் | ஆலையுள் | தேனிலுள்ள |
| புறத்து உள்ளான் | அண்டத்துக்குப் புறம்புபட்ட ஸகல பதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய் | இன்பம் | சுவையினுடைய |
| இதுவே படி என்று உரைக்கல் ஆம்படியன் அல்லன் | இதுவே ப்ரகாரமென்று சொல்லலாவதொரு ப்ரகாரத்தை யுடையனல்லாதவனாய் | துன்பம் கழி நேர்மை | கோதுகழிந்த ஸாரமான பாகம் போலிருக்கிற |
| பரம்பரன் | பராத்பரனாய் | ஒடியா | விச்சேத மற்ற நித்யமான |
| கடி நாற்றம் சேர் | விலக்ஷணமான பரிமளங்களெல்லாம் சேர்ந்த | இன்பம் பெருமையோன் | ஆனந்தமயனாய் |
| | | உணர்வில் உம்பர் ஒருவன் | அறிவு விஷயத்தில் மேற்பட்டிருப்பவனை ஒருவன் |
| | | அடியேன் உள்ளான் | ஆத்மாவில் அந்தராத்மாவாயிரா நின்றான்; |
| | | உடல் உள்ளான் | சரீரத்தினுள்ளுமிரா நின்றான். |

* * *—இப்பாட்டின் ஈட்டுத் தொடக்கத்திலுள்ள ஸ்ரீஸூக்திகளிவை காணீர்— "திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்துநின்று போரப்புக்கவாறே 'ஆழ்வார் * அடியேனுள்ளானென்றபடி கண்டாயே' என்ன, க்ருதார்த்தனானேனென்று போந்தானும்; என்னுள்ளா னென்னவேண்டுமிடத்திலே அடியேனுள்ளா னென்கையாலே ஜ்ஞாநாநந்தங்களன்று வஸ்துவுக்கு நிரூபகம், சேஷத்வ மென்கை: ஜ்ஞாநாநந்தங்களிலுமந்தரங்கம் பகவத் சேஷத்வ மென்கை" என்று. ஸ்ரீ வசனபூஷணத்திலும் (33) "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்த மென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்" என்றவிடத்து வியாக்கியானத்தில் "* அடியேனுள்ளா னென்றாரிறே ஆழ்வார்; திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்துநின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறே இது" என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஸ்ரீ ஸூக்தி. (இவ்விடத்தில் ஒரு விமர்சம்.) ஆழ்வாரருளிச் செயல்களில் 'அடியேன்' என்னுஞ் சொல் ஆயிரமிடங்களில்

வருகின்றது; முதற் பிரபந்தமான திருவிருத்தத்தின் முதற்பாட்டிலேயே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்றுள்ளது; ப்ரக்ருதத்திலும் கீழ்ப்பாட்டின் முடிவில் 'ஒருவனடியேனுள்ளானே' என்றுள்ளது. இப்படி பலபலவிடங்களிலுள்ள அடியே னென்ற சொல்லைவிட்டு இப்பாட்டிலுள்ள 'அடியேனை' எடுத்துக் காட்டி யருள்வதில் என்ன விசேஷமென்று தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்; தெளிவாகத் தெரிவிப்போமிங்கு.

எம்பெருமானார் கோஷ்டியிலே உபய வேதாந்த க்ரந்தகாலக்ஷேபம் நடவாநிற்க, ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிரூபகம் எது?" என்று திருவோலக்கத்திலே பிரஸ்தாவம் நிகழ்ந்ததாம்; ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளி யிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்ய முகேந வெளியிட வேணுமென்று திருவுள்ளம்பற்றி ஆழ்வானை நோக்கி 'வாரீர் ' ஆழ் வான்! திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பியை ஸேவித்து இதனை யறிந்துவாரும்' என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பி ஸந்நிதிக்கெழுந்தருளித் தெண்டன் ஸமர்ப்பித்துச் செய்தியை விண்ணப்பஞ்செய்து ஆறுமாதம் ஸேவித்திருந்தும் அவர் திருவுள்ள மிரங்கக் காணமையாலே புறப்படப்புக, நம்பி அவரையழைத்து "மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் அடியேனுள்ளானுடலுள்ளா னென்றருளிச் செய்தபடி கண்டாயே" என்று மொழிந்தருள, ஆழ்வானும் தந்யோஸ்மி யென்று எழுந்தருளி இத்தை எம்பெரு மானார் திருவடிகளிலே விண்ணப்பஞ் செய்ய, மஹாநிதியான இந்த ஸ்ரீஸூக்தியின் உட் பொருளைத் திருவோலக்கத்திலே விவரித்தருளினர். அடியே னென்கிற சொல் மற்றும் பலவிடங்களில் வந்தாலும் அவ்விடங்களி லெல்லாம் தேஹவிசிஷ்டனான ஆத்மாவே அடியேனென்கிற சொல்லுக்குப் பொருளாகும். "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்கிற விடத்தை யெடுத்துக் கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்யமுடியாதன்றே; தேஹ விசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை. எந்த இடத்திலுமிப்படியே. * அடியேன் சிறிய ஞானத்தன் * (திருவாய்மொழி 1—6—7) என்கிற விடத்தில் ஞானத்த னென்று ஞானமுடைமை சொல்லி யிருப்ப தனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே அங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவைத்தானே சொல்லியாக வேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக்கூடும்; அங்கும் தேஹ விசிஷ்டனான ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனெனில் காண்பானலற்றுவன் என்னும் க்ரியையிலே அச்சொல் அந்வயிக்க வேண்டு தலால் வெறும் ஆத்மா அலற்ற முடியாதாகையாலே. ஆகவே அடியேனென்ற சொல் எந்த விடத்திலும் தேஹ விசிஷ்டனான ஆத்மாவையே சொல்லி நிற்குமென்பது திண்ண மாயிற்று. * ஒருவனடியேனுள்ளானே * என்ற கீழ்ப்பாட்டிலுமப்படியே. * அடியே னுள்ளா னுடலுள்ளான் * என்னுமிவ்விடத்தில் மாத்திரம் அடியே னென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷண பூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடி யேனில் தேஹத்தைச் சேர்த்து அர்த்தங் கொள்ளவேண்டிய அவச்யமில்லை. எம்பெரு மான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித் திருக்குமவன் என்று சொல்லவேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவ னென்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ர வேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு அடியேனுள்ளானென்று வாசகமிடப் பட்டிருக்கின்றது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லி யிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளா னென்னும் பொருள் தேறிவிடும்; ஆனால் ஆழ்வார் அப்படியருளிச் செய்யாமல் அடியேனுள்ளா னென்றருளிச் செய்திருக்கை யாலே 'ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம்' என்பது ஆழ்வார் திருவுள்ள மென்று அறுதியிடலாகிறது.

இந்த மருமம் குருகுலவாஸ பாக்கியமில்லாதார்க்கு அறிவரிது. திருக்கோட்டியூர் நம்பி ஆளவந்தார் ஸ்ரீ பாதத்தில்கேட்ட மஹார்த்தமிது. இது ஆழ்வான் வழியாக ஸ்வாமிக்கு நிதிபோல் கிடைத்தபடியால் இந்த மஹார்த்தம் திருவுள்ளத்திலேயே ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் வெளியிடப்பெற்றது. கீதையில் (7—16) * சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச * என்றவிடத்தில் ஜ்ஞாநீ என்பதற்கு "விஷ்ணோ: தத்வவித்" என்று சங்கராசார்யர் எழுதி வைத்த பொருள்; நம் ஸ்வாமி அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷைகரஸ ஆத்மஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்றருளிச் செய்தார்; இது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியாகிற அமுத வெள்ளத்தில் ஆழ்ந்திருப்பது காரணமாகவே யாகும்.

ஆக, இங்கு அடியேனுள்ளானென்றது ஆழ்வாரது ஆத்மாவில் வியாபித்தவனென்கை. உடலுள்ளானென்றது — அவருடைய தேஹத்திலும் வியாபித்துள்ளானென்றபடி. அண்டந் தகத்தான் புறத்துள்ளான்—அண்டத்துக்குட்பட்ட பதார்த்தங்களோடு வெளிப்பட்ட பதார்த்தங்களோடு வாசியற எங்குமுள்ளானென்றபடி. இநுவே படியென்றுரைக்கலாம்படியனல்லன் = இதற்கு இரண்டுவகையாகப் பொருள்கொள்ளலாம்;— இன்னபடிப்பட்டவனென்று உரைக்கவொண்ணாதவன் என்றும், ஸர்வாத்மநா தன்னோடொத்திருப்பதோர் உபமானத்தை யுடையனல்லாதவன் என்றும். "ஸர்வகதமுமாய் ஸர்வநிர்வாஹகமுமாயிருப்பதொரு வஸ்துவுண்டாகிலிறே ஒப்புச் சொல்லலாவது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. பரம்பரன்—மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன் என்று சொல்லலாமத்தனை.

கடிசேர்நாற்றத்தென்று தொடங்கிப் பின்னடிகளின் கருத்து ஆனந்தமயனென்கை. அல்பத்வமும் அஸ்திரத்வமுமாகிற கோதுகழிந்த ஆனந்தமே வடிவானவனென்பது பரமதாற்பரியம். "அநாக்ராததுக்ககந்த நித்யஸித்த நிரவதிகாநந்தத்தை யுடையவன்" என்பது ஆறுயிரப்படி.

உணர்வில்உம்பரொருவன் = ஞானத்தில் வந்தாலோ மிகவும் மேற்பட்டவன். அத்விதீய ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனென்றதாயிற்று. இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் அடியேனுள்ளானுடலுள்ளான்—என்று யோஜிப்பது. என்னுடைய ஆத்மாவிலும் ஹேயமான சரீரத்திலுமுள்ளான். ... ... ... ... ... 2

3526 உணர்விலும்பரொருவனை அவனதருளாலுறல்பொருட்டு * என்
உணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே *
உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும்பழுதேயாம் *
உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானுந்தானாயொழிந்தானே. 3

| | |
|---|---|
| உணர்வில் உம்பர் ஒருவனை | அயர்வறுமமரர்களதிபதியை |
| அவனது அருளால் | அவனுடைய க்ருபையாலே |
| உறல் பொருட்டு | கிட்டுகைக்காக |
| என் உணர்வின் உள்ளே | என்னுடைய அபேக்ஷையாகிற ஞானத்துக்குள்ளே |
| இருத்தினேன் | இருக்கச் செய்தேன்; |
| அதுவும் | அந்த அபேக்ஷை பிறந்ததும் |
| அவனது இன் அருளே | அவனுடைய நிர்ஹேதுக க்ருபையடியாக உண்டானதே; |

(இப்படி என்னை இசைவித்து என்னுள்ளே புகுந்தவன்)

| | |
|---|---|
| உணர்வும் உயிரும் உடம்பும் | விஷயங்களைப் பற்றுகிற ஞானமும் பிராணனும் சரீரமும் |
| மற்று உலப்பிலனவும் | மற்றுமுண்டான அளவற்ற ப்ராக்ருதவிகாரங்களும் |
| பழுதே ஆம் உணர்வை பெற ஊர்ந்து | ஹேயமென்கிற உணர்வைப் பெறும்படியாக நடத்தி |
| இறவு ஏறி | ஆத்மஸ்வரூபத்தைக் காட்டித் தருகையாகிற முடிவளவும் நடத்தி |
| யானும் தான் ஆய் ஒழிந்தான் | என்னைச் சொல்லும் சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படியான அளவும் காட்டித்தந்தான். |

* * *—எம்பெருமான் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையினாலே தன் விஷயத்தில் இசைவையுமுண்டாக்கி என்னோடே கலந்து அந்தக்கலவி நிலைத்து நிற்பதற்காக, விலக்ஷணமாய்த் தனக்கு அநந்யார்ஹமான ஆத்மஸ்வரூபத்தையுங் காட்டிக்கொடுத்தருளினானென்கிறார். உணர்விலும்பரொருவனை என்றதற்கு * அயர்வறு மமரர்களதிபதியானவனை யென்பது தேர்ந்தபொருள். உணர்விலும்பர் என்றது உணர்வின்மிக்க நித்யஸூரிகளென்றபடி. அவர்களிற்காட்டில் வேறுபடாத வொருவன் எனவே, அவர்களது ஸத்தை முதலியவை தன்னதீனமாயிருக்கையாலே அவர்களைச் சொல்லுகிற சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி யிருப்பானொருவனென்றதாயிற்று. *அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்றுகொலோ* என்று பாரித்தவராகையாலே ப்ராப்திக்குறுப்பாக அவ்வடியார்களைக் கூட்டிப்பேசுகிறாரென்றுணர்க. அவனதருளாலுறல்பொருட்டு = அவனுடைய ப்ரஸாதத்தாலே அடைதற்பொருட்டு. என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் = அவனை என்னுடைய ஞானத்துக்கு விஷயமாக்கினேன்—இச்சித்தேனென்றபடி. இந்த இச்சைதானும் தம்மடியாக வந்ததன்று என்கிறார்மேலே அதுவுமவனதின்னருளேயென்று. இந்த இச்சை தோன்றினதும் அவன் ப்ரஸாதத்தாலே யென்றபடி.

இப்பதிகத்தில், முதலிலிருந்து இரண்டரைப்பாட்டாலே தன்னையனுபவிப்பித்து அனந்தரம் ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்தானென்று நம் ஆசாரியர்கள் நிர்வஹிப்பதுண்டே, அதன்படி இரண்டரைப்பாட்டு அற்றது. இனிமேல் ஆத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தைக்காட்டிக் கொடுத்தமை சொல்லுகிறது.

உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும் பழுதேயாமுணர்வைப் பெறவூர்ந்து = விஷயங்களைப்பற்றின ஞானமும் பிராணனும் சரீரமும் மற்றும் அபரிச்சேத்யங்களான ப்ரக்ருதி விகாரங்களும் ப்ரக்ருதியும் ஹேயம்—என்னுமிவ்வறிவைப் பெறும்படி நடத்தினபடியைச் சொல்லுகிறது. இவையெல்லாம் அபுருஷார்த்தமென்று உணர்த்தி என்றபடி. இறவேறி = முடியப்போய் என்பது பொருள். 'ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் பகவச்சேஷதைகரஸமாயிருக்கும் ஆத்மவஸ்து' என்கிற எல்லை நிலமான ஞானத்தையுண்டாக்கி யென்றபடி. யானும் தானுயொழிந்தான் = அவ்வளவோடும் நில்லாமல், என்னைச் சொல்லும் சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரமாய்க் கொண்டு சேஷம் என்னுமிடத்தையும் காட்டித்தந்தானென்கை. இத்தால் அபேதச்ருதிகளுக்கு அத்வைதிகள் நிர்வஹிக்கிறபடியன்றிக்கே நம்மவர்கள் நிர்வஹிக்கிற புடை காட்டப்பட்டதாயிற்று. — ... 3

3527 யானுந்தானுயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை *
தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை *
தேனும்பாலுங்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து * என்
ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே. 4

| | | | |
|---|---|---|---|
| யாதும் யவர்க்கும்முன்னோனை | ஸகல சேதநாசேதநங்களுக்கும் காரண பூதனும் | என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை | என்னுடைய சரீரத்திலும் பிராணனிலும் ஞானத்திலும் வியாபித்துநின்ற ஆத்மாவை சரீரமாக வுடையனுமாய் |
| தானும் சிவனும் பிரமனும் ஆகி பணைத்த தனி முதலை | தானென தன்மையனையும் சிவனையும் பிரமனையும் விஸ்த்ருதனை ப்ரதான காரண பூதனும். | யானும் தானுய் ஒழிந்தானை உணர்ந்தேன் | நானும் தானுய் விட்டவனை எம்பெருமானை அறியப் பெற்றேன். |
| தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகி தித்தித்து | தனக்குப் பரமபோக்யமாய்க் கொண்டு ரஸித்து | | |

* * *—இவ்வாத்மா தனக்குப் பரமபோக்யமென்னுமிடத்தையும் காட்டித் தந்தருளினபடியையருளிச் செய்கிறாரிதில். இப்பாட்டின் முடிவிலுள்ள "நின்றவொன்றையுணர்ந்தேனே" என்பதன் பொருளை முன்னம் தெளியவேண்டும். நின்றவொன்று என்கிறவிது ஜீவாத்மஸ்வரூபத்தைச் சொல்லுமதாம். ஆனாலும் ஆச்ரயமாய் ப்ரகாரியான் பரமாத்மாவளவும் சொல்லி நிற்கிறது. ஏனென்னில், யாதும் யவர்க்கும்

முன்னேனென்றும், தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலென்றும்...... கீழே சொன்ன விசேஷணங்கள் பரமபுருஷனிடத்தில் அந்வயிக்கக்கூடுமேயல்லது ஆத்மஸ்வரூபத்தில் அந்வயிக்கமாட்டாவே. ஆத்மஸ்வரூபத்தின் விஷயத்தைத் தெரிவித்தபடியைச் சொல்லுமிவ்விடத்தில் ஆத்மஸ்வரூபத்தைத் தனிப்பட எடுத்துக் காட்டாதே பரமாத்மபர்யந்தமாகச் சொல்லிநிற்பதானது-அவ்வாத்மஸ்வரூபம் தனித்து நிற்கமாட்டாதே பரமாத்மாவைப்பற்றியே நிற்குமதென்கிற மருமத்தைக் காட்டுதற்காம். இப்படி பரமாத்மாவளவுஞ்செல்ல வாசகமிட்டிருந்தாலும் ஆத்மஸ்வரூபத்தளவிலே அர்த்தம் கொள்ளவேண்டும். *தேனும்பாலும் கன்னலுமமுது மாகித் தித்தித்து* என்பதனால் இங்குச் சொல்லப்பட்ட போக்யதை எம்பெருமானுடையதன்று, ஆத்மாவினுடையது. பாசுரத்தைப் பார்க்கும்போது அந்த போக்யதை எம்பெருமானுடையது போல் தோற்றும்; அப்படி கொள்ளலாகாது. ப்ரகாரியான அவனுக்குச் சொன்னது ப்ரகாரத்தில் விவக்ஷையாலே யென்று உணர்க. ஆத்மாவிலே காட்டக்கண்ட தித்திப்பைப் பரமாத்மாவிலே யேற்றிச் சொன்னதாகக் கொள்க.

யாதும் யவர்க்கும் முன்னோனே யென்றது—ஸகல சேதநாசேதநங்களுக்கும் காரணபூதனேயென்றபடி. இப்போது இது சொல்லவேண்டிய அவச்யமென்ன? ஆத்மாவினுடைய போக்யதைதானே சொல்லவேண்டும், ஜகத்காரணத்வம் எதற்காகச் சொல்லுகிறது என்னில்; குறிக்கொண்டு கேண்மின்; இங்கு ஜகத்காரணத்வம் எப்படி சொல்லவேண்டியதன்றோ, அப்படியே, *தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை* என்பதும் சொல்லவேண்டியதன்றுதான்; ஆயினும் இவை ஏதுக்குச் சொல்லியிருக்கிறதென்னில்; விமுகரானவர்களைக் கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்துவிட்டான், ஐச்வர்யகாமரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஐச்வர்யங்களைக் கொடுத்து அதிகார பதவிகளைக் கொடுத்து விட்டான்; என்னளவிலோவென்னில், அங்ஙனே செய்யாதே, இவ்வாத்மா தனக்கு அநந்யார்ஹமாய் போக்யமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான் என்பது இங்கே விவக்ஷிதமென்றுணர்க.

என்னூனில் உயிரில் உணர்வினில் நின்றவொன்றை = என்சரீரத்திலும் பிராணனிலும் ஞானத்திலும் வியாபித்திருக்கின்ற ஆத்மாவைத் தனக்குச் சரீரமாகவுடையவனை என்றபடி. பாட்டின் முதலிலேயிருக்கிற 'யானுந்தானாயொழிந்தானை' என்பது இங்கே கூட்டிக்கொள்ளத் தக்கது. ஆத்மஸ்வரூபத்தைச் சரீரமாகவுடையவனாகையாலே யானும் தானாய்விட்டானென்றதாயிற்று. ... ... ... 4

3528 நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுண்ணேர்மையதுவிதுவென்று *
ஒன்றுமொருவர்க்குணரலாகாது உணர்ந்துமேலுங்காண்பரிது *
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று *
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே. 5

நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு — நித்யமாய் ஜ்ஞாநைகஸ்வரூபமான ஆத்ம வஸ்துவை எம்பெருமான் தனக்கு ப்ரகாரமாகக் காட்டிக்கொடுக்கக் கண்ட எனக்குப்போலே

அதன் நுண்ணேர்மை — அவ்வாத்மஸ்வரூபத்தின் ஸூக்ஷ்மமான வைலக்ஷண்யம்

அது இது என்று — அப்படிப்பட்டது இப்படிப்பட்டதென்று

ஒருவர்க்கு ஒன்றும் உணரல் ஆகாது உணர்ந்தும் — மாஜ்ஞானியர்க்கும் சிறிதும் அறியப்போகாது; வருந்தி ஒருவாறு அறிந்தாலும்

மேலும் காண்பு அரிது — ஸாக்ஷாத்கரிக்கப் போகாது;

சென்று சென்று — மேன்மேலும்

பரம்பரம் ஆய் — ஒன்றுக்கொன்று மேற்பட்டதாகி

யாதும் இன்றி தேய்ந்து அற்று — அவற்றின் ஸ்வபாவம் ஒன்றுமின்றிக்கே அவற்றோடு தொற்றற்று

நன்று தீது என்று அறிவு அரிது ஆய் — ப்ராக்ருதங்களுக்குண்டான நன்மை தீமைகள் அறியவரிதாய்

நன்று ஆய் — ஸர்வ விலக்ஷணமாய்

ஞானம்கடந்தது — அவற்றைப் பற்றின ஞானத்திற்கு விஷயமன்றியேயிருந்தது.

* * *—எம்பெருமானது திருவருளால் நானறிந்த ஆத்மவஸ்து வேறொருவர்க்கு மறியக்கூடியதன்று ; அறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கக்கூடியதன்று என்கிறதிப்பாட்டில். நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு=தேஹமென்ன, இந்திரியமென்ன, மநஸ்ஸென்ன, ப்ராணமென்ன, புத்தியென்ன ஆகிய இவற்றிற்காட்டிலும் வேறுபட்டதாய், இவை யழிந்தாலுங்கூட அழியாதேயிருந்து இவற்றுக்கு நியாமகனுமாய் விலக்ஷணமான ஆத்மாவை [ஆத்மஸ்வரூபத்தையென்றபடி.] எம்பெருமான் காட்டிக்கொடுக்கக் கண்ட வெனக்குப் போலென்றபடி. எம்பெருமான் ஆத்மஸ்வரூபத்தைத் தனிப்படக் காட்டிக்கொடுத்தானா ? அல்லது தனக்கு ப்ரகாரமாகவே காட்டிக்கொடுத்தானா ? என்னும் விசாரத்தில் இரண்டு படியாகவும் ஆசார்யர்களின் நிர்வாஹமுண்டு ; தனிப் படக் காட்டிக்கொடுத்ததாக எம்பாருடைய நிர்வாஹம். ப்ரகாரமான வேஷத்திலே காட்டிக் கொடுத்ததாக ஆண்டானுடைய நிர்வாஹம். இரண்டுபடியும் ஸங்கதமே யென்க. "உணர்ந்தேனுக்கு" என்பதனால் ஆத்ம ஸ்வரூபத்தை ஆழ்வார் இப்போது தான் உணரப்பெற்றாராகத் தோன்றுகிறது ; *மயர்வறமதிநலமருளப்பெற்றபோதே இதையும் உணர்ந்தாராகவேண்டும் ; அப்போது உணர்ந்திலர் என்று சொல்லப் போகாது ; ஆனாலும் *உயர்வறவுயர்நல முடையவன்* என்று அவனுடைய திருக் கல்யாண குணநுபவத்திலே யிழிந்தவராகையாலே மின்மினிபோலே யிருக்கிற ஆத்ம ஸ்வரூபத்தில் இதற்கு முன்பு கண்வைத்திலர் ; பக்திரூபாபந்நஜ்ஞானமுடைமையாலே இத்தை அநுஸந்திக்கைக்கு அவகாசமும் பெற்றிலர். இப்போது கீழ்த்திருவாய் மொழியில் இவர் "சிறியேனுடை" என்று சொன்ன ப்ரஸங்கத்தாலே சிறிதான ஆத்ம ஸ்வரூபத்தின் பெருமையை நினைப்பூட்ட வேண்டியது எம்பெருமானுக்கு ப்ராப்த மாகவே அவன் உணர்த்த உணர்ந்ததாக இங்கு அருளிச்செய்கிறபடி.

உணரப்புக்கவாறே, இது இருந்தபடி என் ! என்று வியந்து அருளிச்செய்கிறார் அதனுண்ணேர்மை இத்யாதியால். 'அதனுள் நேர்மை' என்றும், 'அதன் நுண் நேர்மை' என்றும் இருவகையாகவும் பிரிப்பதுண்டு. அவ்வாத்ம வஸ்துவின் வைலக்ஷண்யமானது எப்படிப்பட்ட மாஜ்ஞானியர்க்கும் ஏகதேசமுமறியப் போகா தென்றபடி. உணர்ந்து மேலுங் காண்பரிது=அறிந்தால் பின்னை ஸாக்ஷாத் கரிக்கவும் போகாது.

எம்பெருமான் காட்டிக் கொடுக்கக் கண்ட தமக்குத் தெரிந்தபடியை விவரித் துரைக்கிறார் பின்னடிகளில் ; சென்று சென்று பரம்பரமாய்=தைத்திரீயோபநிஷத்தில் முதலில் அந்நமயனைச் சொல்லி, அதற்குமேல் ப்ராணமயனைச் சொல்லி, அதற்குமேல் மநோமயனைச் சொல்லி, அதற்கு மேலாக *அந்யோந்தர ஆத்மா விஜ்ஞாந மய: *என்று ஆத்ம ப்ரஸ்தாவம் செய்திருப்பதால் அதை யிட்டுச் சென்று சென்று பரம்பரமாய் என்னப் பட்டது. ஒன்றுக்குமேலொன்றாகச் செல்லுகிற க்ரமத்திலே மேம்பட்டதென்றபடி. *தேஹேந்த்ரியமந: ப்ராண தீப்யோந்ய:* என்கிறபடியே தேஹமென்ன இந்திரியமென்ன மநஸ்ஸென்ன ப்ராணனென்ன புத்தியென்ன இவற்றிற் காட்டிலும் மேம்பட்டிருக் கின்றமை சொன்னவாறுமாம். யாதுமின்றி=அவற்றினுடைய விகாரஸ்வபாவமொன்று மின்றியே, தேய்ந்தற்று=அவற்றோடு ஸம்பந்தலேசமுமற்று என்றபடி. நன்று தீதென்று அறிவரிதாய்=ப்ராக்ருதமாகையாலே நன்றென்றும் தீதென்றும் அறியவொண்ணாதே மிகவும் விலக்ஷணமாய் என்றபடி. புஷ்பத்தையும் கரியையும் கையில் கொண்டு பார்க்கும்போது புஷ்பம் நன்று, கரி தீது என்றறிகிறோம் ; தேன்மாங்கனியையும் வேப்பங்காயையும் கையிற்கொண்டு பார்க்கும்போதும் அங்ஙனேயறிகிறோம், இந்திரிய கோசரமாகையாலே அப்படி யறிகிறோம். இங்கு அதற்கு ப்ரஸக்தியில்லாமையாலே அவ்வறிவு உண்டாகமாட்டாதென்க. "நன்று தீதென்று அறிவரிது" என்று சொல்லி வைத்து உடனே 'நன்றாய்' என்கிறது—ஸர்வப்ரகாரத்தாலும் வ்யாவ்ருத்தமான ஜ்ஞாநாநந்த வைலக்ஷண்யத்தையுடைய தென்றவாறு. ஞானங்கடந்ததே=இந்திரியங்

களாலுண்டாகிற ஞானத்திற்கு எட்டாதது என்றபடி. ஆக இப்படிப்பட்ட ஆத்ம ஸ்வரூப வைலக்ஷண்யத்தை யாயிற்று ஆழ்வார்க்கு எம்பெருமான் காட்டித்தந்தது. 5

3529 நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து *
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழ் உலப்பிலதனையுணர்ந்துணர்ந்து *
சென்றாங்கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால் *
அன்றேயப்போதேவீடு அதுவேவீடுவீடாமே. 6

| | |
|---|---|
| ஞானம் கடந்து போய் | இந்திரிய கோசரமான விஷயங்களைத் தப்பிப்போய் |
| நல் இந்திரியம் எல்லாம் ஈர்த்து | கொடுமை மிக்க இந்திரியங்களையுங் கழித்து |
| ஒன்று ஆய் கிடந்த அரு பெரு உலப்பு இல் பாழ் அதனை உணர்ந்து உணர்ந்து | பிரிக்கமுடியாதபடி பொருந்தியிருக்கிற அரிய பெரிய முடிவு இல்லாத ப்ரக்ருதி தத்வத்தை ஆத்மாவிற் காட்டிலும் வேறு பட்டதாக வுணர்ந்து |
| நன்றாய் ஆங்கு சென்று | ஆத்ம ஸ்வரூபத்தளவுஞ் சென்று |
| இன்பம் துன்பங்கள் செற்று களைந்து | ஸுகதுக்கங்களுக்கு அடியான புண்ய பாபங்களையும் விட்டு |
| பசை அற்றால் | அவற்றில் ருசி வாஸனைகளும் கழியுண்டால் |
| அன்றே | அன்றைக்கே |
| அப்போதே | அந்த க்ஷணத்திலேயே |
| வீடு | ப்ரக்ருதிப்ராக்ருதங்களினின்று விடுபடுகையாகும்; |
| அதுவே வீடு வீடு ஆம் | அதுவே ஆத்மாநுபவ மோக்ஷமாம். |

* * *—யோகசாஸ்த்ரத்தில் ஆத்மஸ்வரூப ப்ராப்திக்கு உபாயமாகச் சொல்லப்படுகிற இந்திரியஜயம் முதலானவையாகிற யோகத்தாலே ப்ரக்ருதியில் நின்றும் விடுபட்ட ஆத்மஸ்வரூபத்தை ஒருவாறு வருந்தி ஸாக்ஷாத்கரிக்கலாமென்கிறார் இதில். “நன்றாய் ஞானங்கடந்து போய்” என்றவிது கீழ்ப்பாட்டின் முடிவில் சொன்னதை அநுவாதம் செய்கிறதாகக் கொள்ளலாம்; அன்றியே, நன்றாய் என்பதை யெடுத்து மூன்றாமடியின் முதலிலே சேர்த்து அந்வயிப்பதுமுண்டு. ஞானத்தால் காணப்படும் விஷயங்களையும் ஞானமென்கிற சொல்லால் சொல்லத்தகுமாதலால் ஞானங் கடந்து போய் என்றது—சப்தாதி விஷயங்களைத் தப்பிப்போய் என்றபடி. விஷய ஸந்நிதிபரித்யாகம் சொன்னபடி. நல் இந்திரிய மெல்லாமீர்த்து=நல்லிந்திரிய மென்றது பொல்லாத இந்திரிய மென்றபடி. விஷயங்களைத் தப்பிப்போனாலும் அவையிருந்த விடங்களிலே கொண்டு மூட்டுங் கொடுமையன்றோ இந்திரியங்களுடையது. அப்படிப்பட்ட இந்திரியங்களையுங் கழிக்க வேணுமென்கிறது. இந்திரிய ஜயம் பண்ணி யென்க.

ஒன்றாய்க்கிடந்த அரும்பெரும் பாழுலப்பிலதனை உணர்ந்துணர்ந்து=*திலதைலவத் தாருவஹ்நிவத் * என்றாப்போலே எள்ளில் எண்ணெய் போலவும் கட்டையில் நெருப்புப் போலவும் பிரித்தெடுக்க முடியாதபடி சேதநனோடு சேர்ந்துகிடப்பதாய் அபரிச்சேத்யமாயிருக்கிற ப்ரக்ருதி தத்துவத்தை நன்றாக வுணர்ந்து. உலகில் பாழ்நிலமாக ஓரிடமிருந்தால் அதுதன்னிலே நாம் இஷ்டமான பொருளை விளைத்துக்கொள்ளுகின்றோமன்றோ; அதுபோல ப்ரக்ருதியில் போக மோக்ஷங்களை நாம் யதேஷ்டமாக விளைத்துக் கொள்ளலாமென்பது பற்றி ப்ரக்ருதிக்கு பாழ் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது இவ்வளவென்று அளவிடமுடியாத தாதலால் உலப்பில்லாததாகக் கூறப்படுகிறது.

பாட்டினடியிலேயிருக்கிற நன்றாயென்பதை இனிக் கொண்டு கூட்டி ‘நன்றாய் ஆங்கு சென்று’ என்றந்வயித்து, தன் பக்கலில் போக்யதாபுத்தியைப் பிறப்பிக்கக்கடவதான அசித்திலே கால்தாழாமல் ஆத்மஸ்வரூபத்தளவுஞ் சென்று என்று பொருள்காண்க. இன்பத்துன்பங்கள் செற்றுக் களைந்து=அசித்தை த்யாஜ்யமென்று விட்டாலும் ஸுக துக்கங்களுக்கு ஹேதுவான புண்யபாபரூப கருமங்கள் கிடக்குமாகில் பின்னையும் ஸம்ஸாரந் தானே; அது ஆகாமைக்காக அவற்றையும் விடவேணுமென்கிறது. அவற்றை

விட்டாலும் ருசிவாஸனைகள் கிடக்குமாகில் பின்னையும் கருக்குழியிலே புக நேருமே ; அது நேராமைக்காகப் பசையும் அறவேணுமென்கிறது. ஆக விஷயஸன்னிதானத்தில் நின்றும் தப்பிப்போய் இந்திரியங்களையும் வென்று அசித்தத்வவிவேகமும் பண்ணிப் புண்ணிய பாபங்களையுமுதறி ருசிவாஸனைகளையும் விட்டால், அன்றே அப்போதே வீடு= அக்காலத்திலே அம்முஹூர்த்தத்திலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் நின்றும் விடுபடுகை யுண்டாம்.

அதுவே வீடு வீடாமே=ஆத்மாநுபவ மோக்ஷமென்பது அதுவே; இதுவும் ஒரு புருஷார்த்தமாம்; ஸர்வேச்வரன் ப்ராப்யனுமிடத்தில் அவனுக்கு ப்ரகாரமாய்க் கொண்டு ஆத்மாவும் ப்ராப்யமாகக்கடவதன்றோ ; ஆகையாலே இதுவும் புருஷார்த்தமாமே யென்கிறார்.

ஆனால் கைவல்யமோக்ஷத்தை நிந்திப்பது எதனாலேயென்னில்; இதற்கு நம்பிள்ளை யருளிச்செய்வதுகாண்மின் —“ தம்முடைய உத்தேச்யத்திலேகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாக நினைத்திருக்கையாலேயிறே முன்பு இவர் இத்தைச் சிரித்திருந்தது” என்று. எம்பெருமானைத் தவிர்த்து கேவலாத்மாநுபவத்தைச் செய்வது தான் நிந்தனைக்கிடமானது என்றதாயிற்று. ... ... ... ... 6

3530 அதுவேவீடுவீடுபேற் றின்பந்தானுமதுதேறி *
எதுவேதானும்பற்றின்றி ஆதுமிலிகளாகிற்கில் *
அதுவேவீடுவீடுபேற் றின்பந்தானுமதுதேறாது *
எதுவேவீடேதின்பமென்று எய்த்தாரேய்த்தாரேய்த்தாரே * 7

| | | | |
|---|---|---|---|
| அதுவே | எம்பெருமானுக்கு ப்ரகாரமாகக் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட அவ்வாத்மாநுபவமே | அதுவே வீடு | அதுதான் மோக்ஷம் ; |
| வீடு | மோக்ஷமாவது ; | வீடுபேறு இன்பம் தானும் அது | மோக்ஷானந்தமும் அதுவே ; |
| வீடு பேறு இன்பம் தானும் அது | மோக்ஷலாபத்தால் வரும் ஆனந்தமும் அது ; | தேறாது | இப்படி தெளியமாட்டாமல் |
| தேறி | இப்படியாக நிஷ்கர்ஷித்து | வீடு எது இன்பம் எது என்று எய்த்தார் | மோக்ஷமாவது எது? ஆனந்தமாவது எது ? என்று கலங்கியே நிற்பவர்கள் |
| எதுவே தானும் பற்று இன்றி | ப்ரக்ருதிப்ராக்ருதங்களெல்லாவற்றிலும் ஸங்கமற்று | | |
| ஆதும் இலிகள் ஆகிற்கில் | ருசி வாஸனைகளுமில்லாதவர்களாக ஆகப்பெற்றால் | எய்த்தார் எய்த்தாரே | என்றும் கலங்கியே கிடப்பர்களத்தனை. |

* * *—இங்குச் சொன்னபடியே ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணப் பாராமல் வேறு சில வழிகளில் முயன்றால் அம்முயற்சி கைகூடாதென்கிறார். அதுவே வீடு=ஆத்மாநுபவ மோக்ஷமென்பது கீழ்ச்சொன்னவதுவே. வீடுபேற்றின்பந்தானும் அது — அந்த மோக்ஷத்தைப் பெற்றால் வரும் ஸுகமும் அதுவே ; தேறி—இப்படியாகத் தெளிந்து ; எதுவேதானும் பற்றின்றி—ப்ரக்ருதி ப்ராக்ருத வஸ்துக்களில் இவைபோக்யமென்றும், இவை போகோபகரணமென்றும் இவை போகஸ்தானமென்றும் நினைப்பதனாலுண்டாகிற பற்று அற்று ; ஆது மிலிகள் ஆகிற்கில்=அதில் ருசிவாஸனைகளுமற்றவர்களாக ஆகப்பெற்றால், (அதாவது) கருமத்தையனுட்டித்து ஜ்ஞானத்தையுடையராய், கீதையில் இரண்டாமத்யாயத்தில் (55) * ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந், ஆத்மந்யேவாத்மநா துஷ்ட : ஸ்தித ப்ரஜ்ஞஸ் ததோச்யதே * என்கிற ச்லோகத்திற் சொல்லுகிறபடி ஜ்ஞாந நிஷ்டாகாஷ்டையான ஸ்திதப்ரஜ்ஞாவஸ்தை பிறந்து யோகமும் நிலை நின்று ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணப்பெற்றால் ; அதுவே வீடு—கீழ்ச்சொன்ன ஆத்ம ப்ராப்தியே மோக்ஷம். வீடுபேற்றின்பந்தானுமது—மோக்ஷஸித்தியில் வரும் ஸுகமும் அந்த ஆத்மாநுபவமே.

தேருது—இப்படி தெளியமாட்டாமல், எதுவேவீடு ஏது இன்பமென்று எய்த்தார்—மோக்ஷமாவது எது? மோக்ஷ ஸுகமாவது எது? என்று விசாரித்துக்கொண்டு கலங்கி நிற்பவர்கள்; எய்த்தார் எய்த்தாரே— என்றும் கலங்கியே நிற்பவர்களென்கை. "நிராச்ரயமாக ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க. எம்பெருமானுக்குப் ப்ரகாரபூதமாயல்லது ஆத்மாநுபவம் பண்ணலாகாதென்றபடி. ... ... ... ... 7

3531 எய்த்தாரேய்த்தாரேய்த்தாரேன்று இல்லத்தாரும்புறத்தாரும் *
மொய்த்து * ஆங்கலறிமுயங்கத் தாம்போகும்போது * உன்மத்தர்போல்
பித்தேயேறியனுராகம்பொழியும்போது எம்பெம்மானோ
டொத்தேசென்று * அங்குள்ளங்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே. 8

| | |
|---|---|
| எய்த்தார் எய்த்தார் எய்த்தார் என்று | முடிந்தார் முடிந்தார் முடிந்தாரென்று கூச்சலிட்டு |
| இல்லத்தாரும் புறத்தாரும் மொய்த்து | வீட்டிலுள்ளவர்களும் மற்றுமுள்ளவர்களும் திரண்டு |
| ஆங்கு அலறி முயங்க | அவ்வவஸ்தையிலே அலறிக் கட்டிக்கொள்ள |
| தாம் போகும் போது | உத்க்ரமணமாகிறவப்போது |
| உன்மத்தர் போல் பித்தே ஏறி | உன்மத்தர்கள் போல் நெஞ்சு கலங்கி |
| அனுராகம் பொழியும் போது | அனுராகம் மிகமிகப் பெருகுங் காலத்தில் |
| எம்பெம்மானோடு ஒத்தே சென்று | (கலக்கமற்றுத் தெளிவு பிறந்து) எம்பெருமானிடத்தில் பொருத்தமுண்டாகி |
| அங்கு உள்ளம் கூட கூடிற்றாகில் | அப்பெருமான் பக்கலிலே நெஞ்சு ப்ரவணமாகப் பெற்றால் |
| நல் உறைப்பு | நல்லவுறுதியாம். |

[அந்திம ஸ்மிருதி யுண்டானால் பலனாகும் என்கை.]

* * *—பெறுதற்கரிதான இந்த ஞானம் ஒருவாறு கைவந்தாலும் எம்பெருமானைப் பற்றின அந்திமஸ்மிருதியில்லையாகில் இந்த ஞானம் கைபுகுருகைக்குப்பட்ட க்லேசமெல்லாம் பழுதேயாகுமென்கிறார். ஆறாயிரப்படியருளிச்செயல்—"இவ்வாத்மஸ்வரூப ஆவிர்ப்பாவ லக்ஷணமோக்ஷமானது இந்த்ரிய ஜயமாத்ரத்தாலே கைவாராது; அந்திமதசையிலே பகவத் ஸமாநாகார ஆத்மாநுஸந்தானமும் வேண்டுமென்கிறார்." என்று. உயிர் உடலைவிட்டுக் கிளம்புகிறகாலம் ஒன்றுண்டே; அப்போது [முமூர்ஷுவாயிருக்கிற காலத்திலே] உயிர் உடலைவிட்டுப் புறப்படுவதற்கு முன்னமே வீட்டிலுள்ளவர்களும் புறம்புள்ளவர்களும் 'ஐயோ! முடிந்தான் முடிந்தான் முடிந்தான்!' என்று பலகாலுஞ் சொல்லி மேலேவிழுந்து அரற்றுவர்களே; முமூர்ஷுவானவன் கலங்கின நிலைமையிலே நெஞ்சைத் தெளிவித்து த்வயாநுஸந்தானம் பண்ணவும் திருநாமங்களைச் சொல்லவும் பண்ணுகைக்கு முயலாதே நாலுநாள் பொறுத்துப் போகிற பிராணன் முன்னமே போம்படியாக அரற்றுவர்களே. கலியாணத்திற்கு அழைத்தாலும் வாராதவர்கள் துக்க முண்டாகுங் காலங்களில் தாங்களே வந்துமேல் விழுவர்களென்பது மொய்த்து என்று சொல்லாற்றலால் தோன்றும். ஆங்கு அலறி முயங்க=இவனுக்குள்ள தெளிவும் போம்படி உடம்பைக் கட்டிக்கொண்டு பெருங்கூச்சலிடுவர்கள். இப்படிப்பட்ட நிலைமையிலே, தாம் போகும்போது — இவர்களையும் இவ்வைச்வர்யத்தையும் விட்டுப்போக மனமில்லாமலிருந்தும் ம்ருத்யு மீளவொண்ணாமையாலே சரீரத்தை விட்டுத் தாங்களே போகாநிற்பர்கள்; அப்படிப்பட்ட காலத்திலே;

உன்மத்தர்போல் பித்தேயேறி=விரக்தர்களுங்கூட உந்மாத தசையிற்போலே அறிவு கெட்டுக் கலங்கி, அனுராகம் பொழியும்போது=இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யங்கள் :— "இளையாளைப் பொன்னையும் பூட்டிக்கொடுவந்து முன்னே நிறுத்துவர்கள்; புத்ராதிகள்பக்கல் ஸ்நேஹியாத நாளைக்கும் போர ஸ்நேஹிக்கத் தொடங்கும்;

ஜீவிக்கும் நாள் லோபத்தாலே இவற்றுக்கு ஒன்றும் செய்யான்; இப்போதாக 'புதைத்து வைத்த தனத்தை ஆபரணமாகப் பூட்டிக் காணப்பெற்றிலோம்' என்று மதகுதிறந்து ஸ்நேஹிக்கும்.

அனுராகம் பொழியும் விதமிதுவே யென்க. இப்படி கலங்குகிற ஸமயத்திலே தெளிவுண்டாய்த் தன்னையுமவனையும் அநுஸந்தித்து, எம்பெம்மானோ டொத்தே சென்று அங்குள்ளங்கூடக் கூடிற்றாகில் நல்லுறைப்பே—எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து இப்படி அவனோடொத்த சுத்தி இவ்வாத்மாவுக்குண்டென்று அநுஸந்திக்கக் கூடிற்றாகில் [அந்திமஸ்ம்ருதியுண்டாகில் என்றபடி] நல்லுறைப்பே—நல்ல வாய்ப்பு, ஆத்மப்ராப்தி ஸித்திக்கு மென்றவாறு.

'எம்பெம்மானோடொத்தே சென்று' என்பதற்கு—எம்பெருமான் இவனைத் தனக்கு சேஷமென்று நினைப்பது போலே இவனும் தன்னை அவனுக்கு சேஷமென்று நினைத்து அல்லது அவனைத்தனக்கு சேஷியென்று நினைத்து அப்பெருமான் பக்கலிலே தன்னெஞ்சு சென்று கூடப்பெற்றதாகில் என்றும் பொருள் கூறுவர். ... 8

3532 கூடிற்றாகில்நல்லுறைப்பு கூடாமையைக்கூடினால் *
ஆடல்பறவையுயர்கொடி எம்மாயனாவததுவதுவே *
வீடைப்பண்ணியொருபரிசே எதிர்வும்நிகழ்வுங்கழிவுமாய் *
ஓடித்திரியும்யோகிகளும் உளருமில்லையல்லரே. 9

| | |
|---|---|
| கூடிற்று ஆகில் நல் உறைப்பு | ஜீவாத்ம ஸ்வரூபமும் பரமாத்ம ஸ்வரூபமும் ஒன்றாகப் பெற்றால் நல்ல வாய்ப்புதான்; |
| கூடாமையை கூடினால் | அஸம்பாவிதமானவை ஸம்பவிக்கப் பெற்றால் |
| அது | அந்த ஜீவவஸ்துவானது |
| ஆடல் பறவை உயர் கொடி எம் மாயன் ஆவது | ஆடுபுட் கொடியையுடைய எம்பெருமானாகக்கூடும்; (இது தான் அஸம்பாவிதமென்கை.) |
| | (ஆதலால்) |
| அதுவே | ஜீவவஸ்து ஜீவவஸ்துவாகவே நிற்குமத்தனை; (ஜீவபர பேதம் ஒருகாலும் போகாதென்றவாறு.) |
| ஒரு பரிசே வீடை பண்ணி | தங்கள் மனம்போன வொரு விதமாகவே மோக்ஷ வஸ்துவைக் கல்பிப்பார் |
| எதிர்வும் நிகழ்வும் கழிவும் ஆய் | முக்காலத்து முள்ளாராய் |
| ஓடி திரியும் | ஸம்ஸார பதவியிலேயே உழன்று கொண்டிருப்பாராய் |
| யோகிகளும் | (குத்ருஷ்டிகளான) சில மஹாநுபாவர்களும் |
| உளர், இல்லை அல்லர் | இருக்கிறார்களே யொழிய இல்லாமற் போகவில்லை. |

[எதிர்வும் நிகழ்வும் கழிவுமாயுளர், இல்லை யல்லர்—என்று அந்வயிப்பது.]

* * *=கீழ்ப்பாட்டில் அந்திமஸ்ம்ருதிவேணுமென்று சொல்லிற்று; அந்த ப்ரஸ்தாவத்தில் ஜீவாத்மா வேறு பரமாத்மா வேறு என்கிற உண்மைப் பொருள் தேறுகையாலே இப்படியுள்ள ஜீவ பரபேதத்தை யதார்த்தமாகக் கொள்ளாதே, இந்த பேதம் அபரமார்த்தம், தத்வஜ்ஞானம் பிறந்த ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஏகதத்வமே யென்று கொண்டு, நித்யஸம்ஸாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற மாயாவாதிகள் நினைவுக்கு வர, அவர்களின் பக்ஷத்தை ப்ரதிக்ஷேபிக்கிறார் இப்பாட்டில்.

கூடிற்றாகில் நல்லுறைப்பு—நித்ய ஸம்ஸாரியான ஜீவஸ்வரூபம் பரமவிலக்ஷண ப்ரஹ்ம ஸ்வரூபமாகக் கூடுமாகில் இது பெரும் பேறன்றோ என்றபடி. ஆனால் இது ஸம்பாவிதமன்றோ என்பதை உடனேயருளிச் செய்கிறார் கூடாமையைக் கூடினாலென்று தொடங்கி. 'கூடாமையை' என்ற விடத்திலுள்ள ஐகாரம் சாரியை; கூடாமை கூடினால் என்றதாகக் கொள்க. முயற்கொம்பு, ஆகாசத்தாமரை, மலடிமகன் என்று சொல்லுகிறவிவை கூடினால் என்றபடி. உலகில் அஸங்கதங்களானவை ஸங்கதமாகக் கூடுமானால், ஆடல்பறவையுயர் கொடியெம்மாயனாவது—ஜீவாத்மா பரமாத்மாவாக ஆய்

விடமுடியும். இந்த ஸம்ஸாரி சேதநனே பரப்ரஹ்மமாக ஆய்விடுகிறபக்ஷத்தில் எம்பெருமானுக்குள்ளதான கருடவாஹனத்வமும் இவனுக்கு ஸம்பவிக்க வேண்டியதாகுமன்றோ; இது ஸம்பாவிதமாகுமோ? இதை ஆலோசிக்கலாமே—என்கைக்காக ஆடல் பறவை யென்றிட்டது. ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு பேதமேயொழிய ஐக்கியம் ஒரு நாளும் ஸம்பவியாதென்பதை நிகமித்தருளுகிறார் அது அதுவே யென்று. அவ்வஸ்து அவ்வஸ்துவே யென்றபடி. ஜீவன் ஜீவனேயென்க.

இனிப் பின்னடிகளாலருளிச் செய்வதாவது, இப்படி அஸம்பாவிதமானதைச் சொல்லுவார் சிலருளரோவென்ன, அப்படிப்பட்ட மஹானுபாவர்களும் எக்காலத்திலும் இருக்கின்றார்களே, இல்லாமற்போகவில்லையேயென்று. [வீடைப்பண்ணி ஒரு பரிசே] 'ஒருபரிசே வீடைப்பண்ணி' என்று அந்வயிப்பது. சாஸ்த்ரமூலமாக வல்லாமல் ஸ்வபுத்திகல்பனையாக அவித்யா நிவ்ருத்தியே மோக்ஷமென்று ஒன்றைக்கட்டியென்க. ஒரு பரிசே யென்றது ஸ்வகபோலகல்பனையான ஒரு ப்ரகாரமாய் என்றவாறு. எதிர்வும் நிகழ்வும் கழிவுமாய்—முக்காலத்துமுள்ளவர்களாய். ஓடித்திரியும் யோகிகளுமுளர்—ஜனன மரண சக்ரத்திலேயே கிடந்து ஓடித்திரியும் குத்ருஷ்டிகளாகிற மஹானுபாவர்களும் உண்டாயிருக்கிறார்களே; இல்லையல்லரே—இல்லாமையில்லையே. இங்கே ஈடு;—"காலம் அநாதி; பண்ணிவைக்கும் பாபங்களுக்கு எல்லையில்லை; இப்படியிருப்பார் சிலமஹாபுருஷர்கள் உண்டாகக் கூடாதோ? ஸம்ஸாரத்தில் கூடாததுண்டோ?"

இங்கு யோகிகளென்றது உண்மையான யோகிகளைச் சொன்னபடியன்று; க்ஷேபித்துச் சொல்லுகிறபடி; எதிர்மறையிலக்கணை. யோகிகளுமென்ற விடத்து, உம்மை—இசை நிறை. வீட்டை என்றிருக்கவேண்டுவது வீடை என்றிருப்பது எதுகை நயம்பற்றி. ... ... ... ... ... ... 9

3533 உளருமில்லையல்லராய் உளராயில்லையாகியே *
உளரெம்மொருவரவர்வந்து என்னுள்ளத்தேயுரைகின்றார் *
வளரும்பிறையும்தேய்பிறையும்போல அசைவுமாக்கமும் *
வளருஞ்சுடருமிருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. 10

இல்லை அல்லர் ஆய் உளரும் — (அடியார்களுக்கு) இல்லையென்னாதபடி உளராயிருப்பவராய்
இல்லை ஆகியே உளர் ஆய் — (மற்றையோர்க்கு) இல்லையாகியே உளராயிருப்பவராய்
எம் ஒருவர் உளர் — எம்பெருமானுளர்;
அவர் வந்து என் உள்ளத்துள்ளே உறைகின்றார்—;
வளரும் பிறை போல ஆக்கமும் — வளர் பிறைக்கு உள்ளது போலே வளர்ச்சியும்
தேய் பிறை போல அசைவும் — க்ருஷ்ணபக்ஷ சந்திரனுக்கு உள்ளதுபோலே தேய்வும் உடைத்தாகி
வளரும் சுடரும் இருளும் போல் — ஸூரியனும் இருளும் போலே மாறிமாறி வரக்கூடியதான
தெருளும் மருளும் — ஜ்ஞாந அஜ்ஞானங்களை
மாய்த்தோம் — கழித்துக்கொள்ளப் பெற்றோம்.

* * *—இப்படிப்பட்ட ஆத்மஸ்வரூபத்தை எனக்குக் காட்டிக்கொடுத்து, பாஹ்ய குத்ருஷ்டிமதங்களில் நான் கைகழியப் போகாதபடி என்னெஞ்சிலே எம்பெருமான் புகுந் திருக்கையாலே என்னுடைய ஸாம்ஸாரிக க்லேசமெல்லாம் தீரப்பெற்றேனென்று களித்துப் பேசும் பாசுரமிது.

முதலடிக்கு இரண்டு வகையாகப் பொருள் நிர்வஹிப்பர்கள்; உளருமில்லையல்லராய் என்று ஸேச்வரஸாங்க்யமதாநுவாதம்; இல்லையாகியே உளராய் என்று நிரீச்வர ஸாங்க்யமதாநுவாதம். "ஈச்வரனென்பானொருவனுளன்; இல்லையென்னவொண்ணாதே அஸ்திமாத்ரமாயிருக்கும்" என்பது ஸேச்வர ஸாங்க்யமதம். இனி, "இல்லையாகியே அவருடைய வுண்மை" என்பது நிரீச்வரஸாங்க்யமதம். அந்த

பக்ஷங்களை நிரஸிப்பதாக ஒரு நிர்வாஹம். மற்றொரு நிர்வாஹமாவது—* மெய்யர்க்கே மெய்யனாகும்—பொய்யர்க்கே பொய்யனாகும் * என்று திருமாலையிலருளிச் செய்தபடியே, மெய்யரான அடியார்கட்கு இல்லையல்லராய் உளராயிருப்பர்; பொய்யரான அநாச்ரிதர்க்கு இல்லையாகியேயுளராயிருப்பர் என்பதாக.

[உளரெம்மொருவர்] திருக்குணங்கள் விபூதிகள் முதலியவற்றால் பூரிபூர்ணராய்க் கொண்டு உளராய் அவற்றைக்காட்டி யென்னையடிமைகொண்ட அத்விதீயர் என்றபடி. அவர்வந்து என்னுள்ளத்துள்ளே யுறைகின்றார்=அப்படிப்பட்டவர்வந்து தாம் மயர்வறமதி நலமருளித்திருத்தின எனது நெஞ்சிலே நித்யவாஸம் பண்ணாநின்றார். ஆனபின்பு, சந்திரனுக்குப் போலே மாறிமாறிவரக்கடவதான வளர்ச்சியும் அழிவும் இல்லாதபடியாகவும், சூரியனும் இருளும் மாறிமாறிவருகிறாப்போலே ஜ்ஞானமும் அஜ்ஞானமும் மாறிமாறிவாராதபடியாகவும் ஆத்மதர்சனத்தில் ஏக ரூபமான ஞானம் விளையப் பெற்றோமென்றாராயிற்று. ... ... ... ... 10

3534 தெருளும்மருளும்மாய்த்துத் தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ் *
அருளியிருத்துமம்மானும் அயனுஞ்சிவனும் * திருமாலால்
அருளப்பட்டசடகோபன் ஓராயிரத்துளிப்பத்தால் *
அருளியடிக்கீழிருத்தும் நம்மண்ணல்கருமாணிக்கமே. 11

| | |
|---|---|
| தெருளும் மருளும் மாய்த்து | ஜ்ஞாநா ஜ்ஞானங்கள் கலசி வருகிற ரீதியை யொழித்து |
| தன் | தன்னுடைய |
| திருந்து செம்பொன் கழல் அடி கீழ் | அழகிய செம்பொன்னாலான வீரக்கழலணிந்த திருவடிகளின் கீழே |
| அருளி இருத்தும் | பரம கிருபைபண்ணி ஸ்தாபிக்கிற |
| அம்மான் ஆம் | ஸ்வாமியாய் |
| அயன் ஆம் சிவன் ஆம் திரு மாலால் | பிரமனுக்கும் சிவனுக்கும் அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நிர்வஹிக்கிற எம்பெருமானாலே |
| அருளப்பட்ட | மயர்வற மதிநலமருளப் பெற்ற |
| சடகோபன் | நம்மாழ்வாருடைய |
| ஓர் ஆயிரத்துள் இ பத்தால் | ஆயிரத்துள் இப்பதிகம் நிமித்தமாக |
| நம் அண்ணல் கருமாணிக்கம் | கரியமாணிக்கம் போன்ற நம் ஸ்வாமி |
| | (இத்திருவாய்மொழியை ஓதுமவர்களை) |
| அருளி அடி கீழ் இருத்தும் | கிருபை பண்ணித் தன் திருவடிகளின் கீழே இருத்துவன். |

* * *—இத்திருவாய்மொழி பகவத் ப்ராப்தியைப் பண்ணித் தருமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். தெருளும் மருளும் மாய்த்து=தெருளாவது ஞானம், மருளாவது அஜ்ஞானம்; மருளை மாய்க்கலாமேயல்லது தெருளையும் மாய்க்கலாமோ வென்று சங்கை தோன்றும். மருள்கலசாத தெருள் உத்தேச்யமேயொழிய மருளோடு கலசிவருகிற தெருள் உத்தேச்யமன்றே; அப்படிப்பட்ட தெருளையே மாய்த்ததாக இங்குச் சொல்லுகிறது. "ஸ்வாநுபவவிரோதியான ப்ராக்ருத விஷயஜ்ஞாநாஜ்ஞாநங்களை வாஸனையோடே போக்கி" என்பது ஈடு. தன்திருந்துசெம்பொற் கழலடிக்கீழருளியிருத்தும்=அடியார்களை வேறொருவர் காலில் குனியவிடாமல், ஸ்ப்ருஹணீயமாய் வீரக்கழலையுடைத்தான தன் திருவடிகளின்கீழே நிர்ஹேதுக கிருபையினால் ஸ்தாபிக்குமியல்வினன் எம்பெருமானென்க. அயனும் சிவனும் திருமால்=*மூவர்காரியமுந்திருத்தும் முதல்வன் * என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி ஸ்ருஷ்டி ஸம்ஹாரத்தொழில்களை நிர்வஹிக்கைக்காகப் பிரமனையும் சிவனையும் அநுப்ரவேசித்திருக்கும் திருமால்என்றபடி. எம்பெருமானாலே மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்துள் இப்பத்தும் வல்லாரை அப்பெருமான் அருளித் தன் திருவடிகளின்கீழ்ப் பணிசெய்யக் கொண்டருள்வனென்று பலனுரைத்தாயிற்று. ... ... 11

எட்டாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—கருமாணிக்கமலை

உரையவதாரிகை:—இத்திருவாய்மொழி தோழிபாசுரமாய்ச் செல்லுகிறது. திருவாய்மொழியாயிரத்தில் தோழிபாசுரமாக வரும் பதிகங்கள் மூன்று; * தீர்ப்பாரையாமினியும் * துவளில் மாமணிமாடமும் * இக்கருமாணிக்க மலையும். இம்மூன்று பதிகங்களிலும், ப்ரணவத்தில் உகாரத்தின் பொருளான அநந்யார்ஹத்வம் வெளியிடப்படுகிறது. * தீர்ப்பாரையாமினியில் வெறியாடலை விலக்கின முகத்தாலே அது வெளியிடப்பட்டது, * துவளில் மாமணிமாடத்தில் "இனியுமக்காசையில்லைவிடுமினோ" என்று பலகாலும் தாய்மாரை நோக்கிச் சொல்லுகிற முகத்தாலே அது வெளியிடப்பட்டது; இப்போது இத்திருவாய்மொழியில் அதுதன்னை வெளியிடுகிறவிதம் கேண்மின்; பராங்குச நாயகியாகிற தலைமகள் பதிஸம்யோகத்திற்குரிய வயது முதிர்ந்து நின்றவளவிலே தாய் தந்தையர் ஸ்வயம்வரம் கோடித்து நகரத்திலே மணமுரசு அறைவிக்க, அஃதறிந்த தோழியானவள் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றும், "அன்றிப்பின் மற்றொருவர்க்கென்னைப் பேசவொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால்" என்றும் திண்ணிய அத்யவஸாயங்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளை, இப்படி தாய்தந்தையர் கோடிக்கிறபடியையறிந்தால் க்லேசப்படுவளேயென்று துடித்து, இப்பெண்பிள்ளைக்குக் குட்டநாட்டுத் திருப்புலியூர்ப் பெருமானோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமானபடியைத் தோழி தானறிந்திருந்தும் அதை வெட்டவெளிச்சமாகத் தாய்மார்க்குத் தெரிவித்தால் நம்மேல் சீற்றமுண்டாகும்; தெரியாதிருந்தால், தலைவியும் லஜ்ஜையாலே வாளாவிருப்பளாகையாலே விபரீதமான கோடிப்பு நிறைவேறி அனர்த்தமாகும்; ஆகவே இப்போதொரு ஸதுபாயம் செய்யவேண்டும்; நமக்கும் ஏற்கனவே இது தெரியாதுபோலே காட்டிக்கொண்டு அப்போதுதான் நிரூபித்து அறிந்துகொள்வதுபோல் அபிநயித்து ஒருவாறு உண்மையை வெளியிட்டுவிடுவோம் என்று துணிந்து, அம்மனைமீர்! நம்பெண்பிள்ளையின் நிலைமைகளைக் காணுமிடத்து இவளுக்குத் திருப்புலியூர்ப்பெருமானோடே ஸம்ச்லேஷம் நேர்ந்துவிட்டதுபோல் தெரிகிறதே, உங்களுடைய கோடிப்புக்கு ப்ரஸக்தியில்லைபோல் காண்கிறதேயென்று மத்யஸ்தோக்தியாகச் சொல்லி நிற்கிறாள்; இவ்வழியாலே ஆழ்வாருடைய அநந்யார்ஹத்வம் வெளியிடப்படுகிறதாயிற்று.

கீழ்த்திருவாய்மொழியில் ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யம் சோதிக்கப்பட்டதாகையாலே அதை நன்கு வடிக்கட்டுகிறது இத்திருவாய்மொழியென்க. ... *

3535 கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக்காடுகள்போல் *
திருமார்புவாய்கண்கை உந்திகாலுடையாடைகள்செய்யபிரான் *
திருமாலெம்மான்செழுநீர்வயல் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
அருமாயன்பேரன்றிப்பேச்சிலள் அன்னைமீரிதற்கென்செய்கேனோ. 1

| | |
|---|---|
| கரு மாணிக்கம் மலை மேல் | கரிய மாணிக்க மலையின் மேலில் |
| மணி தடம் தாமரை காடுகள் போல் | அழகிய பெரிய தாமரைக் காடுகள் போலே |
| திரு மார்பு வாய் கண் கை உந்தி கால் உடை ஆடைகள் செய்ய பிரான் | திருமார்பு திருப்பவளம் திருக்கண் திருக்கை திருவுந்தி திருவடி திருப்பீதாம்பரம் ஆகிய இவை சிவந்திருக்கப்பெற்ற ஸ்வாமியாய் |
| திருமால் எம்மான் | திருமகள் கொழுநனை வழியாலே எனக்கு நாயகனாய், |
| செழு நீர் வயல் | செழித்த நீர் நிறைந்த வயலையுடைய |
| குட்டநாடு திரு புலியூர் | குட்டநாட்டுத் திருப்புலியூரிலெழுந்தருளியிருப்பவனான |
| அரு மாயன் | பெறுதற்கரிய ஆச்சர்ய பூதனுடைய |
| பேர் அன்றி பேச்சு இலள் | திருநாமப்பேச்சொழிய வேறொரு பேச்சு அறியாள் (இத்தலைவி); |
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| இதற்கு என் செய்கேனோ | இதற்கு யாது செய்வேனோ? |

* * *—திருப்புலியூர்ப் பெருமானுடைய திவ்யாவயவஸௌந்தரியத்தைக் கண்டு, அவ்வடிவழகல்லது மற்றொன்று அறியாதபடி யீடுபட்டாள் இத்தலைவி—என்று தோழியானவள் தாய்மார்க்கு உரைக்கின்றாள். எம்பெருமானது எழில்நீலமேனியிலே திருமார்வு திருவதரம் திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள் முதலானவை சிவந்து விளங்காநின்றபடியைப் பார்த்தால் ஒரு கருமாணிக்கமலையிலே விசாலமான தாமரைக்காடுகள் பூத்தனவோ! என்னலாம்படியுள்ளதாம். மாணிக்கம் சிவந்ததேயொழியக்கறுத்ததன்று; இங்குக் கருமாணிக்கமென்பது இல்பொருளுவமை (அபூதோபமை); கரியமாணிக்கக் குன்று ஒன்றுண்டாகி அதன்மேலே தாமரைக்காடுகள் பூக்கப்பெற்றால் அதனை உவமை கூறலாமென்றவாறு. * அரைச்சிவந்த வாடையும் தாமரைமலர்ந்ததாக வருணிக்கப்பட்டதிங்கு. பிரான் என்றது—இவையெல்லாம் காட்டிலெறித்த நிலாவாகாமே பக்தர்களுக்கு அநுபவிக்கக் கொடுக்குமவனென்கை. அப்படி பக்தர்களனுபவிக்கக் கொடுப்பதற்குக் காரணம் பிராட்டியின் உபதேசமே யென்பது தோன்ற உடனே திருமால் என்றது.

குட்டநாட்டுத் திருப்புலியூரருமாயன் பேரன்றிப் பேச்சிலள்—ப்ர வ்யூஹ விபவங்களுக்குரிய திருநாமங்களைச் சொல்லுகையன்றிக்கே அத்தலத்தெம்பெருமானுடையதிருநாமங்களையே வாய்வெருவா நின்றாள். மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றனுள் இத்திருப்பதியுமொன்று. சோழநாட்டுச் சிறுபுலியூரிற்காட்டில் வாசி தோன்றக் குட்டநாட்டுத் திருப்புலியூரென்றது. அன்னைமீரிதற்கென்செய்கேனென்றது—தோழி தனக்கும் இப்போதே தெரிந்தமை காட்டிற்றாகும். ... ... ... 1

3536 அன்னைமீரிதற்கென்செய்கேன் அணிமேருவின்மீதுலவும் *
துன்னுசூழ்சுடர்ஞாயிறும் அன்றியும்பல்சுடர்களும்போல் *
மின்னுநீண்முடியாரம் பல்கலன் தானுடையெம்பெருமான் *
புன்னையம்பொழில்சூழ் திருப்புலியூர்புகழுமிவளே. 2

| | |
|---|---|
| அன்னைமீர்! இதற்கு என் செய்கேன்—; | |
| அணிமேருவின் மீது உலவும் | அழகிய மேருமலையின்மேலே யிருப்பதாய், |
| துன்னு சூழ் சுடர் | செறிந்துசூழ்ந்தசுடரை யுடைத்தான |
| ஞாயிறும் | ஸூர்யனும் |
| அன்றியும் | அவ்வளவே யல்லாமல் |
| பல் சுடர்களும் போல் | பலவகைப்பட்ட க்ரஹ நக்ஷத்ரங்களினுடையதேஜஸ்ஸும் போலேயிருக்கிற |
| மின்னு நீள் முடி ஆரம் பல் கலன் தான் உடை எம் பெருமான் | ஒளிபொருந்தி ஓங்கின திருவபிஷேகம் ஹாரம் முதலான பலதிருவாபரணங்களையுடையனான எம்பெருமானுடைய |
| புன்னை அம் பொழில் சூழ் திருப்புலியூர் | அழகியபுன்னைச்சோலைகளாலே சூழப்பட்ட திருப்புலியூரை |
| இவள் புகழும் | இத்தலைவி (நிரந்தரமாகப்) புகழ்ந்து கொண்டிரா நின்றாள். |

* * *—தலைவியின் இந்நிகழ்ச்சிக்குத் தோழியான தான் உடன்பட்டவள்ல்லள் என்பதைத் தாய்மார்க்கு மெய்பிக்கவேண்டி அன்னைமீரிதற்கென்செய்கேனென்று அடிக்கடி சொல்லுகிறாள் (தோழி). உங்களையுமறியாமல் என்னையுமறியாமல் நேர்ந்த இந்நிகழ்ச்சிக்கு நான் என்செய்கேனென்கிறாள். திருப்புலியூரெம்பெருமானது திவ்யாபரண சோபையிலே தலைவிபேதுமுற்றுப் பேசும்படிகளை விரித்துரைக்கின்றாள் அணிமேருவின் மீதுலவுமென்று தொடங்கி. மேருமலையின்மீது கதிராயிரமிரவி உதித்தாற்போலே திருவபிஷேகமும், நக்ஷத்ரதாராகணங்கள் மின்னினாற்போலே பல ஹாராவளிகளும் மற்றும் திருவாபரணங்களும் ஜ்வலிக்குமழகை என்னவென்று சொல்லுவேனென்று இதுவே வாய்வெருவுதலா யிருக்கின்றாளிப்பெண்பிள்ளை. இவ்வளவோடும் நில்லாமல் அத்திருப்பதியின் பொழில்வளங்களையும் புகழாநின்றாள். இவற்றால் இவளுக்கு அத்தலத்தெம்பெருமானோடு கலவி நேர்ந்ததாகவே நினைக்கலாகிறது என்பது உள்ளுறை. 2

3537 புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டெங்கும் *
திகழுமெரியொடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல் *
புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான் *
திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே. 3

| | |
|---|---|
| பொரு நீர் கடல் தீப்பட்டு | அலையெறிகின்ற கடலானது நெருப்புக் கொளுந்தி |
| எங்கும் திகழும் எரியொடு செல்வது ஒப்ப | எங்கும் விளங்குகிற ஜ்வாலைகளோடே கூடிநடந்துவருவது போல |
| செழு கதிர் ஆழி முதல் புகழும் பொரு படை ஏந்தி | மிக்க வொளியையுடைய திருவாழி முதலான புகழ் மிக்க திவ்யாயுதங்களை தரித்து |
| போர்புக்கு | போர்க்களத்திலே புகுந்து |
| அசுரரை பொன்றுவித்தான் | அஸுரர்களை யழியச்செய்த பெருமானுடைய |
| திகழும் மணி நெடு மாடம் நீடு திருப்புலியூர் வளம் | விளங்குகின்ற ரத்னமயமான உயர்ந்த மாடங்களை வரிசையாகவுடைய திருப்புலியூரினழகை |
| இவள் இராப் பகல் நின்று புகழும் | இத்தலைவி இரவும் பகலும் ஓவாது புகழா நின்றாள். |

* * *—பண்டு கரதூஷண வதத்தில் பிராட்டி பெருமானுடைய சௌர்யவீர்ய பராக்ரமங்களில் தோற்று *தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே * என்று அணைத்துக்கொண்டாளென்று கேட்டிருந்தோம்; அப்படியே இப்பெண்பிள்ளையும் திருப்புலியூர்த்தலைவன் திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களை யணிந்துகொண்டு போர்க்களத்திலே சென்று அரக்கரசுரர்களைத் தொலைத்தருளும் பேராற்றலை இரவும் பகலுமிடைவீடின்றிப் புகழ்ந்து கூறாநின்றாள்; இதனாலும் இவளுக்கு அத்திருப்பதியெம்பெருமானோடே ஸம்பந்தம் நிகழ்ந்ததாகத் தோன்றுகின்றதென்கிறாள் தோழி.

"புகழுமிவள்நின்றிராப்பகல்" என்பதற்கு, பாட்டின் முடிவிலுள்ள திருப்புலியூர் வளமே யென்பதனோடு அந்வயம். கடல்வண்ணனை பெருமான் "ஜ்வாலா ஜாஜ்வல்யமாநா" என்னும்படியான ஜ்வாலைபொருந்திய திருவாழியாழ்வான் முதலான திவ்யாயுதங்களையணிந்து எழுந்தருள்வதானது 'ஒருகடல் நெருப்புக்கொளுந்தி நடந்துசெல்லாநின்றதோ!' என்று உல்லேகிக்கும்படியாகவுள்ளதென்கிறாளாம் தலைவி; அதனை அநுவாதம் செய்கிறாள் தோழி. ... ... ... 3

3538 ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்து *
ஏர்வளங்கிளர்தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான் *
பேர்வளங்கிளர்ந்தன்றிப் பேச்சிலள் இன்றிப்புனையிழையே. 4

| | |
|---|---|
| ஊர் வளம் கிளர் சோலையும் | ஊரின் வளத்தைத் தெரிவிக்கின்ற சோலைகளும் |
| கரும்பும் பெரு செந்நெலும் சூழ்ந்து | கரும்புகளும் பெரிய செந்நெற் பயிர்களும் சூழப்பெற்றிருப்பதாய் |
| ஏர் வளம் கிளர் தண் பணை | உழுவது நடுவதாய்ச் செல்லு மழகுமிக்க குளிர்ந்த நீர்நிலங்களையுடைத்தான |
| குட்டநாடு திருப்புலியூர் | திருப்புலியூரில் |
| சீர் வளம் கிளர் | திருக்குணங்களின் சிறப்பு விளங்கப்பெற்ற |
| மூ உலகு உண்டு உமிழ் தேவ பிரான் | த்ரிலோக ரக்ஷகனை எம்பெருமானுடைய |
| பேர்வளம் | திருநாமங்களின் சிறப்பை |
| இன்று | ஆபரணமணிந்த இந்நாளில் |
| இப் புனையிழை | இத்தலைமகள் |
| கிளர்ந்தன்றி பேச்சு இலள் | ஓவாது சொல்லா நின்றாள். |

* * *—திருப்புலியூரின் வளங்களைச் சொல்லத்தொடங்கி 'வண்டினமுரலுஞ் சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல்மீதணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை

அண்டர்கோனமருஞ்சோலை' என்றுப்போலே சோலைகளின் வளத்தைச் சொல்லுவது, வயலடங்கலும் கரும்பும் செந்நெலுமாய் வளர்ந்திருக்குமழகைச் சொல்லுவது, அங்கு உழுவது நடுவதுமாய்ச் செல்லுமழகைச் சொல்லுவது, சுற்றிலும் நீர்நிலைகள் சூழ்ந்திருக்குமழகைச் சொல்லுவதாய் இப்பெண்பிள்ளை பேசுமழகுகளை என் சொல்வேன்? இவ்வளவேயோ? அத்தலத்துப் பெருமானுடைய ஆபத்ஸகத்வமென்னும் திருக்குணத்திலே யீடுபட்டு அவன் ஸகலலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து வெளிநாடுகாணவுமிழ்ந்த செயலையும் சொல்லாநின்றாள்; இவையொழிய வேறொரு பேச்சுமறியாள். இவை சொல்லும்போது இவளுடைய வடிவு ஆபரணம் பூண்டாற்போலே விளங்குமழகும் அப்ரமேயம்; இவற்றாலும் இவளுக்குத் திருப்புலியூர்ப் பெருமானோடு கலவிநேர்ந்திருக்கவேணும்போல் தோன்றுகிறது என்கிறாளாயிற்று தோழி.

புனையிழை—அணியப்பட்ட ஆபரணங்களை யுடையவளென்க. 4

3539 புனையிழைகளணிவும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் *
நினையும் நீர்மையதன்று இவட்கிது நின்றுநினைக்கப்புக்கால் *
சுனையினுள் தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர் *
முனைவன் மூவுலகாளியப்பன் திருவருள்மூழ்கினளே. 5

| | |
|---|---|
| புனை இழைகள் அணிவும் | ஆபரணங்கள் பூணுமழகும் |
| ஆடை உடையும் | சேலையுடுக்குமழகும் |
| புதுக்கணிப்பும் | வடிவில் பிறந்த புதுமையும் |
| இவட்கு நின்று நினைக்கபுக்கால் | இத்தலைவிக்கு இருக்கும்படியை ஆராய்ந்தால் |
| இது நினையும் நீர்மையது அன்று | இந்த வைலக்ஷண்யம் (லோகமர்யாதையில்) நினைக்கக் கூடியதாக இல்லை; |
| | (ஆதலால்) |
| சுனையினுள் தட தாமரை மலரும் | சுனைகளுக்குள்ளே பெரிய தாமரைகள் மலரப்பெற்ற |
| தண் திருப்புலியூர் | குளிர்ந்த திருப்புலியூர்க்கு |
| முனைவன் | தலைவனும் |
| மூ உலகு ஆளி அப்பன் | த்ரிலோகாதிபதியுமான எம்பெருமானுடைய |
| திரு அருள் மூழ்கினள் | திருவருளிலே இவள் அவகாஹிக்கப் பெற்றிருக்க வேணும். |

* * *—ஆறாயிரப்படியருளிச் செயல்காண்மின் :—"அவன் சௌந்தர்ய சீலாதி குணங்களை உடையனானென்; வேறேயொருவனை அந்வேஷித்து அவனுக்குக் கொடுக்கக்கடவதாய்ச் செல்லாநின்றபின்பு இனிச்செய்யலாவதில்லையென்று தாயார் சொல்ல, தோழியானவள், இயற்கையிற்புணர்ச்சியைச் சொல்லுகை ஈடன்றியேயிருக்கச் செய்தே 'இவளையிழக்கிறோம்' என்னும் பயத்தாலே முன்னமே திருப்புலியூர் முனைவனான ஸர்வேச்வரனிவளோடே புணர்ந்தருளினானென்கிறாள்" என்று.

தோழியானவள் தலைமகளிடத்து மூன்று விசேஷங்களை யெடுத்துச் சொல்லி, இவளுக்குத் திருப்புலியூர்ப் பெருமானோடு கலவி நேர்ந்திராவிடில் இங்ஙனே காணவொண்ணாது என்று தன்னுடைய அநுமானத்தைத் திடப்படுத்துகின்றாள். புனையிழைகளணிவும் = ஆபரணங்கள் நாம் பூட்டினாப்போலே யிருந்ததோ? அப்படியில்லையே; கலைத்துப்பூண்டபடி காணாநின்றதே. ஆடையுடையும்—கூறையுடையும் நாமுடுத்தினபடியில்லையே; முகத்தலைப்பார்த்து உடுத்ததாயோ இருக்கிறது? வேறுபாடு தெரியவில்லையா? புதுக்கணிப்பும்—இவளது வடிவிலே பிறந்த புதுமைகள் தெரியவில்லையோ? இதற்கு முன்பு கோடையோடின வயல்போலே யன்றோ இருந்தது; இப்போது நீர்பாய்ந்த வயல்போலே காண்கிறதில்லையோ? நின்று நினைக்கப்புக்கால் நினையும் நீர்மையதன்று இவட்கிது—எம்பெருமானுடைய படிகளையே நினைக்கமுடியாதபோது அவன் திறத்திலீடுபட்டாருடைய படிகள் நினைக்கப்போமோ? *நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னும் ஈனச்சொல்லே* என்ற திருவாக்கினாலேயே இப்பாசுரமும் வெளிவந்தபடி பாரீர்.

ஆக, புனையிழைகளணியும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் பார்க்குமிடத்து, திருப்புலியூரப்பன் திருவருட்கடலில் மூழ்கினவளே யிவளென்று நிலையிடத்தட்டில்லை யென்றதாயிற்று. ... ... ... ... ... ... 5

3540 திருவருள்மூழ்கிவைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான் *
திருவருள்களுஞ்சேர்ந்தமைக்கு அடையாளந்திருந்தவுள *
திருவருளருளால் அவன்சென்று சேர்தண்திருப்புலியூர் *
திருவருட்கமு கொண்பழத்தது மெல்லியல்செவ்விதழே. 6

| | |
|---|---|
| செழு நீர் நிறம் கண்ணபிரான் திருஅருள் | கடல்வண்ணனன கண்ணபிரானுடைய திருவருளிலே |
| வைகலும் மூழ்கி | நிரந்தரமாக அவகாஹித்து |
| திருஅருள்களும் சேர்ந்தமைக்கு | (அவனது) ஸகலவித அநுக்ரஹங்களையும் பெற்றமைக்கு |
| அடையாளம் திருந்த உள | அடையாளங்கள் மறைக்க வொண்ணாதபடியுள்ளன. |
| (அவற்றுள் முக்கியமான அடையாளமொன்று கேளீர்;) | |
| திருஅருள் அருளால் | தன்னுடைய திருவருளை அருளுகைக்காக |
| அவன் சென்று சேர் தண் திருப்புலியூர் | அப்பெருமான் வந்துறையுமிடமான குளிர்ந்த திருப்புலியூரில் |
| திரு அருள் கமுகு ஒண் பழுத்தது | அவனதருளால் வளரும் கமுகினுடைய அழகிய பழம் போன்றுள்ளது (எதுவென்னில்) |
| மெல்இயல்செம் இதழ் | இத்தலைவியின் சிவந்த அதரம். |

* * *—இப்பெண்பிள்ளையின் அதரம் இதற்கு முன்பிருந்தபடியும் இப்போதிருக்கிறபடியும் காணமாட்டீர்களோ? அதரத்தில் பழுப்புக்கு அடியறியீர்களோ? திருப்புலியூர்ச் சோலைகளில் வளரும் கமுகம்பழத்தின் பழுப்புப்போலே யிராநின்றபடி பாரீர்; அவ்வூர்ப் பெருமான் தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌலப்யாதிகளைக் காட்டி இவளை யீடுபடுத்திக்கொண்டானென்பதற்கும், இவளுக்கு அவனோடு கலவி ப்ராப்தமாயிற்றென்பதற்கும் அடையாளம் ஒன்றிரண்டல்லவே; நீங்களே நன்கு ஆராய்ந்து பார்க்கலாமே யென்கிறாள் தோழி. வைகலும் திருவருள் மூழ்கி=அப்பெருமானுடைய திருவருட்கடலிலே இவள் அவகாஹிக்கப்பெற்றது இன்றுநேற்று என்னலாயிருந்ததோ? நெடுநாளாகவேயன்றோ 'இவளுக்கு இத்தொடர்பு நேர்ந்துவருவது. அவனுமிவளைத் தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌலப்யங்களைக் காட்டியன்றோ அகப்படுத்திக்கொண்டது. அவனுடைய விஷயீகாரம் இவள்பக்கலிலே ஒருமடை செய்திருக்கைக்கு அடையாளம் செவ்வனேயுள; இது நீ எப்படியறிந்தாயென்று கேட்கிறாயோ? சொல்லுகிறேன் கேளாய்; [மெல்லியல்செவ்விதழ் கமுகொண்பழத்தது] மெல்லியலாளான இப்பெண் பிள்ளையினுடைய அதரம் அழகிய கமுகம் பழம்போலேயிராநின்றது; இதுகொண்டு ஐயமற அறியலாயிராநின்றதில்லையோ வென்றாளாயிற்று.

திருவருட்கமுகு என்றவிடத்து ஈடு:—"திருவருட்கமுகென்று சிலவுண்டு; அதாவது நீராலே வளருகையன்றிக்கே பெரிய பிராட்டியாரும் ஸர்வேச்வரனும் கடாக்ஷிக்க, அத்தால் வளருவன சில." ... ... ... ... 6

3541 மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின் *
மல்லிலைமடல்வாழை யீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து *
புல்லிலைத்தெங்கினூடு காலுலவுந்தண்திருப்புலியூர் *
மல்லலஞ்செல்வக்கண்ணன் தாளடைந்தாள் இம்மடவரலே. 7

| | |
|---|---|
| மெல்இலை செல்வம் வண்கொடி புல்க | மெல்லிய இலைத்தழைப்பையும் அழகையுமுடைய வெற்றிலைக்கொடி சூழ்ந்தணைக்க |
| வீங்கு இள தாள் கமுகின் | அத்தாலே முதிர்ந்து இளகிப் பதித்த அடியுரத்தையுடைய கமுகினருகேயுள்ள |
| மல் இலை மடல் வாழை | செறிந்த இலைகளையும் மடல்களையுமுடைய வாழைகளினுடைய |
| ஈன்கனிசூழ்ந்து | பழக்குலைகள் சூழ்ந்திருக்கப் பெற்றதனால் |
| மணம் கமழ்ந்து | பரிமளம் விஞ்சி |

| | | | |
|---|---|---|---|
| புல்இலை தெங்கினூடு | செறிந்த ஓலைகளையுடைய தென்னை மரங்களின் நடுவே | மல்லல்அம்செல்வம்கண்ணன்தாள் | ப்ரணயித்வமாகிற பெருஞ்செல்வத்தையுடையனானஎம்பெருமானது திருவடிகளை |
| கால் உலவும் | தென்றற்காற்று உலாவும்படியான | இ மடவரல் அடைந்தாள் | இத்தலைவி அடைந்தாள் போலும். |
| தண்திருப்புலியூர் | குளிர்ந்த திருப்புலியூரில் | | |

* * *—திருப்புலியூரிலுள்ள அஃறிணைப் பொருள்களுங்கூட ஒன்றோடொன்று கலந்து பரிமாறி வாழாநிற்கு மியல்வைக்கண்டு இத்தலைவியும் அத்திருப்பதி யெம்பெருமானோடே கலந்துவாழப்பெற்றாளென்கிறாள் தோழி. கமுகமரத்திலே வெற்றிலைக் கொடி படர்ந்திருக்கையாகிற சேர்த்தி முதலடியிலே கூறப்பட்டது. ஸ்ரீகுணரத்நகோசத்தில் (3) *அநுகலதநுகாண்டாலிங்கநேத்யாதிச்லோகத்தில் ஸ்ரீரங்கநாதனைக் கற்பகத்தருவாகவும், ஸ்ரீரங்கநாச்சியாரைக் கற்பகக் கொடியாகவும் உருவகப்படுத்திக் கூறியிருப்பது இங்கே நினைக்கத்தக்கது.

இதற்குமேல், தென்றலானது வாழைத்தோப்பிலே புகுந்து புறப்பட்டுத் தென்னந்தோப்பிலே வீசாநின்றதென்று சொல்லுகிறவிதனால் இதுவுமொரு விலக்ஷண ஸம்ச்லேஷமென்று காட்டினபடி. ஆக இப்படிப்பட்ட வாய்ப்பு அமைந்த தலத்தில் இவளும் தானுகந்த விஷயத்தை அணையப்பெற்றது வியப்பென்றோ, ப்ராப்தமேயென்றாளாயிற்று. .... ... ... .... ... 7

3542 மடவரலன்னைமீர்கட்குஎன்சொல்லிச் சொல்லுகேன் * மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர் வேள்வியுள்நெய்யழல் வான்புகைபோய் *
திடவிசும்பிலமரர்நாட்டை மறைக்குந் தண்திருப்புலியூர் *
படவரவணையான்றன் நாமமல்லால் பரவாளிவளே. 8

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர்கட்கு மடவரல் என் சொல்லி சொல்லுகேன் | தாய்மாரான உங்களுக்கு இவளது நலத்தைப்பற்றி என்ன பாசுரத்தைச் சொல்லிச் சொல்லுவேன்; | போய் | கிளம்பிச்சென்று |
| மல்லை செல்வம் வடமொழி மறைவாணர் | மஹாஸம்பந்நர்களான ஸம்ஸ்க்ருத வேதாத்யயன பரர்களினுடைய | திடம் விசும்பில் அமர் நாட்டை மறைக்கும் | திடமான ஆகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும்படியான |
| வேள்வியுள் | யாகங்களிலே | தண்திருப்புலியூர் | குளிர்ந்த திருப்புலியூரிலே |
| நெய் அழல் வான் புகை | நெய்யிடப்பெற்ற அக்னியினுடைய பெரிய புகையானது | படம் அரவு அணையான் தன் நாமம் அல்லால் | படமெடுத்த அரவாகிற சயனத்திலே சயனித்தவனுடைய திருநாம மல்லது (வேறொன்றையும்) |
| | | இவள் பரவாள் | இத்தலைவி சொல்லுகின்றிலள். |

* * *—திருப்புலியூரின் வைதிகஸம்ருத்தியையுங்கண்டு இத்தலைவி அவ்வூர்த் தலைவன் பக்கலிலேயீடுபாடு கொண்டாளென்கிறாள் தோழி. தாய்மார் தோழியை நோக்கி "இப்பெண்பிள்ளையை நாங்கள் உன்கையிலே காட்டிக்கொடுத்திருக்க, இவள் அதிப்ரவ்ருத்தி பண்ணும்படி நீ எங்ஙனே விட்டிருந்தாய்? என்று கேட்க, அதற்குத் தோழி உத்தரங் கூறுகின்றாள் போலும்—அன்னைமீர்கட்கு என் சொல்லிச் சொல்லுகேன்? = இவள் எனக்கு விதேயை என்று சொல்லுவேனோ? இவளுடைய அதிப்ரவ்ருத்திக்கு நானும் கூட்டாயிருந்தேனென்று சொல்லுவேனோ? இவள் என்னைக் கடந்து போனாளென்று சொல்லுவேனோ? என்ன பாசுரமிட்டுச் சொல்லுவேன்? எனக்கொன்றும் தெரிகிறதில்லையேயென்று கையைப் பிசைகிறாள் தோழி.

மல்லைச்செல்வவடமொழி மறைவாணர் = தமிழ்வேதத்திலே ஊன்றியிருக்குமிவள் வடமொழிவேதம வல்லார் வாழுமிடத்திலே ப்ரவணையானாள். தமிழ்வேதத்திற்கு நோக்கு அர்ச்சாவதார கைங்கரியம்; வடமொழி வேதத்திற்கு நோக்கு தேவதாந்தர்யாமி ஸமாராதனம், அதாவது யஜ்ஞயாகாதிகள். அவ்வடமொழி வேதம் வல்லவர்கள் நெருப்பிலே நெய்யைக்கொட்டி ஹோமங்கள்பண்ண, அதினின்று கிளம்பின பவித்திரமான புகையானது விண்ணுலகமளவும் வளர்ந்து அங்குள்ள விமானசாரிகளின் கண்ணை மறைக்கின்றதாம்: இவ்வதிசயோக்திகளினால் யஜ்ஞயாகங்களின் சிறப்பு தெரிவிக்கப்

பட்டதாகும். இப்படிச் சிறப்பாக வைதிகக்ரியைகள் நடைபெறுமிடமான திருப்புலியூரிலே திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய பெருமானது திருநாமமல்லது வேறொன்று சொல்லவறியாதவிவள் அப்பெருமானையே மணவாளனாகக் கொண்டாளென்னுமிடத்து ஐயமுண்டோ! ... .... ... ... 8

3543 பரவாளிவள்நின்றிராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான் *
விரவாரிசைமறைவேதியரொலி வேலையினின்றொலிப்ப *
கரவார்தடந்தோறும் தாமரைக்கயம் தீவிகைநின்றலரும் *
புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. 9

| | | | |
|---|---|---|---|
| பனிநீர் நிறம் கண்ணபிரான் | குளிர் நீர் நிறத்தனான, கண்ணபிரானுடைய, | தாமரை கயம் | தாமரைத் திரள்கள் |
| விரவு ஆர் இசை மறை வேதியர் ஒலி | கலந்து நிரம்பின இசையையுடைய வேதங்களை வைதிகர் சொல்லுவதாலுண்டான ஒலியானது | தீவிகை நின்று அலறும் | நிலைவிளக்குப்போலே அலரா நிற்குமிடமாய் |
| வேலையின் நின்று ஒலிப்ப | கடல்போல் முழங்க, | புரவு ஆர் கழனிகள் சூழ் | ஸாரம் மிக்க கழனிகளாலே சூழப்பட்டதான |
| கரவு ஆர் தடம் தொறும் | முதலைகள் மிக்கிருந்துள்ள பொய்கைகள் தோறும் | திருப்புலியூர் | திருப்புலியூரினுடைய |
| | | புகழ் அன்றி | புகழொழிய |
| | | இவள் இராப் பகல் நின்று மற்று பரவாள் | இத்தலைவி இரவும் பகலும் வேறொன்றைச் சொல்லுகின்றிலள். |

* * *—பாட்டினடியிலுள்ள பரவாளிவள் என்பதற்கு, பாட்டின் முடிவிலுள்ள திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே என்பதோடு அந்வயங்காண்க; திருப்புலியூரின் புகழை வாய்விட்டுச் சொல்லுவதுதவிர வேறொன்றுமறியாளித்தலைவி — என்கிறாள் தோழி. திருப்புலியூரின் புகழைப் பேசுவதாவது, அத்தலத்திலுறையும் பெருமானது வடிவழகைப் பேசுவதும், அங்குள்ள பாகவதர்களின் வேதகோஷம் முதலியவற்றைப் பேசுகையும், ஊரின் நீர்வள நிலவளங்களைப் பேசுவதுமேயாதலால் இவை மூன்றையும் பேசுகின்றாளென்பது முறையே மூன்றடிகளாலும் தெரிவிக்கப்பட்டது.

பனிநீர்நிறக்கண்ணபிரானென்பதனால் திருப்புலியூர்ப்பெருமானுடைய வடிவழகும் சீல்குணமும் சொல்லிற்று. வைதிகர்களின் வேதகோஷம் கடல்போல் முழங்கும் பெருமை இரண்டாமடியிற் சொல்லிற்று. முதலைகள் மிக்க பொய்கைகள்தோறும் தாமரைகள் நிலை விளக்கெரியுமாபோலே மலராநிற்குமழகு மூன்றாமடியிலே சொல்லிற்று. ஆக இவையே இவளுக்கு வாய்வெருவுதலாயிருத்தலால் அத்தலத்தெம்பெருமானோட்டைக்கலவி இவளுக்கு நேர்ந்திருக்கவேணுமென்றதாயிற்று. ... 9

3544 அன்றிமற்றோருபாயமேன்? இவளந்தண்டுழாய்கமழ்தல் *
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி *
தென்திசைத்திலதம்புரை குட்டநாட்டுத் திருப்புலியூர் *
நின்றமாயப்பிரான்திருவருளாம் இவள்நேர்பட்டதே. 10

| | | | |
|---|---|---|---|
| இவள் அம் தண் துழாய் கமழ்தல் | இத்தலைவி அழகிய குளிர்ந்த திருத்துழாய்ப் பரிமளம் கமழப்பெற்றிருப்பதற்கு | தென் திசை திலதம் புரை | தென்திசைக்குத் திலகம்போன்றுள்ளதான |
| அன்றி மற்று ஓர் உபாயம் என் | இப்போது நான் சொல்லப்போகிற காரணமொழிய வேறு என்ன காரணமிருக்கக்கூடும்? (அஃது என்னவென்றால்,) | குட்டநாடு திருப்புலியூர் | திருப்புலியூரிலே |
| | | நின்ற | எழுந்தருளியுள்ள |
| குன்றம் மாமணி மாடம் மாளிகை கோலம் குழாங்கள் மல்கி | குன்றம்போல் சிறந்த மணிமாடமாளிகைகளின் அழகியதிரள்கள் நெருங்கப்பெற்று | மாயன் பிரான் | மாயப் பெருமானுடைய |
| | | திரு அருள் இவள் நேர் பட்டது ஆம் | திருவருளையே இத்தலைவி பெற்றிருத்தல் வேண்டும். |

* * *—இத்தலைவி திருப்புலியூர்ப் பெருமானுடைய கலவியைப் பெற்றுளென்னுமிடத்திற்கு ஒருவிதமான அந்யதாஸித்தியும் சொல்லமுடியாத நல்லடையாளமுண்டென்று மூதலிக்கிறுள் தோழி. இவள்அந்தண்டுழாய்கமழ்தல் அன்றிமற்றோருபாயமேன்? =இவளுடம்பிலே திருத்துழாய்ப்பரிமளம் கமகமவென்று கமழாநின்றபடியைக் கண்டீர்களில்லையோ? என்னுடம்பிலாவது உங்களுடம்பிலாவது திருத்துழாய் நாறுகின்றதோ? எம்பெருமானுடைய திருமேனியில் அணைந்தாலல்லது திருத்துழாய் கமழ ப்ரஸக்தியுண்டோ? "ராஜபுத்ரனை யணையாதார்க்குக் கோயிற்சாந்து நாறுகைக்கு விரகுண்டோ?" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

இவளுடம்பில் திருத்துழாய் கமழ்வதனுல் நிச்சயிக்கப்படுமது என்னென்ன; மேல் மூன்றடிகளாலும் அது சொல்லப்படுகிறது. மலைபோலே அசைக்கமுடியாத மாடங்களும் மாளிகைகளும் திரள் திரளாக மிக்கு, தென் திசைக்குத் திலகம்போல் விளங்காநின்ற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்ற மாயப்பிரானுடைய திருவருளுக்கே இவள் இலக்காயினளென்பது நிச்சயிக்கத் தட்டுண்டோ? இது நீங்களும் இசையத்தக்க நல்லடையாளமன்றோ என்று தோழி சொல்லித் தலைக்கட்டிளைாயிற்று.

ஆக இந்த அந்யாபதேசப் பாசுரங்களினுல் ஆழ்வாருடைய அநந்யார்ஹத்வம் திடப்படுத்தப்பட்டதாயிற்று. ... ... .... ... 10

3545 நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்றன்னடிமை *
நேர்ப்பட்டதொண்டர் தொண்டர் தொண்டர்தொண்டன்சடகோபன் சொல் *
நேர்பட்டதமிழ்மாலை ஆயிரத்துள்ளிவைபத்தும்
நேர்பட்டாரவர் * நேர்பட்டார் நெடுமாற்கடிமைசெய்யவே. 11

| | | | |
|---|---|---|---|
| நிறை மூஉலகுக்கும் நேர்ப்பட்ட நாயகன் தன் | உலகங்களெல்லாவற்றுக்கும் வாய்த்த ஸ்வாமியானவனுடைய | சொல்நேர்பட்ட | சொல்வாய்ப்பையுடைய |
| அடிமை | கைங்கரியத்திற்கு | தமிழ் மாலை | தமிழ் மாலையான |
| நேர்பட்ட | தகுதியையுடைய | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் | தாஸ தாஸ தாஸாநு தாஸரான ஆழ்வாருடைய | இவை பத்தும் நேர் பட்டார் அவர் | இப்பதிகத்தைப் பயிலப்பெற்றவர்கள் |
| | | நெடுமாற்கு அடிமைசெய்ய நேர்பட்டார் | ஸர்வேச்வரனுக்கு அடிமை செய்ய வாய்த்தவராவர். |

* * *—இப்பதிகம் கற்றவர்கள் இவ்வாத்மாவுக்குச் சிறந்த புருஷார்த்தமான பகவத் கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றூர். முன்னிரண்டடிகளில் ஆழ்வார்தம் பெருமை சொல்லுகிறது. அடுத்தபதிகம் *நெடுமாற்கடிமை; அதில் பாகவத கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்பது அறுதியிடப்படுவதால் அப்பெருவெள்ளம் இப்பாட்டிலேயே பொசிந்துகாட்டுகிறது தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் என்று.

ஆக, எம்பெருமானுடைய வடிவழகு முதலான திருக்குணங்களையனுபவித்து அதனுலுண்டான மகிழ்ச்சியினுலே பகவச்சேஷத்வ காஷ்டையில் நின்ற ஆழ்வார், சொல்வாய்ப்பை யுடைத்தாம்படி யருளிச்செய்த ஆயிரத்துள் இப்பத்தையும் ஓதவல்லவர்கள் தொண்டர்பால் வியாமோஹமே வடிவெடுத்தவனை எம்பெருமானுக்கு அடிமைசெய்ய வாய்த்தவர்களாவர் என்று பயனுரைத்தாராயிற்று. ... 11

எட்டாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—நெடுமாற்கடிமை

உரையவதாரிகை,—கீழ்த்திருவாய்மொழியில் அநந்யார்ஹசேஷத்வம் அறுதியிடப்பட்டதன்றோ; இந்த ப்ரஸங்கத்திலே பாகவத சேஷத்வம் வடிக்கட்டின வேஷமாகச் சொல்லப்படவேண்டியதுண்டே; அது சொல்லுகிறது இத்திருவாய்மொழியில். கீழ்ப்பதிகத்தின் முடிவு பாட்டில் *தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்* என்றாரே; அது தன்னை விசதமாக்குகிறது இங்கு.

ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால் அவ்வன்பு அளவற்றதாயிருந்தால் அவ்வன்பு அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச்செல்லுமென்பதை அனைவரும் தம்தம அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவதபக்தியென்பது பகவத்பக்தியின் எல்லை நிலமாகவுண்டாமது. பகவத்பக்தியின் உறைப்பையே பாகவதபக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக்கொள்வதும் தலைமீது அணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளியாகின்றது, அதுபோலவே இங்கும் "அவனடியாரடியே கூடுமிதுவல்லால்" இத்யாதிகளாலே பாகவதசேஷத்வாதிசயத்தைப் பேசுவதெல்லாம் பகவச் சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும்.

திருமந்திரத்தில், அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவச்சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவச் சேஷத்வத்தின் எல்லைநிலமான பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கப்படவேணுமென்பது சாஸ்த்ரார்த்தம். திருமந்திரத்திற்கு முக்யமான பொருள் பாகவத சேஷத்வமே யென்பதை *மாறன்பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த மங்கையர்கோன் தமது திருமொழியில் *மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங்கற்று நான்—உற்றது முன்னடியார்க்கடிமை* என்ற பாசுரத்தினால் தெளிய வைத்தார்.

கீழ் மூன்றாம்பத்தில் ஏழாவது பதிகமான *பயிலுஞ்சுடரொளி யென்னுந்திருவாய்மொழியிலும் இவ்வர்த்தம் வெளியிடப்பட்டுள்ளது; அதிற்காட்டில் இத்திருவாய்மொழிக்கு வாசி என்னென்னில், ஆசார்யஹ்ருதயத்தில் (211), *மூன்றில் சுருக்கிய வைந்தையும்* என்று தொடங்கியுள்ள சூர்ணையில் *பயிலுஞ்சுடரொளி ஸ்வஸ்வரூப ப்ரதிபாதநபரமென்றும், *நெடுமாற்கடிமை புருஷார்த்த ஸ்வரூபப்ரதிபாதந பரமென்றும் வகையிட்டுக் காட்டப்பட்டது. அங்கு வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—"பகவச்சேஷத்வத்திலும் தத்காஷ்டையான பாகவத சேஷத்வமே ஆத்மாவுக்கு உத்தேச்யமென்று ப்ரதிபாதித்த *பயிலுஞ்சுடரொளியும்.........பாகவத கைங்கர்ய பர்யந்தமாக வேணுமென்று மநோரதித்த *நெடுமாற்கடிமையும்" என்றருளிச்செய்திருப்பது காண்க. இதனால், பாகவத சேஷத்வம் ஆத்மஸ்வரூபம் என்பதிலே *பயிலுஞ் சுடரொளிக்கு நோக்கு; பாகவத கைங்கர்யமே புருஷார்த்தம் என்பதிலே நோக்கு இத்திருவாய்மொழிக்கு என்றதாயிற்று.

இத்திருவாய்மொழியின் ஈட்டவதாரிகையில் ஓர் ஐதிஹ்யமுள்ளது; அதாவது —"அம்முணியாழ்வான் போசளராஜ்யத்தில் நின்றும் வந்தநாளிலே பட்டர் கண்டருளி 'நீ ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போரவடிமைசெய்து போந்தாயென்று கேட்டோம்; உன் ப்ரக்ருதிக்குச்சேர *நெடுமாற்கடிமையைக் கேள்' என்றருளிச் செய்தாராம்." என்று. *

3546 நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து *
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்த சதிர்நினைந்தால் *
கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால் *
விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினுமே. 1

| | | | |
|---|---|---|---|
| நெடு மாற்கு | ஸர்வேச்வரனுக்கு | வியல் மூ உலகு பெறினும் | விஸ்தாரமான மூவுலகையும் பேறாகப் பெற நேர்ந்தாலுங் கூட (அதை உபேக்ஷித்து) |
| அடிமை செய்வேன் போல் | அடிமை செய்பவன் போல இருந்து | அவன் அடியார் அடியே கூடும் இது அல்லால் | பாகவதர்களின் திருவடிகளையே அடைவது தவிர |
| அவனை கருத | அப்பெருமானை நினைத்த அளவிலே, | கொடு மா வினையேன் | பெரும்பாவியான நான் |
| தீ கதிகள் முற்றும் | (என்னிடத்திலிருந்த) தீவினைகளெல்லாம் | விடும் ஆறு என்பது என் | (அந்த பாகவத சேஷத்வத்தை) விடுவதென்று ஒன்று உண்டோ? |
| வஞ்சித்து | வஞ்சனை செய்து [என்னோடு சொல்லாமலே] | அந்தோ | இதை நான் சொல்லவும் வேணுமோ? |
| தடுமாற்று அற்ற | நிச்சயமாக | | |
| தவிர்ந்த சதிர் நினைந்தால் | என்னைவிட்டு நீங்கிப் போன படியை ஆராய்ந்து பார்த்தால் | | |

* * *—பாகவத கைங்கர்யமாகிற பெருஞ்செல்வம் கிடைக்கப்பெற்றால் மூவுலகாளுஞ் செல்வமும் இத்தோடொவ்வாதென்று இதன் பரமபோக்யதையைப் பேசுகிறார். நெடுமாற்கு அடிமைசெய்வேன்போல் அவனைக்கருத—அடியார் பக்கலில் வ்யாமோஹமே வடிவெடுத்த எம்பெருமான் திறத்தில் உண்மையாக வடிமைசெய்ய ஊற்றமில்லையாகிலும் கபடபாவனை மாத்ரமேகொண்டு அடிமை செய்வதாகக் கருதின மாத்திரத்திலே, தடுமாற்றற்ற தீக்கதிகள் முற்றும் வஞ்சித்துத்தவிர்ந்த சதிர்நினைந்தால்—பாவங்களெல்லாம் நானறியாதபடி ஒரு நொடிப்பொழுதில் உருமாய்ந்துபோனபடியை ஆராய்ந்து பார்க்கில்; அவனடியாரடியே கூடுமிது—எம்பெருமானைவிட்டு எம்பெருமானடியார்தம் அடிகளையே கூடக்கடவது. இதன் கருத்து யாதெனில்; பகவானுக்கு அடிமைப்படுவதன்பயனே இதுவானால் பாகவதர்களுக்கு அடிமைப்படுவதன் பயன் இதனில் மிகச்சிறந்திருக்குமன்றோ வென்று கொண்டு பாகவத சேஷத்வத்தில் நிற்கையே உறுவதாம் என்றவாறு. தடுமாற்றற்ற தீக்கதிகள் என்றே அந்வயித்து-நமக்கொருகாலும் சலனமில்லையென்று கொண்டு ஸ்தாவரப்ரதிஷ்டை பாவித்திருந்த அவித்யாதி தோஷங்கள் என்னவுமாம். வஞ்சித்து என்ற வினையெச்சத்தை முதலடியிலும் அந்வயிக்கலாம், இரண்டாமடியிலும் அந்வயிக்கலாம். 'அவனை வஞ்சித்துக் கருத' என்றாவது, 'தீக்கதிகள் முற்றும் வஞ்சித்துத் தவிர்ந்த' என்றாவது அந்வயிக்கலாம். தவிர்ந்த என்பதை 'தவிர்ந்தன' என்னும் பொருளதான வினைமுற்றாகவும் கொள்ளலாம்; 'தவிர்ந்த சதிர்' என்று சதிரிலே அந்வயிக்கவுமாம். தவிரப்பெற்ற பெருமை என்றபடி.

கோடுமாவினையேன் என்பது ஆனந்தம் தலைமண்டைகொண்டு சொல்லுகிற வார்த்தை. ஸங்கீதம் கேட்பவர்கள் ஸங்கீத ஸ்வாரஸ்யத்திலீடுபட்டவாறே 'பாவியேன்' என்று மெய்மறந்து சொல்லுவதுண்டே, அதுபோல. அன்றியே, இப்படிப்பட்ட பாகவத சேஷத்வாநுஸந்தானமிழந்திருந்த நாளைக்கு வெறுத்து, பாவியேன் என்கிறாராகவுமாம். "அவனடியாரடியே கூடுமிதுவல்லால்" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி—"தன் திருவடிகளைப் பற்றினார் திறத்திலே அவன் மிக்க வ்யாமோஹத்தைப் பண்ணுவானுனால் அவன் விரும்பினாரையன்றோ நமக்கும் விரும்பவடுப்பது; அவன் ஆச்ரிதவ்யாமுக்தனானால் அவனுக்கு ப்ரிய விஷயத்தையன்றோ பற்றவடுப்பது.

வியன்மூவுலகு பெறினும் விடுமாறென்பதென் அந்தோ='பாகவத சேஷத்வம் வேணுமா? த்ரிலோகைச்வர்யம் வேணுமா? என்று கேட்டால், த்ரிலோகைச்வர்யம் சீரியதல்லவா என்று கொண்டு அதைப்பற்றி பாகவத சேஷத்வத்தை விடுவதென்பதுண்டோ? இதுவன்றோ சீரியது. இங்கு அந்தோ! என்பது எதற்காகவென்னில்; அபதார்த்தமான த்ரிலோகைச்வர்யம் எடுத்துக்கழிக்கவும் தகாததாயிருக்க, அதையொரு பொருளாக வெடுத்துக்கழிக்கவேண்டியதாகிறதே என்கிற நிர்வேதம் காட்டுதற்காகவென்க. ... ... ... ... ... 1

3547 வியன்மூவுலகுபெறினும்போய்த் தானேதானேயானாலும் *
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ் *
சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே
பயனேயின்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே. 2

| | | | |
|---|---|---|---|
| வியல் மூ உலகு பெறினும் | விபுலத்ரிலோக ஸாம்ராஜ்யத்தைப் பெற்றாலும்; | சயமே | ஸ்வயம் ப்ரயோஜநமாக |
| போய் | அதற்கும் மேலான | அடிமை தலை நின்றார் | கைங்கர்யத்தின் மேலெல்லையிலே நிலை நின்றவர்களுடைய |
| தானே தானே ஆனாலும் | தன்னைத் தானே யநுபவிக்கையாகிற கைவல்ய மோக்ஷம் பெற்றாலும் | திரு தாள் வணங்கி | திருவடிகளைத் தொழுது |
| புயல் மேகம் போல் திரு மேனி அம்மான் | மழைகாலத்து மேகம் போன்ற திருமேனி வாய்ந்த எம்பெருமானுடைய | இம்மையே | இஹலோகத்திலேயே |
| | | யான் பெற்றது | நான் அடைந்தது |
| | | பயனே இன்பம் | புருஷார்த்தமான சுகமே; |
| புனை பூ கழல் அடி கீழ் | சாத்தின புஷ்பங்களையும் வீரக்கழலையு முடைத்தான திருவடி வாரத்திலே | பாவியேனுக்கு | பாவியான வெனக்கு |
| | | உறுமோ | (கீழ்ச்சொன்ன ஐச்வர்ய கைவல்யங்கள்) இப்பேற்றுக்கு ஒக்குமோ? |

* * *—ஐச்வர்யகைவல்யங்களிரண்டுங் கூடினாலும் நான்பெற்ற பாகவத சேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடு ஒவ்வாதென்கிறார். "வியன் மூவுலகு பெறினும், போய்த்தானே தானே யானாலும் யான்பெற்ற வின்பம் உறுமோ?" என்று அந்வயிப்பது. வியன் மூவுலகு பெறினும் விசாலமான த்ரிலோகைச்வர்யத்தையும் எனக்கொருவனுக்கே யாக்கினாலும் என்றபடி. போய்த் தானேதானே யானாலும்—ஸம்ஸார பந்த மற்றுப் போய்க் கேவலாத்மாநுபவம் பண்ணப் பெற்றாலும் என்றபடி. "போய்த் தானே யானாலும்" என்பதே போதுமாயிருக்கவும் "தானே தானே' என்று இரட்டித்துச் சொல்வதன் கருத்தாவது—இங்கு ஸம்ஸாரத்தில் வாழும்நாளில் புத்ர பௌத்ராதிகளும் தானுமாய் ஜீவிக்கையாலே தானேயான வாழ்ச்சியில்லை; திருநாட்டிலே சென்று களிக்கும் நாளிலும் *அடியார்கள் குழாங்களையுடன் கூடியிருக்குமிருப்பாகையாலே தானேயான வாழ்ச்சியில்லை; இனி கைவல்யாநுபவத்தில்தான் தானேதானேயான வாழ்ச்சியுள்ளது என்கை.

புயல்மேகம்போலென்று தொடங்கிப் பாகவதர்களை 'விசேஷிக்கிறது; கார்முகில் வண்ணனான எம்பெருமானுடைய வீரக்கழலணிந்த திருவடிகளின் கீழே ஸ்வயம் ப்ரயோஜநமாக எல்லாவடிமைகளும் செய்யுமவர்களான பரமபாகவதர்களின் திருவடிகளை வணங்கி இஹ லோகத்திலே நான் பெற்ற ஆனந்தத்திற்கு ஒப்ப தொன்றுண்டோ வென்கை. மூன்றாமடியில், சயமே என்றது ஸ்வயமே என்றபடி. ஜயமென்கிற வடசொல்லும் சயமெனத் திரிந்ததாகக் கொள்ளலாம். வெற்றியைத் தருமதான அடிமை யென்றபடி. ... ... ... ... ... 2

3548 உறுமோபாவியேனுக்கு இவ்வுலகமூன்றுமுடன்நிறைய *
சிறுமாமேனிநிமிர்த்த என்செந்தாமரைக்கண்திருக்குறளன் *
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
சிறுமாமனிசராயென்னையாண்டார் இங்கேதிரியவே. 3

| | | | |
|---|---|---|---|
| சிறு மா மனிசர் ஆய் | வடிவில் சிறுத்து அறிவில் பெருத்தவர்களாயிருந்து கொண்டு | அவன் அடியார் | பாகவதர்கள் |
| | | இங்கே திரிய | இந்நிலவுலகில் இருக்க, |
| என்னை ஆண்டார் | என்னை யீடுபடுத்திக் கொண்டவர்களான | அன்றி | அன்னவர்களுக்கு அடிமை பூண்டிருப்பது தவிர, |

| | | | |
|---|---|---|---|
| இவ்வுலகம் மூன்றும் உடன் நிறைய சிறு மா மேனி நிமிர்த்த | இம்மூவுலகங்களும் ஏககாலத்தில் இடமடையும்படி தனது சிறிய பெரிய திருமேனியை வளரச் செய்த | நறு மா விரை நாள் மலர் அடிக்கீழ் புகுதல் பாவியேனுக்கு உறுமோ | மிக்க பரிமளம் வாய்ந்த திருவடித் தாமரைகளிலே சென்று [illegible] சேர்தல் எனக்குத் தகுமோ? |
| செந்தாமரைக் கண் என் திருக்குறளன் | புண்டரீகாக்ஷனாய் எனக்கினியனான ஸ்ரீவாமனனுடைய | | |

***—கீழ்ப்பாட்டில் பாகவத சேஷத்வப்ரயுக்தமான ஆனந்தமானது ஐச்வர்ய கைவல்ய போகங்களிற் காட்டிலும் மேம்பட்டது என்றார்; ஐச்வர்ய கைவல்யங்களிற் காட்டிலும் விலக்ஷணமான பகவல்லாபமுண்டானாலும் இங்கேயிருந்து ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடிமை செய்கையோடொவ்வாது என்கிறாரிப்பாட்டில். உலகமளந்த பொன்னடிக்கு நல்லரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இங்கேயிருந்து என்னையடிமை கொண்டால் உலகமளந்தவன் திருவடிவாரத்திலே அடிமை செய்வதும் இப்புருஷார்த்தத் தோடொவ்வாது என்கிறார்.

இம்மூவுலகங்களும் ஏககாலத்திலே நிறையும்படியாகச் சிறிய திருமேனியைப் பெரிய திருமேனியாக்கி வளர்த்து உலகமுழுவதும் வியாபித்த செந்தாமரைக்கண்ணனுடைய திருவடிகளின் கீழேயிருந்து கைங்கரியம் செய்வதானது பாவியேனுக்கு உறுமோ?—உற்றதாகுமோ? உற்றதாகாது என்றவாறு. ஏனென்னில்; அவனடியார் சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய, அன்றி—அதைத்தவிர்த்து, நறுமா விரை நாண்மலரடிக்கீழ்ப்புகுதல் உறுமோ? என்னையடிமைகொண்டவர்கள் என் கண் வட்டத்திலே ஸஞ்சரியாநிற்க, அவர்களைத் தவிர்ந்து பகவானளவிலே செல்லுகை எனக்கு உறுமோ?

சிறுமாமனிசர் என்றவிடத்து பட்டருடைய இதிஹாஸம் கேண்மின்; பட்டர் சிறுபிராயத்திலே ஒருநாள், ஆழ்வான் திருவாய்மொழி அநுஸந்திக்கும்போது இப்பாட்டில் சிறுமாமனிசராய் என்றதைக்கேட்டு, "சிறுமாமனிசரென்றால் சிறியராயும் பெரியராயுமுள்ள மனிசர் என்று பொருளல்லவா? ஒன்றுக்கொன்று எதிர்த்தட்டான சிறுமை பெருமை என்கிற குணங்களிரண்டும் ஒரு பொருளிடத்து ஒன்று சேர்ந்திருக்குமோ? ஆழ்வார் சிறுமாமனிசரென்று இரண்டையும் ஒருவரிடத்தே சேர அருளிச்செய்தது பொருந்துவது எங்ஙனே? என்று திருத்தந்தையாரை வினவினர். அதற்கு ஆழ்வான் ஆலோசித்து 'பிள்ளாய்! நன்கு வினவினாய்; உனக்கு உபநயனமாகாமையால் இப்போது வேதசாஸ்திரங்களைக்கொண்டு விடை சொல்லலாகாது, ஆகிலும் ப்ரத்யக்ஷத்திற் காட்டுகிறேனுங்காண்' என்று சொல்லிச் சில பெரியோர்களைக்காட்டி, 'திருமேனி சிறுத்து ஞானம் பெருத்திருக்கிற சிறியாச்சான் அருளாளப் பெருமாளெம்பெருமானார்போல்வாரைச் சிறுமாமனிச ரென்னத் தட்டில்லையே; முதலியாண்டான் எம்பார் முதலிய பெரியோர்கள் உலகத்தாரோடொக்க அன்னபானாதிகள் கொள்வதோடு எம்பெருமான் பக்கலீடுபடுவதிற் பரமபதத்து நித்யஸூரிகளைப் போலுதலால் இப்படிப்பட்டவர்கள் சிறுமாமனிசரென்னத் தக்கவரன்றோ? இங்ஙனமே வடிவு சிறுத்து மஹிமை பெறுத்தவர்களும், மனிதரென்று பார்க்கும்போது சிறுமை தோன்றினும், பகவத்பக்தி ஞானம் அனுட்டானம் முதலிய நற்குணங்களை நோக்குமளவில் நித்யமுக்தர்களிலும் மேன்மைபெற்று விளங்குகிறவர்களுமான மஹாபுருஷர்களையே ஆழ்வார் சிறுமாமனிசரென்று குறித்தருளினர்' என்றருளிச்செய்ய, பட்டர் அதுகேட்டு தந்தை தரும் தகும் என்று இசைவுகொண்டனர். ... ... 3

3549 இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென் இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த *
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கணென்னம்மான் *
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடிவென்மனத்ததாய் *
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே. 4

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொரு காலத்திலே | புலன் கொள் வடிவு | மநோஹரமான தனது வடிவு |
| இரு மா நிலம் உண்டு உமிழ்ந்த | மிகப்பெரிய பூமியை யெல்லாம் தனது திருவயிற்றிலே வைத்து நோக்கிப் பிறகு வெளிப்படுத்தின | என் மனத்தது ஆய் | என் மனத்திலுள்ளதாகவும் |
| கோலத்த | அழகு வாய்ந்த | அங்கு ஏய் மலர்கள் | அத்தலைக்கு ஏற்ற புஷ்பங்கள் |
| செம் பவளம் வாய் | சிவந்த பவழம் போன்ற அதரத்தையுடைய | கைய ஆய் | என் கையிலுள்ளனவாகவும் பெற்று |
| செம் தாமரை கண் என் அம்மான் | புண்டரீகாக்ஷனான எம்பெருமான், | வழிபட்டு ஓட அருளில் | பாகவதர்கள் செய்யும் கைங்கரிய மார்க்கத்திலே நானும் உடன்பட்டு நடக்கும்படியாக அருளுமாகில் |
| பொங்கு ஏழ் புகழ்கள் | பொங்கிக் கிளர்கின்ற தனது திருக்குணங்களானவை | இங்கே திரிந்தேற்கு | (திருநாடு செல்ல விரும்பாதே) இந்த விபூதியிலேயே இப்படி திரிவேனான எனக்கு |
| வாய ஆய் | என் வாக்குக்கு விஷயமாகவும் | இழுக்குற்று என் | என்ன தாழ்வு ? |

* * *—பாகவத சேஷத்வத்திலே யீடுபட்டவர்கள் பகவச் சேஷத்வத்திலே நிற்கலாகாதென்று சிலர் நினைப்பதுண்டு; அதுதவறு. பகவானுடைய முகோல்லாஸத்திற்காக பாகவதர்களையுகப்பதுபோல, அந்த பாகவதர்களின் முகோல்லாஸத்திற்காகப் பகவானை யுகப்பதும் ப்ராப்தமே; எம்பெருமானை விட்டுப்போய் நம்மாழ்வார் பக்கலிலே யீடுபட்ட மதுரகவிகளும் கண்ணிநுண் சிறுத்தாம்பில் மூன்றாவது பாட்டில் "திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக்காண்பன் நான்" என்றார்; தாம் பற்றின ஆழ்வாருடைய முகோல்லாஸத்திற்காக எம்பெருமானைப் பற்றுவதும் உற்றதேயென்றார்; அங்ஙனே அவர் கூறினதற்கு இப்பாசுரமே மூலமென்க. ப்ரளயாபத்ஸகனுயும் செந்தாமரைக் கண்ணனுயுமிருக்கிற எம்பெருமான் தன் திருக்குணங்களை நம் வாயாலே புகழும்படியாகவும், தன் திவ்யமங்கள விக்ரஹத்தையே நம் நெஞ்சாலே சிந்திக்கும்படியாகவும், புஷ்பங்களைக் கையிலே கொண்டு அவன்றன்னை அர்ச்சிக்கும்படியாகவும் அருள் செய்யப் பெற்றால் அப்படி பகவானளவிலே அவகாஹித்துக்கொண்டு இங்கே திரிந்தாலும் ஒரு குறையில்லை; இதனால் பாகவத பக்திக்குக் கொத்தையாகாது என்றாராயிற்று. ஆசார்ய ஹ்ருதயத்தில் *அழுந்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்ஜலியோடே* இத்யாதி சூர்ணையில் "புலன்கொள் நித்யசத்ருவிசிந்தனம்" என்ற ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ஸ்ரீ சத்ருக்நாழ்வான் பாகவத சேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று கொண்டு ஸ்ரீ பரதாழ்வானுக்கே சேஷபூதராய் ஸ்ரீராமனது ஸௌந்தரியத்திலீடுபடாதிருக்கச் செய்தேயும் * நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந் * என்று சொல்லி, பரதாழ்வானுக்கு உகப்பென்கிற காரணத்தாலே பெருமாள்வடிவழகிலும் நெஞ்சுசென்று அவ்வழகையும் தன்னுள்ளத்தில் கொண்டிருந்தாப்போலே இவ்வாழ்வாரும் பாகவத சேஷத்வநிஷ்டையைக் கொண்டிருக்கச் செய்தேயும் தமக்கு உத்தேச்யரான அந்த பாகவதர்களுக்கு ப்ரீதிகரமென்னுங்காரணத்தினால் "புலன்கொள்வடிவென் மனத்ததாய்" என்று, பாகவத சேஷத்வநிஷ்டாவிரோதியான பகவத் விக்ரஹத்தைத் தம்முடைய நெஞ்சுக்கு விஷயமாக்கிக் கொண்டிருந்தார்—என்பது மேலெடுத்துக் காட்டிய ஆசார்யஹ்ருதய ஸூக்தி கண்டத்தின் தாற்பரியம்.

இங்கு, "புலன்கொள்வடிவு என் மனத்ததாய்" என்றதில் எம்பெருமானுடைய வடிவுக்குப் புலன்கொள் என்று இட்டிருக்கும் விசேஷணம் குறிக்கொள்ளத்தக்கது. எப்படிப்பட்ட அத்யவஸாயமுடையவர்களினுடையவும் இந்திரியங்களைக் கொள்ளை கொள்ளவல்லதன்றோ அவன் வடிவு என்று காட்டுகிறபடி. இப்படிப்பட்ட வ்யபிசாரம் மனத்திற்கு மாத்திரமேயன்று, த்ரிகரணங்களுக்குமாகச் சொல்லுகிறது பொங்கேழ் புகழ்கள் வாயவாய் இத்யாதியால். பாகவதர்களின் புகழைப் பேசவேண்டிய வாய்

கொண்டு பகவானுடைய புகழைப் பேசவும், பாகவதர்களை அர்ச்சிக்கவேண்டிய புஷ்பங்களைக் கொண்டு பகவானை அர்ச்சிக்கவும் நேர்ந்தால் இதில் என்ன சேதம்? நானுகந்த பாகவதர்களுக்கு உகப்பு என்னும் காரணத்தினாலன்றோ இவை நேருவன—என்றாராயிற்று. .... ... ... ... ... 4

3550 வழிபட்டோடவருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ் *
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத்து இன்புற்றிருந்தாலும் *
இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று *
மொழிபட்டோடும்கவியமுதம் நுகர்ச்சியுறுமோமுழுதுமே. 5

| | | | |
|---|---|---|---|
| வழிபட்டு ஓட அருள் பெற்று | நித்ய கைங்கரியம் பண்ணும் படியாக அவனது திரு வருளைப் பெற்று | முழுதும் | கீழ்ச் சொன்ன ஐச்வர்ய கைவல்யாதிகள் எல்லாம் கூடினாலும் |
| மாயன் | ஆச்சர்ய விபூதி யுக்தனான அந்த ஸர்வேச்வரனுடைய | இழிபட்டு ஓடும் உடலினில் பிறந்து | தாழ்ச்சியின் மிக எல்லையில் நிற்பதானசரீரத்திலே பிறந்து |
| கோலம்மலர்அடி கீழ் | அழகிய திருவடித் தாமரைகளின் கீழே | தன் சீர் யான் கற்று | தன்னுடைய குணங்களை நான் அப்யஸித்து |
| சுழிபட்டு ஓடும் சுடர் சோதி வெள்ளத்து | சுழித்து ஓடுகிற சுடர்ச்சோதி வெள்ள மென்னும்படியான பரம பதத்திலே | மொழி பட்டு ஓடும் கவி அமுதம் | அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதிசொல்லாய் ப்ரவஹிக்கிற கவியாகிற அம்ருதத்தை |
| இன்புற்று இருந்தாலும் | ஆனந்த வாழ்ச்சியாக இருக்கப் பெற்றாலும் | நுகர்ச்சி உறுமோ | பாகவதர்களோடு கூடியநுபவித்து ரஸிக்கைக்கு ஒக்குமோ? (ஒவ்வாது.) |

* * *—எம்பெருமானுடைய திருநாட்டிலே பேரின்பம் நுகர்ந்திருக்கப்பெற்றாலும் அத்தோடே கீழ்ச்சொன்ன ஐச்வர்யாதிகளெல்லாம் சேரக்கூடினாலும் இங்கே பாகவதர்களுக்கு உகப்பாகத் திருவாய்மொழியாடி ரஸிக்குமதோடொக்குமோ வென்கிறார். [வழிபட்டோட அருள் பெற்று இத்யாதி.] க்ஷணகாலமும் விச்சேதமில்லாமல் நித்ய கைங்கரியம் பண்ணும்படியான அவனருளைப் பெற்றுத் திருநாட்டிலே அவனது மலர்த் தாமரைப் பாதங்களின் கீழே அந்தமில் பேரின்பமெய்திருக்கப்பெற்றாலும் என்றபடி. இழிபட்டோடு முடலினிற் பிறந்து–தாழ்வுக்கு எல்லையாம்படி கைகழியப்போன சரீரத்திலே பிறந்து. திருநாட்டிலே கைங்கர்யம் பண்ணும்போது அப்ராக்ருததிவ்யதேஹம் நேருமே; அதற்கு எதிராக இங்குப் பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் நிறைந்த அழுக்குடம்போடே கூடியிருக்கப் பெற்றாலும் என்றபடி.

தன் சீர்யான்கற்று மொழிபட்டோடுங் கவியமுத நுகர்ச்சி உறுமோ?=பரமபோக்யனான அவனுடைய திருக்குணங்களை நீசனேன் நிறையொன்றுமிலேனான நான் அப்யஸித்து அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி சொற்களாகப் புறவெள்ளமிட்டு அதுவே அம்ருதமாக, அதுதன்னை அன்பர்களோடே கூடி ரஸிக்கையுண்டே, இதற்கு எந்த இன்பமும் ஈடாகாது என்றாராயிற்று. *தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்றபடி. திருவாய்மொழி பாடுகையாகிற விதுவும் பாகவத கைங்கர்யங்களிலே ஒன்றாகையாலே இவ்விஷயத்தை இத்திருவாய்மொழியிலருளிச் செய்தவிது மிகப் பொருந்தும். ... 5

3551 நுகர்ச்சியுறுமோமூவுலகின் வீடுபேறுதன்கேழில் *
புகர்ச்செழுமுகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான் *
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம் *
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே.

| | | | |
|---|---|---|---|
| தன் கேழ் இல் | தனக்கு ஒப்பின்றியே யிருப்பதாய் | எரி விழிகள் | அக்நி சக்ரம் போன்ற கண்களையுமுடையவராய் |
| புகர் | புகரை யுடைத்தாய் | நீண்ட | பருத்த வடிவு படைத்தவர்களான |
| செம் முகத்த | சீற்றத்தாலே சிவந்த முகத்தை யுடைத்தான | அசுரர் | அசுரர்களினுடைய |
| களிறு | (குவலயாபீட மென்கிற) யானையை | உயிர் எல்லாம் | பிராணன்களை யெல்லாம் |
| அட்ட | கொன்று முடித்தவனும் | தகர்த்து உண்டு | பிடித்து வாங்கி |
| பொன் ஆழி கை | அழகிய திருவாழி மோதிர மணிந்த திருக்கையை யுடையவனும் | உழலும் | இதுவே தொழிலாக ஸஞ்சரிக்கிற |
| என் அம்மான் | எனக்கு ஸ்வாமியும் | புள் | கருடனுக்கு |
| நிகர் செம் பங்கி | தங்கள் ஜாதிக்குத் தகுதியாகச் சிவந்த [செம்பட்ட] மயிர்களையும் | பாகன் | நியாமகனுமான எம்பெருமானுடைய |
| | | பெரிய தனி மா புகழ் நுகர்ச்சி உறுமோ மூ உலகின் வீடு பேறு | பெரிய ஒப்பற்ற கல்யாணகுணராசியை அநுபவிக்கையோடு ஒக்குமோ ஸர்வேச்வரத்வம். |

* * *—கீழ்பாட்டுக்கு சேஷபூதமாகவே இப்பாட்டுமருளிச் செய்யப்படுகிறது. எம்பெருமானுடைய ஒப்பில்லாத விலக்ஷணமான புகழைத் திருவாய்மொழியாலே நுகருமதுக்கு விபுவான அவன்றன்னுடைய ஆனந்தமும் ஒவ்வாதென்கிறார்.

“தன்கேழில் புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கை யென்னம்மான்” என்பதனால், கம்ஸனாலேவப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானையின் நிரஸநமும், “நிகர்ச் செம்பங்கி யெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம் தகர்த்துண்டுழலும் புட்பாகன்” என்பதனால் கொடிய வசுரர்களின் நிரஸநமும் சொல்லப்பட்டு, இப்படி விரோதி நிரஸந சீலனான எம்பெருமானுடைய திருக்குணங்களை பாகவத ப்ரீதிகரமான திருவாய்மொழி முகத்தாலே அநுபவித்து ரஸிக்கைக்கு, மூவுலகின் வீடுபேறு உறுமோ? = ஸர்வேச்வரத்வம் ஈடாகுமோ?

மூவுலகின் வீடு—மூவுலகங்களையும் காண விடுகை; அதாவது ஸ்ருஷ்டிக்கை; அதுவாகிற பேறு—ஸர்வேச்வரத்வ மென்றபடி- ஈட்டு ஸ்ரீ ஸூக்தி—“மூவலகின் வீடு பேறு—தன் ஸங்கல்பைகதேசத்தாலே ஜகத்ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களாம்படியிருக்கிற ஐச்வர்யம்.” ... ... ... ... ... 6

3552 தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தாய் உலகமூன்றும்முளைப்பித்த *
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. 7

| | | | |
|---|---|---|---|
| தனி மா புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படி ஆய் | ஒப்பில்லாத சிறந்த புகழே காலமுள்ளதனையும் வேதாந்த ப்ரஸித்தமாய் நிற்கும்படியாக | முளைப்பித்த | உண்டாக்கின |
| தான் தோன்றி | தானே (படைப்புக் கடவுளாக) ஆவிர்ப்பவித்து | தனி மா தெய்வம் | ஒப்பற்ற பரதேவதையினுடைய |
| முனி | (ஸ்ருஷ்டிக்காக) ஸங்கல்பிக்கிற | புகுதல் அன்றி | புகுகையைத் தவிர்ந்து |
| மா பிரமம் | பரப்ரஹ்மமாகிற | அவன் அடியார் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| முதல் வித்து ஆய் | பரமகாரணமாய் | நனி மா கலவி இன்பமே | மிகச் சிறந்ததான ஸம்ச்லேஷ ஸுகமே |
| உலகம் மூன்றும் | லோகங்களை யெல்லாம் | நங்கட்கு நாளும் வாய்க்க | நமக்கு எப்போதும் வாய்க்க வேணும். |

* * *—ஸ்வயம்புருஷார்த்த மாகக் கொள்ளும் பகவதநுபவம் வேண்டா; பாகவத ப்ரீதிரூபமான பகவதநுபவத்தைப் பண்ணிக்கொண்டு அந்த பாகவதர்களோடுகூடி வாழ்கையே நமக்கு நாளும் வாய்க்கவேணுமென்கிறார்.

தனிமாப்புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாய்—இங்கு தனிமாப்புகழாக நினைக்கிற புகழ் எதுவென்னில்; மேலிரண்டாமடியிற் சொல்லுகிறபடிக்குச் சேர்ந்த புகழாக வேண்டுகையாலே, ஜகத்து நாமரூபங்களழிந்து தமோபூதமான ஸமயத்திலே இவற்றை யுண்டாக்க நினைத்த மஹாகுணமே இங்குத் தனிமாப்புகழாக விவக்ஷிதம். *அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:* [ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகம்.] என்று பட்டர் அருளிச் செய்தபடியே, இற கொடிந்த பக்ஷிபோலே யிருந்த சேதந ராசிகளைக் கரணகளேபரங்களோடே சேர்த்து விநியோகங்கொள்ளத் திருவுள்ளம்பற்றின மஹாகுணத்தைக்கண்டு 'இப்படியும் ஒரு கருணையுண்டோ!' என்று இதையே வாய்வெருவும்படியாக என்றபடி. தான்தோன்றி—இன்னது செய்தருள வேணுமென்று அர்த்திப்பாருமில்லாதிருக்க, அவாப்தஸமஸ்த காமனுயிருக்கிற தானே. தன்பேருக *பஹுஸ்யாம் ப்ரஜாயேய* என்று தோன்றி. தோன்றியென்றது—ஸங்கல்பித்துக்கொண்டு என்றபடி. முனிமாப்பிரமமுதல்வித்தாய்—பிரமம் என்றது ப்ரஹ்மம் என்றபடி. முனி என்று எம்பெருமானுக்குள்ளதொரு திருநாமம். *முனியே நான்முகனே முக்கண்ணப்பா* என்பதுங்காண்க. முநி-ஸங்கல்பசீலன். மாப்பிரமம்—பரப்ரஹ்மம். முதல்வித்துஆய்—உபாதாநகாரணமாய் என்றபடி. [உலகம் மூன்றும் முளைப்பித்த தனிமாத்தெய்வம் இத்யாதி.] பஹுபவநஸங்கல்பம்பண்ணிக் கார்யவர்க்கமெல்லாம் தன் பக்கலிலே அரும்பும்படி பண்ணின ஒப்பற்ற பரதேவதையினுடைய தளிர்போன்ற திருவடிகளின்கீழே புகுதல் ப்ராப்தமாயிருந்தாலும், அன்றி, அதைத் தவிர்ந்து, அவனடியார்நனிமாக்கலவியின்பமே நங்கட்கு நாளும் வாய்க்க—பாகவதர்களோடுண்டான பரமவிலக்ஷணமான ஸம்ச்லேஷஸுகமே நாடோறும் நமக்கு வாய்க்க வேணும். ... ... ... ... ... .... 7

3553 நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்து * தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி *
நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபன்னாயிற்றின் *
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான் தமர்கள்கூட்டமே. 8

| | | | |
|---|---|---|---|
| நளிர் நீர் கடலை படைத்து | குளிர்ந்த நீரையுடைய கடலை யுண்டாக்கி | நிறை பல் நாயிற்றின் கோளும் உடைய | நிறைந்த பல ஆதித்ய தேஜஸ்ஸையு முடைத்தான |
| சமன் இலாத | ஒப்பில்லாத | மணி மலைபோல் | மாணிக்கமலை போலே |
| தன் பல தாளும் தோளும் முடிகளும் | தன்னுடைய பல திருவடிகளையும் திருத் தோள்களையும் திருமுடிகளையும் | கிடந்தான் | கண்வளர்ந்தருளின பெருமானுடைய |
| பரப்பி | பரப்பிக்கொண்டு | தமர்கள் | பக்தர்களோடுண்டான |
| நீளும் படர் பூ | நீண்டு படர்ந்த புஷ்பங்களையும் | கூட்டம் | சேர்த்தியானது |
| கற்பகம் காவும் | கற்பகச் சோலையையும் | நங்கட்கு நாளும் வாய்க்க | எமக்கு எப்போதும் உண்டாக வேணும். |

* * *—பாகவதர்களின் திரள்களைக் கண்டு கொண்டிருந்தாலே போதுமேயென்கிறார் இப்பாட்டில். "தமர்கள் கூட்டமே நாளும் வாய்க்க நங்கட்கு" என்று அந்வயிப்பது. பாகவதர் என்னுஞ் சொல்லுக்கு 'பகவானைச் சேர்ந்தவர்கள்' என்று பொருளாதலால், அப்படிப்பட்ட பகவானைச் சேர்ந்தவர்கள் என்று கேள்வியுண்டாகுமே; அதற்கு விடை கூறுகிறது நளிர்நீர்க்கடலைப் படைத்து என்று தொடங்கி. *அப ஏவ ஸஸர்ஜாதௌ* என்கிறபடியே ஏகார்ணவத்தை முதலிலே ஸ்ருஷ்டித்து அதிலே *ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்* என்று ஆயிரக்கணக்காகச் சொல்லப்பட்ட தன்னுடைய திருவடிகளையும் திருத்தோள்களையும் திருமுடிகளையும் நிஸ்ஸங்கோசமாகப் பரப்பிக்கொண்டு, ஒரு மாணிக்கமலை சாய்ந்தாற்போலே திருக்கண் வளர்ந்தருளின பெருமானிடத்து ஈடுபட்டவர்களான பாகவதர்களின் திரள் நங்கட்கு நாளும்வாய்க்க.

இரண்டாமடியில் குறிக்கப்பட்ட உபமேய வஸ்துக்களுக்குப் பொருத்தமான உபமான வஸ்துக்கள் மூன்றாமடியில் குறிக்கப்பட்டன. நீளும் படர்பூப்போன்ற தாளும், கற்பகக்காவுபோன்ற தோளும், நிறைபன்னாயிற்றின் கோள்போன்ற முடிகளும் என்றதாகக் கொள்க. பூக்களையும் கற்பகச்சோலையையும் பல ஸூர்யதேஜஸ்ஸையும் கொண்ட ஒரு மாணிக்கமலை எம்பெருமானுக்கு உவமையாகக் கொள்ளப்பட்டதிங்கு. அப்படிப்பட்ட எம்பெருமானுடைய தமர்கள் என்றது—இவ்வழகைச் சொல்லி வாய் வெருவுகின்ற பக்தர்கள் என்றபடி. ... ... ... 8

3554 தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும்சதிர்மூர்த்தி *
அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன் *
குமரன்கோலவைங்கணைவேள் தாதை கோதிலடியார்தம் *
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியற்கே. 9

| | | | |
|---|---|---|---|
| தமர்கள் கூட்டம் | பக்த வர்க்கங்களுக்கு வருகின்ற | குமரன் | நித்யயுவாவாய் |
| வல் வினையை | வலிய விரோதிகளை | கோலம் ஐங்கணை வேள் தாதை | அழகிற் சிறந்த பஞ்சபாணனான மன்மதனுக்குத் தந்தையான எம்பெருமானுடைய |
| நாசம் செய்யும் சதிர் | போக்கும்படியான திறமையுடைய | கோது இல் அடியார் தம் | கோதற்ற அடியார்க்கு |
| மூர்த்தி | ஸ்வாமியாய் | தமர்கள் தமர்கள் தமர்கள்ஆம்சதிர் | அடிமையில் முடிந்த நிலமான வாய்ப்பே |
| அமர் கொள் | போர் செய்யக் கிளர்கின்ற | தமியேற்கு வாய்க்க | துணையற்ற அடியேனுக்கு வாய்க்கவேணும். |
| ஆழி சங்கு வாள் வில் தண்டு ஆதி | பஞ்சாயுதங்கள் முதலிய | | |
| பல் படையன் | திவ்யாயுத வர்க்கத்தையுடையனாய் | | |

* * *—மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் *த்வத்தாஸதாஸகணநா சரமாவதௌ யஸ் தத்தாஸதைகரஸதா அவிரதா மமாஸ்து* என்று பாகவத சேஷத்வ காஷ்டையிலே தாம் நிற்கவேணுமென்று பாரித்தாரே, அந்தப்பாரிப்புக்கு இந்தப் பாசுரம் நிதானமாயிருக்கும். "கோதிலடியார்தம் தமர்கள் தமர்கள் தமர்களாஞ் சதிரேவாய்க்க தமியேற்கே" என்று—தமர்கள் தமர்கள் தமர்களென்று மூன்று வர்க்கமே சொல்லியிருந்தாலும் யாப்பின் நிபந்தனைக்குக் கட்டுப்பட்டுச் சொன்ன வளவேயன்றி, பர்யாப்தி பிறந்து சொன்னதன்று. சரமாவதி தாஸ்யமே விரும்பப்படுகின்றதாகக் கொள்க.

தமர்கள்கூட்ட வல்வினையை நாசஞ்செய்யும் என்பதற்கு மூன்று வகையாகப் பொருள்கூறுவர்: (1) தமர்களுடைய கூட்டத்தின் வல்வினையை நாசஞ்செய்யும். (2) தமர்களின் கூட்டமான [அபரிமிதமான] வல்வினையை நாசஞ்செய்யும். (3) தமர்கள் வல்வினை கூட்ட, அதை நாசஞ்செய்யும்; (அதாவது) வல்வினைகளை மேன்மேலும் ஆர்ஜித்துக்கொண்டிருக்க, அவற்றை நிச்சேஷமாக நாசஞ்செய்யுமென்றபடி. 'சதிர்மூர்த்தி' 'சதுமூர்த்தி' என்பன பாடபேதங்கள். சதிராவது ஸாமர்த்தியம்; அதையுடைய ஸ்வாமி. சதுமூர்த்தி—அநேக விக்ரஹ பரிக்ரஹம் செய்பவன். [அமர்கொளாழியித்யாதி.] விரோதிநிரஸனத்திற்காகச் செருக்கிளர்ச்சியையுடைய பஞ்சாயுதங்களையும் மற்றும் பலவாயுதங்களையும் [ஷோடசாயுதங்களையும்] உடையவன். குமரன்—நித்யயுவாவாயிருக்குமவனென்கை. கோலவைங்கணை வேள்தாதை—அழகுக்கு எனக்கு மேலில்லை யென்றிருக்கும் பஞ்சபாணனுடைய அழகுக்கும் உத்பத்திஸ்தானமானவன். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய, கோதிலடியார்—ப்ரயோஜநாந்தர அபேக்ஷையாகிற கோது இல்லாத அடியார்.

இப்பதிகத்தில், கீழே *சயமே அடிமை தலைநின்றார் என்றும், இப்பாட்டில் *கோதிலடியார் என்றும், மேற்பாட்டில்* நீக்கமில்லா வடியார் என்றும் மூவகைச் சொற்களால் சொல்லுகிறார்; இதற்கு நம்பிள்ளையருளிச்செய்யும்படி:—சயமேயடிமை தலைநின்றார்—பரதாழ்வான் போல்வார்; கோதிலடியார்—சத்ருக்நாழ்வான் போல்வார்; நீக்கமில்லாவடியார்—இளையபெருமாள் போல்வார் என்று. .... ... 9

3555 வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கோள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான் *
நீக்கமில்லாவடியார்தம் அடியாரடியாரடியாரெங்
கோக்கள் * அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. 10

| | |
|---|---|
| மா காயா பூ கொள் மேனி | அழகிய காயாம்பூ நிறத்தைக் கொண்ட திருமேனியையும் |
| நான்கு தோள் | நான்கு தோள்களையும் |
| பொன் ஆழி கை | அழகிய திருவாழியேந்திய கையையும் உடைய |
| என் அம்மான் | எம்பெருமானுடைய |
| நீக்கம் இல்லா | பிரிவு இல்லாத |
| அடியார் தம் | அடியார்களுக்கு |
| அடியார் அடியார் அடியார் | சரமாவதிதாஸ பூதர்கள் |
| எம் கோக்கள் | எமக்கு ஸ்வாமிகள் ; |
| அவர்க்கே | அன்னவர்களுக்கே |
| குடிகள் ஆய் செல்லும் | சேஷவ்ருத்தி பண்ணுங் குலமாய்ச் செல்லும்படியான |
| நல்ல கோட்பாடு | திடமான அத்யவஸாயமானது |
| ஊழி ஊழி ஊழி தோறு | என்ஞான்றும் |
| தமியேற்கு வாய்க்க | அடியேனுக்கு உண்டாக வேணும். |

* * *—எம்பெருமானுக்கு அடியராறுருடைய ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்திகளென்று போருகிற பரம்பரையின் எல்லையிலே அடிமைசெய்து நடக்கையாகிற கோட்பாடு என்னளவிலே நிற்காமல் என்னுடைய பரம்பரையிலும் வாய்க்கவேணு மென்கிறார். "தமியேற்கு ஊழிதோறூழியூழி வாய்க்க" என்கையாலே இப்பேறு தம்மளவிலே பர்யவஸிக்காமல் பரம்பரயா தம்மைச் சார்ந்தவர்கள் பக்கலிலும் பலிக்கவேணுமென்னும் விருப்பம் ஸித்திக்கின்றதென்க.

மாகாயாம்பூக்கோள்மேனி=*பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற காவி மலரென்றுங் காண்டோறும்—பாவியேன் மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவையெல்லாம் பிரானுருவேயென்று* (பெரிய திருவந்தாதி) என்றருளிச் செய்தவராதலால் காயாம் பூக்கொள் மேனியனை எம்பெருமானிடத்தில் அத்திருநிறத்துக்குத் தோற்று அடிமைப்பட்டவர்கள் தமக்கு உத்தேச்யரென்கிறார். அழகிய காயாம்பூப்போன்ற திருமேனியையுடையனும், நான்கு திருத்தோள்களையும் திருவாழியாழ்வானையுமுடையனை எம்பெருமானை ஒரு காலும் விட்டுப்பிரியாதே இளையபெருமாளைப் போலே ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யுமவர்களில் எல்லைநிலமாயிருக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள் ; அன்னவர்களுக்கே ஸகல சேஷவ்ருத்திகளையும் பண்ணவேணுமென்று மனோரதிக்கையாகிற புருஷார்த்தம் ஸித்திக்கவேணுமென்றாராயிற்று. ... .... ... ... ... ... 10

3556 நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்தான்நிறைந்த *
அல்லிக்கமலக்கண்ணனை அந்தண்குருகூர்ச்சடகோபன் *
சொல்லப்பட்டவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. 11

| | |
|---|---|
| நல்ல கோட்பாடு | நல்ல கட்டளைப்பாடுடைய |
| உலகங்கள் மூன்றின் உள்ளும் | மூவுலகங்களினுள்ளும் |
| தான் நிறைந்த | வியாபித்த |
| அல்லி கமலம் கண்ணனை | விகஸித்த தாமரைப் பூப் போன்ற கண்களையுடைய பெருமான் விஷயமாக |
| அம் தண் குருகூர் சடகோபன் சொல்லப் பட்ட ஆயிரத்துள் | ஆழ்வாரால் அருளிச் செய்யப் பட்ட ஆயிரத்தினுள் |
| இவையும் பத்தும் வல்லார்கள் | இவை பத்தையும் ஓதவல்லவர்கள் |
| கொண்ட பெண்டிர் மக்களே | ஸகுடும்பமாக |
| நல்ல பதத்தால் | பாகவத சேஷத்வ பர்யந்தமான சிறப்புடனே |
| மனை வாழ்வர் | க்ருஹஸ்தர்களாக வாழப் பெறுவர்கள். |

* * *—இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் இதிற்சொன்ன பாகவத சேஷத்வத்தைப்பெற்று ஸகுடும்பமாக வாழப்பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்

கட்டுகிறார். கீழ்ப்பாட்டில் எந்தக் கோட்பாடு தமக்கு வாய்க்கவேணுமென்று விரும்பினரோ அந்தக் கோட்பாடு உலகங்களுக்கெல்லாமுள்ளதாகச் சொல்லுகிறாரிங்கு. *ஆசம்ஸாயாம் பூதவச்ச) என்றார் பாணினிமுனிவர்; அதாவது, இப்படியாகவேணுமென்று ஆசம்ஸையுண்டானவளவில் அது ஆய்விட்டதாகவே சொல்லுவதுமுண்டென்கை. அந்த ரீதியில், இந்தக் கோட்பாடு உலகங்கட்கெல்லா முண்டாக வேணுமென்று ஆழ்வார் ஆசம்ஸிக்கிறாரென்று கொள்க.

அல்லிக்கமலக் கண்ணனை='ஆழ்வார் நம்மைவிட்டு நம்மடியாரடியார்களைத் தேடியோடுகிறாரே' என்று எம்பெருமான் வெறுப்படையாமல் 'நம்மிடத்திலே இவர் வைத்த அன்பு நம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகள் பக்கலிலும் பெருகப் பெற்றதே!' என்று மிகவுகந்து அல்லிக்கமலக்கண்ணனாயினன் என்று கொள்க. எம்பெருமான் இயற்கையாகவே அல்லிக்கமலக்கண்ணனாயிருந்தாலும் அது சொல்லுகிறதன்று இங்கு.

குருகூர்ச்சடகோபன் சொல்லப்பட்டவாயிரம்=வேதம் போலே தான்தோன்றியாயிருக்கை யன்றிக்கே திருவாய்மொழி ஆழ்வார் பக்கலிலே அவதரித்து ஆபிஜாத்யம் பெற்றதாயிற்று.

ஈற்றடியில், இத்திருவாய்மொழிகற்கைக்குச் சொல்லப்படுகிற பலன் ஸம்ஸார வாழ்க்கையாக இருக்கின்றதே, இது கூடுமோ? அடுத்த பதிகத்தில் *கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும் கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்றி யாதுமில்லை* என்று இகழப்படுகிற குடும்ப வாழ்ச்சியை இங்குப் பலனாக அருளிச்செய்யலாமோவென்று சங்கிக்கவேண்டா; குடும்ப வாழ்ச்சி ஸர்வாத்மநா த்யாஜ்யமன்று; கூரத்தாழ்வான், அனந்தாழ்வான் போல்வார் க்ருஹஸ்தாச்ரமவாழ்க்கையிலேயேயிருந்து பகவத் பாகவத கைங்கரியத்திற்குத் துணைவரான களத்ர புத்ராதிகளோடு வாழப்பெற்றவர்களாதலால் இங்ஙனே பயனுரைக்கத் தட்டில்லையென்க. க்ருஹஸ்தாச்ரமம் ஸர்வோபகாரக்ஷமமென்று ப்ரஸித்தம்; பகவத் பாகவத கைங்கர்யத்திற்கு இணங்காத களத்ரபுத்ராதிகள் த்யாஜ்யர்களேயன்றி, இதற்கு இணங்குமவர்கள் உபாதேயர்களே; இது தோன்றவே "நல்லபதத்தால் மனைவாழ்வர்" என்று விசேஷித்தருளிச் செய்தார்.

இவ்விடத்து ஈட்டில் ஒரு இதிஹாஸமருளிச் செய்கிறார்: எம்பெருமானார் திருவனந்தபுரயாத்திரை பெருந்திரளாக எழுந்தருளச் செய்தே திருக் கோட்டியூரிலே செல்வநம்பி திருமாளிகையிலே சென்று சேர, அப்போது புருஷர் வெளியூர் சென்றிருந்தாராம்; க்ருஹத்திலே நூறுவித்துக் கோட்டை கிடந்ததாம்; வருந்தியழைத்தாலும் வரமாட்டாத மஹா பாகவதோத்தமர்கள் தாமாக வந்தருளினார்களேயென்று குதூஹலங்கொண்ட நங்கையார் அவ்வளவு நெல்லையும் குத்தித் ததீயாராதனை நடத்திவிட, மறுநாள் புருஷர் வந்து சேர்ந்து தானியம் ஒன்று மில்லாமையைக் கண்டு செய்தி கேட்க, 'பரமபதத்திலே விளைவதாக வித்தினேன்' என்றாளாம். இப்படிப்பட்ட குடும்ப வாழ்க்கை ஆழ்வாருடைய மங்களாசாஸன பலத்தினால் அமைந்ததென்று கொள்ளக்கடவது. .... ... .... ... ... 11

எட்டாம்பத்து பத்தாந்திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

இயற்றிய

**திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்**

திருவாய்மொழி எட்டாம்பத்து முற்றிற்று.